ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீராமாநுஜன் 244, 245

Editor P. B. ANNANGARACHARYASWAMI

—:o:—

கீலக பங்குனி விசாக மலரான

# ஸ்ரீ வைஷ்ணவ ஸர்வஸ்வம்

Released by Maran's Dog ,Toronto, Canada

ஸ்ரீ காஞ்சீ

பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

எழுதியது

ரத்தினம் (கிளை) அச்சகத்தில் பதிப்பித்தது.

(இரண்டாம் பதிப்பு)

Released by Maran's Dog ,Toronto, Canada

—:o:—

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1

1969

Released by Maran's Dog ,Toronto, Canada

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## கீலக பங்குனி விசாக மலரான

# ஸ்ரீ வைஷ்ணவஸர்வஸ்வம்



## ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

### அடியேன் செய்யும் விண்ணப்பம்.

அடியேனுடைய அறுபதாண்டு நிறைவான விக்ருதிவூ பங்குனி விசாகம்



முதலாக ஆண்டுதோறும் ஏதேனுமொரு நினைவு மலர் வெளியிட்டு வருகிற முறையில் இப்போது எழுபத்தெட்டாம் பிராயப் பூர்த்தியை முன்னிட்டு இம்மலரை வெளியிட எழுகின்றேன். ஸமீப காலத்தில் நவரத்ன நவநிதி யென்னும் நூலை வெளியிட்டிருப்பது உலக மறியும். அது பலர்க்கும் மிகப் பயன்பட்டு வருவதாகப் பல பல ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகள் தெரிவித்து வருகிறார்கள். அதைவிட அதிகமாகவே பயன் படுமாறு இம்மலரை சேகரிக்கக் குதூஹலங் கொண்டிருக்கிறேன். யசோதைப் பிராட்டி கண்ணபிரானை நோக்கி *கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா* என்கிறாள்; அங்ஙனம் "கண்டறியாதன காண்கின்றோம்" என்று பலரும் மகிழ்ந்து வியந்து பேசும்படி இம்மலர் அமையவேணுமென்பது அந்தரங்கமான ஆசை. இது பலிப்பது எம்பெருமானருளாலும் அவனடியார்களினருளாலுமேயாகவேணும். அவ்வருளேயே நிச்சலும்வேண்டி நிற்கின்றேன்,

---

.... ....

## 1. நான்மறையோர் கொண்டாடும் நாள்

இஃது எழுதத் தொடங்கும் நாள் *மன்னியசீர் மார்கழியில் கேட்டை. இத் திருநன்னாள் * துன்னுபுகழ் மாமறையோன் தொண்டரடிப்பொடி யாழ்வார் பிறப்பால் நான்மறையோர் கொண்டாடும் நாள் * என்று மணவாள மாமுனிகளால் கொண்டாடப்பட்டது. இவ்வாழ்வாரருளிச் செய்த திருமாலையின் ஏற்றத்தை விளக்கும் பழமொழி யொன்று பிரசித்தமாக வுண்டு; *திருமாலை யறியாதவன் பெருமாளை யறியான் * என்று. இங்ஙனன்றிக்கே "திருமாலை யறியாதவன் திருமாலை யறியான்" என்றும் வழங்குவர் பெரியோர். இதன் பொருளும் அதுவே யாகும். திருமாலை யென்னும் திவ்வியப் பிரபந்தத்தை யறியாதவன் திருமாலாகிய எம்பெருமானை யறியான் என்றவாறு. திருவரங்கம் பெரிய கோயிலில் ரேவதி தோறும் நம்பெருமாள் ரேவதீ மண்டபத்தி லெழுந்தருளி யிருந்து அரையர் திருவாக்காலே தாளவிசையோடு கூட திருமாலையைக் கேட்டருள்வர். அப்போது நம்பெருமாள் திருமுக மண்டலத்தை நோக்கினால் அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுரமந்தஹாஸ விலாஸம் காணலாகும்.

திருமாலையைத் தொட்டுச் சிறிது ரஸாநுபவம் செய்வோம்; * பச்சைமாமலை போல் மேனி யென்று தொடங்கி * இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே! * என்று இரண்டாம் பாட்டைத் தலைக்கட்டின ஆழ்வார் உடனே * வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலு மென்று தொடங்கி * ஆதலால் பிறவி வேண்டே னரங்கமா நகருளானே * என்று பிறவியை வெறுத்துப் பேசினார். இருள்தருமா ஞாலத்துள் இனிப் பிறவி யான் வேண்டேன் * என்று நம்மாழ்வாரும், * மறு பிறவி தவிரத் திருத்தி உன்கோயில் கடைப்புகப் பெய் திருமாலிருஞ்சோலை யெந்தாய்! * என்று பெரியாழ்வாரும், * பிறவாமை யெனைப் பணி யெந்தை பிரானே * என்று திருமங்கையாழ்வாரும் இங்ஙனே பிரார்த்திக்கக் காண்கிறோம்.

இங்கு நாம் அநுபவிக்கும் தாபத்ரயக் கிலேசங்களை நினைக்கும்போது இம்மண்ணுலகிற் பிறப்பை வெறுக்க நேருவது ஸஹஜமே. ஆனால் * அபூத பூர்வம் மம பாவி கிம் வா ஸர்வம் ஸஹ்யம் மே ஸஹஜம் ஹி துக்கம் * என்று ஆளவந்தாரருளிச் செய்தபடி ப்ரக்ருதி தர்மமாக நேருகிற துக்கங்களை ஒருவாறு ஸஹித்துக்கொண்டு, நமக்கு நேர்ந்துள்ள பெரும் பேறுகளை ஒவ்வொன்றாகச் சிந்திப்போமாயின் இந்தப் பிறவிபோலே எத்தனை பிறவிகள் நேர்ந்தாலும் அவற்றுக்கு நல்வரவு கூறவேணு மென்பது நம்முடைய அவா. இந்தப் பிறவியின் சிறப்பைச் சிறிது தெரிவிக்கக் கேளீர்.

நவத்வீபவதியான இந்த நானிலத்தில் இதர த்வீபங்களில் நாம் பிறந்திருந்தால் என்ன நன்மையை யெய்த முடியும்? உத்தம க்ஷேமங்களில் ஒரு வகையான க்ஷேமத்தையும் நாம் த்வீபாந்தரங்களில் அநுபவிக்க முடியாது. கண்ணபிரானுடைய வேணுகானத்தின் பெருமையையும் இனிமையையும் பேசத்

தொடங்கின பெரியாழ்வார் [தமது திருமொழியில் மூன்றும் பத்து ஆறுந் திருமொழி தொடங்கும் போதே] * நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்கள்! இதோர் அற்புதம் கேளீர் * என்று ஜம்பூத்வீபத்தில் வஸிக்கும் நங்கைகளே! இந்த அற்புதமொன்று கேளீர் என்கிருர். திருவாய்ப்பாடியில் நிகழ்ந்த நிகழ்ச்சியைச் சொல்லும்போது, கோகுலத்திலுள்ளீர்களே! என்றே, பூதலத்திலுள்ளீர்களே! என்றே சொல்லவேண்டி யிருக்க, ஜம்பூத்வீபத்திலுள்ளவர்களே! என்று விளித்தது எதனுலே? பரம பவித்திரமான இந்த த்வீபத்தில் பிறந்தமையாலன்றே இதை யநுபவிக்கவும் கேட்கவும் பாக்கியம் பெற்றீர்கள்! என்று குறிக்கொள்விக்கிறபடி. ஜம்பூத்வீபத்திலுள்ளும் பரத கண்டத்திலே நாம் பிறவி பெற்றதுண்டே இது முதன்மையயான நன்மை. இதுதன்னிலும் க்ரிமிகீட பசுபதங்காதி ஜன்மங்களிலன்றிக்கே * மானிடப்பிறவியந்தோ! மதிக்கிலர் * என்று மங்கையர்கோன் மதிக்கும்படியான தூர்லப மாநுஷ யோநியிலே பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம் அந்த மானிடப் பிறவியிலும் ஸ்வாத்யாய ப்ரவசனங்களுக்கு உரித்தல்லாத அவைதிக யோனிகளிலே புகவிடாமல் வேத வேதாந்த வேதாங்கங்களை ஓதுவதற்கு நிலமான அந்தணர் குலத்திலே நம்மைத் தோற்றுவித்தனன் அபார கருணாநிதி.

அதுதன்னிலும் * த்ருச்யம் மித்த்யா த்ருஷ்டிகர்த்தா ச மித்த்யா தோஷோ மித்த்யா * என்னும்படி எல்லாம் பொய் என்பாருடைய திரளிலே புகவிடாமல் * பொய்யைச் சுரக்கும் பொருளைத் துறந்து இந்தப் பூதலத்தே மெய்யைப் புரக்கு மிராமானுசன் * என்று அமுதனர் அருளிச் செய்தபடியும், * யதாபூதஸ்வார்த்தா பதிந்ருபதி ஸூக்திர் விஜயதே * என்று வேதாந்த வாசிரியர் விளம்பினபடியும் ஸத்யார்த்த ப்ரகாசகரான எம்பெருமானருடைய தரிசனத்திலே நம்மைப் பிறப்பித்தனன் பரம காருணிகன். இவ்வளவுக்கும் மேலாக, கருவிலே இறத்தல், பிறந்ததும் மறைதல், சில நாட்களிருந்து சாதல், பிணிபசிகளால் வருந்தி வாணுளை வீணுளாகக் கழித்தல் முதலிய வருத்தங்களின்றிக்கே * வேதநூற் பிராயம் நூறிலே பெரும் பகுதியை ஆனந்த மயமாகச் செல்ல வைத்தனன் அருட்கடலான அமலன்.

இவை யித்தனையும் பெறுவித்ததற்கு மேலாக * மணவாளமாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளைப் போற்றுங்குடியில் பிறவிதந்த பெருமானுடைய பேருளைப் பேசத் தானுவதுண்டோ? அரிய பெரிய இப்பிறவி பெற்றும் அப்பேராசிரியருடைய பொன்மொழிகளின் பெருமையையறிந்து அவற்றிலே போதுபோக்கும் பாக்கியம் பெருதே புன்மொழிகளால் போதுபோக்குவார் திரளிலே புகாது * முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப்பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம் * என்றநுஸந்திக்கும்பாக்கியம் பெற்றிருக்கின்றேமே! இது பரமபாக்யம்.

இத்தகைய பாக்ய பரம்பரைகள் பிறவிதோறும் வாய்க்குமேல் * இமையவர் சூழவிருக்கும் பேரின்ப வெள்ளத்திருப்பு என்பது இதுவே யாகுமன்றே.

* மற்றிங்கோர் புதுத் தெய்வங் கொண்டாடுந் தொண்டர் * என்ற மங்கை மன்னன் முதுமொழிக்கு இக்காலத்தில் முக்கிய லக்ஷ்யமாக இருக்குமவர்கள் நாடோறும் துயில்விட்டெழுந்தவுடனே இங்கு நாம் வரைந்த இத்தூயமொழி மாலையைச் சிந்தனை செய்து "நமக்கு மணவாளமா முனிகளின் திருவடிகளிலும் திருமொழிகளிலும் பக்திச் செல்வமுண்டாகா விடினும் அத்வேஷ நிலையையாவது அருள்செய்யவேணும் அருளாளன்" என்று நெஞ்சார வேண்டி நிற்பது நன்று. *

## 2. "வைகுண்டவாஸேபி ந மே அபிலாஷ:"

தேவப்பெருமாள் விஷயமாக வேதாந்தவாசிரியர் பணித்த வரதராஜ பஞ்சாசத்தில் ஒரு சுலோகத்தில் "ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:" என்றுள்ளது அனைவருமறிந்தது. "தேவப் பெருமாளே! ஆணையிட்டுச் சொல்லுகிறேன், வைகுந்தத்தில் வஸிப்பதிலும் எனக்கு விருப்பமில்லை—என்பது இதன் பொருள். இங்கு வசனவ்யக்தி இப்படி யிருக்கக் கூடாது; 'வைகுண்ட யாநேபி ந மேபிலாஷ:' என்றிருக்கவேணும். 'வைகுண்டம் போவதற்கு எனக்கு ருசியில்லை' என்று சொல்லுவதன்றோ வார்த்தையின் முறை; வாஸமென்பது அவ்விடம் போனபிறகு ஆக வேண்டியதன்றோ; அதை இப்போது சொல்லவேண்டிய ப்ரஸக்தியில்லையே! என்று சிலர் சங்கிப்பதுண்டு. இங்கு ஸ்வாமியின் திருவுள்ளமென்னவென்றால், நமக்கு ஸதாசார்ய விஷயீகாரம் கனத்திருப்பதனாலே பேறு தப்பாது; எம்பெருமான் எப்படியும் ஒருநாள் கொண்டுபோவது தவிரான்; அதை நாம் விலக்க முடியாது. அப்படி அங்குச் சென்றாலும் அங்கே வஸிக்க ருசியுண்டாக மாட்டாதென்பது திண்ணம்; * அநாவ்ருத்திச் சப்தாத் * என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையும் * போயினால் பின்னை யித்திசைக் கென்றும் பிணைக் கொடுக்கிலும் போக வொட்டாரே * என்கிற அருளிச்செயலையும், முறித்துக் கொண்டு மீளவேண்டியதாகவே நேரும் என்பதாம். * மண்ணுலிது போலுநகர் இல்லையென வானவர்கள் தாம் மலர்கள் தூய் நண்ணியுறைகின்ற நகர் நந்திபுர விண்ணகரம் நண்ணு மனமே * என்ற திருமங்கை யாழ்வார் திருமொழியனால் நித்யஸூரிகள் திவ்ய தேசானுபவத்தை விடமாட்டாதே இந்நிலத்தே போருகிறார்க ளென்பதை அறியா நின்றோமிறே. ... ... ... *

## 3. சொட்டை நம்பியின் வார்த்தை

நாச்சியார் திருமொழி 11-5. * நல்லார்கள் வாழும் நளிரரங்கம் * என்றவிடத்து வியாக்கியானத்தில்—"ஆளவந்தார் மகனாரான சொட்டைநம்பியை சரம ஸமயத்திலே சிலர் வந்து 'நீ நினைந்துக் கிடக்கிறதென்?' என்று கேட்டார்களாம்; அதற்கு அவர் சொன்னது, "ஆளவந்தார் ஸ்ரீ பாதத்தின் ஸம்பந்தம் பரமபத ப்ராப்தி பண்ணிந் தந்தல்லது விடாது; அங்கே போனால் ஸ்ரீ வைகுண்டநாதன் முகம் நம்பெருமாள் திருமுகம் போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக் கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்" என்று. .... .... .... *

---

# 4. யதீந்த்ரரும் - யதீந்த்ரப்ரவணரும்

மணவாள மாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித் தருளினரென்றபடி. இதற்குரிய உபபத்திகள் பல வுண்டு. அதை முன்னம் ச்லோக ரூபேண விஜ்ஞாபித்துப் பின்னை வியாக்கியான மிட்டு விளக்குகின்றேன்.

(ச்லோ) வ்யாக்க்யாநக்ரந்ததாநாத் பரிவதநகதாகந்தவைதேசிகத்வாத்
நாநாசாஸ்த்ரார்த்தப்ருந்தப்ரசுரபணிதிபிః ப்ராஜ்ஞஹ்ருத்ரஞ்ஜகத்வாத்,
பூர்வாசார்யோக்திராகாத் சடரிபுமுநிராட்ஸூக்திஸம்வர்த்தகத்வாத்
பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதிகரணாத் திவ்யதேசாபிமாநாத்.
பணிராஜாவதாரத்வாத் ஸ்ரீரங்கஸ்ரீவிவர்த்தநாத்,
யதீந்த்ரப்ரவணஸ் ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்யக்ருத் த்ருவம்.

— இதற்கு ஸம்க்ஷேபமான வியாக்கியானம் காண்மின் —

1. வ்யாக்க்யாநக்ரந்த தாநாத். பெரும்பாலும் வியாக்கியானங்களருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானார்க்கும் மாமுனிகளுக்கு மொக்கும்; ஸ்ரீபாஷ்யம் வேதாந்த தீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னு மிவை வியாக்கியான க்ரந்தங்களே யன்றோ. மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள். வேதார்த்த ஸங்க்ரஹம் கத்யத்ரயம் - என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்தது போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி உபதேசரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களு மருளிச் செய்தது ப்ரஸித்தம்.

2. பரிவதநகதாகந்த வைதேசிகத்வாத. பரிவதநமாவது பரீவாதம்; நிந்தை யென்றபடி. அஸ்தாநே நிந்தாபரிஹாஸங்களை நிரப்பி நூல்களெழுதுவாரு முளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாஸத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரம பவித்திர ஸ்ரீஸூக்திகளையருளுந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

3. நாநா சாஸ்த்ரார்த்த ப்ருந்தப்ரசுரபணிதிபி: ப்ராஜ்ஞஹ்ருத் ரஞ்ஜகத்வாத்-தொட்ட விடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினாலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

4. பூர்வாசார்யோக்திராகாத். எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும் போதே "பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:, தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளிச் செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில் தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினார். மாமுனிகளும் * முன்னோர் மொழிந்த முறை தப்பாமல்

கேட்டு * முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்ருேம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்ருேம்* இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்யஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல். தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களைப் பூர்வாசார்ய ஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினர்.

5. சடரிபுமுநிராட்ஸூக்தி ஸம்வர்த்தகத்வாத். ஸ்வாமியின் வாழி திரு நாமத்திலே *மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே* என்று ஓதா நின்ருேம். *ஆய்ந்த பெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம் பெற-ஏய்ந்த பெருங் கீர்த்தி யிராமானுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்* என்று அக்காலத்து சிஷ்யர்கள் பணிக்கக் காணுநின் ருேம். இதுபற்றி மாமுனிகள் திறத்திலே சொல்லவேணுமோ? *சேற்றுக் கமல வயல் சூழரங்கர் தம் சீர்தழைப்ப போற்றித்தொழு நல்லந்தணர்வாழ விப்பூத லத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே* என்றவொரு பாசுரம் போதுமே.

6. பீடாதீசப்ரதிஷ்டாபநக்ருதி கரணத் = ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம் ஹாஸநாதிபதிகளை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய் தருள்வது ஸுப்ரஸித்தம், *லக்ஷ்மீநாதாக்க்ய ஸிந்தௌ சடரிபுஜலத:* இத்யாதி ச்லோக ரத்னத்தினுலும் இது ஸுவ்யக்தம். மாமுனிகளும் "திரமாக திக்கஜங்க ளிட்டருளும் பெருமாள்" என்கிறபடியே அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித் தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

7. திவ்யதேசாபிமாநாத் = (இதற்கு இரண்டு வகையாகப் பொருள்) *மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்* என்றும், ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ...... ஸ்ரீரங்கேசஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி;* என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி ஸகல திவ்ய தேசங்களிலும் அபிமானம் காட்டியருளினவர், மாமுனிகளும் * அடைவுடனே திருப் பதிகள் நடந்த வேர்வையாறவோ* என்கிறபடியே திவ்யதேசயாத்திரைகள் செய் தருளி அவற்றில் அபிமானம் காட்டியருளினபடி ஸுப்ரஸித்தம். (அதவா) திவ்ய தேசாபிமாநமாவது—திவ்ய தேச ச்ரேணியில் சேராதிருந்த ஸ்தலத்தை திவ்யதேச மாக அபிமானித்தல் ஸ்வாமி திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகமாய்* என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அத் தலத்தை திவ்யதேசமாக அபிமாநித் தருளினதும், மாமுனிகள் ராஜமன்னுர் ஸன்னிதிக்கு *தீர்ப்பாரையாமினி* என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அப்பதியை திவ்யதேசமாக அபிமானித் தருளின தும் அநுஸந்தேயம். [* வண்துவராபதிமன்னனை. *]

8. பணிராஜாவதாரத்வாத் = ஸ்வாமி சேஷாவதாரமென்பது ஸுப்ரஸித்தம். கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதத்திலும், வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்திலும் மற்றும்பல பிரபந்தங்களிலும் இது விசதம். மாமுனிகள், வரவரமுநி சதகத்திலே *துக்தோதந்வத்தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ருபம்

யஸ்ய ஸ்புடயதிதராம் யம் பணீந்த்ராவதாரம் * என்றருளிச்செய்தபடியும் மற்றும் சரித்ரப்ரஸித்தியின்படி யும்திருவனந்தாழ்வான் திருவவதாரமென்பது ஸுவ்யக்தம்.

9. ஸ்ரீரங்க ஸ்ரீவிவர்த்தநாத்=ஸ்வாமி * தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே * என்று எண்டிசையும் வாழ்த்துகிறபடியும், கோயிலொழுகு முதலானவற்றில் காண்கிற இதிஹாஸ விஸ்தாரப்படியும் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்தருளினவர் என்பது விச்வவிதிதம். மாமுனிகள் திறத்து மிங்ஙனமே யன்றோ? "அரங்கநகர்வாழ இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்றன்றோ நிச்சலும் வாழ்த்துகின்றதுலகம்.

ஆக இத்தன்மைகளாலே, யதீந்த்ரப்ரவணஸ் ஸாக்ஷாத் யதீந்த்ரோ பாஷ்யக்ருத் த்ருவம்—யதீந்த்ரப்ரவணரென்று திருநாமம் பெற்ற மணவாளமாமுனிகள் ஸாக்ஷாத் எதிராசரே யென்னத் தட்டில்லையென்றதாயிற்று. இங்ஙனே நிர்வஹிக்கக் கூடிய உபபத்திகள் மற்றும்பலவுள. அவற்றை அடியேனுடைய பிறநூல்களிற் கண்டுகொள்வது. ... .... ... .... *

---

## 5. நிகமாந்த மஹாகுருவின் நிஜமான தத்துவத்தை நீதிமன்றத் தலைவர்கள் நிலைநாட்டிய விதம்

ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ பாஷ்யகார ஸ்வாமி தேவஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கின்ற வேதாந்தாசாரியர் ஸ்வாமிக்கு நெடுநாளாகவுள்ள தென்கலைத் திருமண் காப்பை மாற்றி வடகலை நாமம் சாத்த உத்தரவு பிறப்பிக்கவேணுமென்று பல வருஷங்கள் நடந்த வழக்கில் முடிவாக ஹைகோர்ட்டுஜட்ஜ். கனம் A. அழகிரிசாமியவர்கள் அளித்த தீர்ப்பின் ஸாராம்சம்.

* * * * * *

ஸ்ரீமத் பரமஹம்ஸ. யதிராஜ ஜீயர் ஸ்வாமியின் ஆஸ்தானத்தை யலங்கரித்திருக்கின்ற ஸ்ரீமத் பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் அருளிய கட்டுரை.

* * * * * *

சென்னை உயர்நீதிமன்றம் அப்பீல்.
289 of 1962.

ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்ரீ பாஷ்யகார ஸ்வாமி தேவஸ்தானத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ வேதாந்தாசாரியர் ஸ்வாமி விக்ரஹத்திற்கு வடகலைத் திருமண் காப்பு சாத்தவேண்டுமென்று வடகலை ஈ. ராமாநுஜாசாரியர் என்பவர் வழக்குதொடுத்தார். இது சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் விசாரணை முடிவடைந்து, அதில் ஜட்ஜ்கள் சில ரஸமான குறிப்புகள் வெளியிட்டிருக்கிறார்கள். அப்பீல் ஜட்ஜ்மெண்டு பூராவும் ஆங்கிலத்திலும் தமிழிலும் அச்சிட்டு வெளியிடப்பட்டுவிட்டது. வாசகர்களுக்கு சில முக்கிய குறிப்புகளை இங்கே தருகிறோம். [என்கிற பீடிகையுடன் ஜீயர்ஸ்வாமி 1-1-1969ல் எழுதுவது.]

## High Court ஜட்ஜ்மெண்டின் ஸாரம்

"ஸ்ரீபெரும்பூதூர் பாஷ்யகார ஸ்வாமி தேவஸ்தானம் பூராவும் தென்கலையே என்பதை வாதி ஒப்புக்கொள்ளுகிறார். 25 விக்ரஹங்களில் தேசிகரொருவர் தவிர மற்றவை யாவும் தென்கலையேயென்றும் ஒப்புக்கொண்டு தேசிகனுக்குமட்டும் வடகலைத் திருமண் சாத்தவேண்டுமென்கிறார். கீழ்க் கோர்ட்டில் தேசிகனுக்கு திருமண் தனியன் தோத்திர பாடகோஷ்டி எல்லாம் வடகலை ஆசாரப்படி நடக்க வேண்டுமென்று கேட்டார். இப்பொழுது வாதியின் வக்கீல், திருமண் மாத்திரம் தீர்ப்பு செய்தால் போதுமென்று கேட்கிறார். வெகுகாலமானபடியால் எது சரியான திருமண் என்று நிர்ணயம் செய்ய முடியவில்லை. ஆனால் தேசிகனும் மணவாள மாமுனிகளும் திருமண் ஆகாரத்தைப் பற்றி ஒரு குறிப்பும் ஏற்படுத்தவில்லை. ஆனால் திருமண் காப்புகள் நெடுநாளாக வைஷ்ணவர்கள் அணிந்து வருகிறார்கள். விவாத சன்னிதியில் உடையவர் தென்கலை என்பதை யாரும் ஆக்ஷேபிக்கவில்லை. திருவேந்திரபுரத்தில் தேசிகனுக்கு வடகலைத் திருமண்; சில கோயில்களில் தென்கலை தேசிகன். இது சாஸ்திர ஆராய்ச்சி செய்து முடிவுகட்டக் கூடிய விஷயமன்று. இது அந்த அந்த கோயில் வழக்க ஒழுக்கத்தை அநுஸரித்தே தீர்ப்பு செய்வது சட்ட முறையாகும் (Usage).

தற்பொழுது ஸ்ரீபெரும்பூதூரில் வடகலையார்கள் ஒரு தனிக்கோயில் கட்டி அதில் தேசிகரை ஸ்தாபித்திருக்கிறார்கள். தங்கள் இஷ்டப்படி - பெரிய கோயிலில் நடவாதது தான் இதற்குக் காரணம். முக்யமாக ஸ்ரீ பெரும்பூதூரில் தேசிகனை முதன் முதலில் தென்கலையார்களே உடையவர் சன்னிதிக்குள் பிரதிஷ்டை செய்திருப்பதினால் இது தென்கலையார்களுக்கு தேசிகனிடத்தில் விரோதமில்லை என்பதோடு தங்கள் ஆசார்யர்களில் ஒருவராகவும் அவரை மதிக்கிறார்கள் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. இது சுமார் 400, 500 வருடங்களுக்கு முன்பேயாம். தேசிகன் தென்கலையாருக்கு ஆசாரியர் என்பதை ஒப்புக்கொள்வதோடு பலகோயில்களிலும் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அக்காலத்தில் வடகலையார்கள் எந்த தேசிகனிடத்திலும் உறவு கொண்டதாகவோ தங்கள் ஏகதேச ஆசாரியர் என்ற முறையில் புஸ்தகங்களோ, ரிகார்ட்டுகளோ, கோயில்களோ இருந்ததாக ருஜுப்படுத்தவில்லை. இப்பொழுது தேசிகனுக்கு-தென்கலை கோயிலுக்குள் தென்கலையாரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட தேசிகனுக்கு வடகலை திருமண் இட்டால் போதுமென்று வாதி வக்கீல் வாதிக்கிறார். இது கோயில் ஆசார அனுஷ்டானங்களுக்கு விரோதமாகும். சுமார் 50, 60 வருஷங்களுக்கு முன் தாதாசாரியர்கள் தங்களுக்கிருந்த பாத்யங்களை இழந்ததற்கு இம்மாதிரியான கோயிலாசாரங்களை மாற்றப்புகுந்ததே காரணம் என்று பல தீர்ப்புகளால் அறியலாகிறது. வாதிக்கு ஏதாவது கிடைத்தால் போதுமென்று சமயோசிதமாக வக்கீல் வாதம் புரிகிறார். இதை ஏற்றால் பல விபரீதங்கள் விளையும். ஆகவே கோர்ட்டுச் செலவுடன் அப்பீல் தள்ளுபடி செய்யப்பட்டது." ..... ... *

# வைதிகப்ரசம்ஸையும் வேதப்ரபாவமும்

"அஷ்டவர்ஷம் ப்ராஹ்மண முபநயீத" என்றபடி கர்ப்பாஷ்டமமாகிய ஏழாவது பிராயத்தில் உபநயனத்தைப்பண்ணி உபாகர்மமான பிறகு வேதமோதத் தொடங்கினால் ஆறேழு வருஷத்தில் க்ரமாந்தம் அத்யயனம் செய்து முடிக்கலாம். நாற்பத்துநான்கு ப்ரச்னங்கள் கொண்ட ஸப்தகாண்ட ஸம்ஹிதையும், முப்பத்தாறு ப்ரச்னங்கள் கொண்ட ப்ராஹ்மண பாகமுமாகிய எண்பது ப்ரச்னங்களை [கிருஷ்ண யஜுர் வேதத்தில்] ஓதுவதென்று வைத்துக் கொண்டிருக்கிறோம். ஸப்தகாண்டங்களுக்கு ஸம்ஹிதையை மட்டும் ஓதினால் அதைத் தரிப்பதும் சிரமம், பகவத் கைங்கர்யத்திற்கும் அது உதவாது. ஸம்ஹிதைக்குமேல் பதம் க்ரமம் ஜடை கனம் என்றிவை ஏற்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஜடையும் கனமும் ஸபாரஞ்ஜனமாகும். க்ரமந்தான் பகவத் கைங்கரியத்திற்குப் பெரும்பான்மையாக உதவுமது. க்ரமம் திடப்படுவதற்காகப் பதம் ஓத வேண்டுவது அவசியமாகிறது.

பலர் பதக்ரமங்களோதாமல் ஸம்ஹிதையோடு க்ருதக்ருத்யர்களாய் விடுவதுண்டு. அன்னவர்களைப்பற்றி விநோதமாகச் சில இதிஹாஸங்களுண்டு. அவற்றுள் ஒன்றிரண்டு தெரிவிக்கிறேனிங்கு. பதமோதாமல் ஸம்ஹிதைமட்டும் ஓதியிருந்த வொரு வைதிகர் சில வித்யார்த்திகளுக்கு ஸம்ஹிதையை ஓதுவிக்கத் தொடங்கினாராம். இரண்டாங் காண்டத்தில் ஆறுவது ப்ரச்னத்தின் உபக்ரமம் "ஸமிதோ யஜதி வஸந்தமேவர்த்தூநாம்" என்பது. இதில் 'வஸந்தம், ஏவ, ருதூநாம்' என்று பதபாடம். அவர் வெறும் ஸம்ஹிதையையே ஓதினவராதலால் "ஸமிதோ யஜதி வஸந்தமே" என்றாராம். அவருடைய பக்கத்து வீட்டில் சிறந்த கனபாடியொருவர் இருந்தாராம்; அவர் இதைக்கேட்டு அருகே வந்து "பதமோதாத பாவமே" என்றாராம். மற்றோரிதிஹாஸமும் கேண்மின்.

நான்காவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நம் நமகம் என்று ப்ரஸித்தமானது. அதில் "த்ராபே அந்தஸஸ் பதே தரித்ரந் நீலலோஹித" என்று ஓர் அநுவாகம் தொடக்கம். இதில் [தரித்ரந் நீலலோஹித] என்றவிடத்தில் (தரித்ரத்) என்று பதபாடம். பதமோதாதவர்க்கு இது தெரியாதாதலால் அவர் தரித்ரம் என்று சந்தை சொன்னார். அதைக் கேட்ட கனபாடி 'அட பதபாட தரித்ரமே" என்றாராம். இங்ஙனே பல கதைகளுண்டு. பதமோதாவிடில் பல பரிபவங்கள் நேரும். பதமோதிவிட்டால் க்ரமத்தில் அதிக ச்ரமம் ஏற்படாது. ஆனாலும் க்ரமத்தையும் ஒரு ஸம்வத்ஸரகாலமாவது குரு முகமாக அதிகரித்தேயாகவேண்டும். இதற்குமேல் வர்ணக்ரம சிக்ஷையும் ப்ராதி சாக்க்யாதி லக்ஷண சிக்ஷையும் செய்ய வேண்டியதுண்டு. 'க்ரமாந்தம் நிருடியாகச் சொல்லவல்லவர்கள்' என்று ப்ரக்க்யாதி பெற்றவர்களை இக்காலத்திலும் பெரும்பான்மையாகவே காண்கிறோம். வேத

பாஷ்யங்களில் பரிச்ரமப்படுவாருமுளர். இவை நிற்க. வேதத்தின் சிறப்பைப்பற்றி இனி விவரிப்போம்.

ஸாராஸாரங்கள் கலந்த கட்டியாயிருக்கு மிந்நிலவுலகில் அஸாரங்களையும் அல்பஸாரங்களையும் தள்ளி ஸாரங்களைக் கொள்வோமாயின் அவை பிரமாணங்களின் திரள், பிரமேயங்களின் திரள், ப்ரமாதாக்களின் திரள் என மூன்று வகுப்புகளிலடங்கும். யதார்த்தமான ஞானத்தைப் பிறப்பிக்கும் சாஸ்த்ரங்கள் ப்ரமாணமெனப்படும். அந்த சாஸ்த்ரங்களினின்று தேறுகின்ற அர்த்த விசேஷங்கள் ப்ரமேய மெனப்படும். மேற்சொன்ன அர்த்தவிசேஷங்களைக் கண்டறிந்து உபகரிக்கவல்ல மாஞானிகள் ப்ரமாதாக்களெனப்படுவர்கள். இவற்றுள் பிரமாணங்கள் அளவு கடந்தவை. திருமங்கையாழ்வார் "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து" என்றருளிச் செய்தபடியே எம்பெருமான் அத்வாரகமாகவும் ஸத்வாரகமாகவும் வெளியிட்டருளியுள்ள சாஸ்த்ரங்கள் அளவு கடந்தவை. இங்ஙனே ப்ரமாணங்கள் அளவு கடந்திருந்தாலும் * ஆம்நாய வேதாः ப்ரமாணம் * என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியின்படியும், * உளன் சுடர்மிகு சுருதியுள் * என்கிற ஆழ்வாருளிச் செயலின்படியும் வேதமே தலை சிறந்த ப்ரமாணமாகும். வேதத்தையுபஜீவித்தே மற்ற ப்ரமாணங்கள் அவதரித்தன. ஆகவே வேதம் ஸ்வதः ப்ரமாணமென்றும், மற்றவை பரதः ப்ரமாணமென்றும் கொள்ளப்படுகின்றன. பாஞ்சராத்ரமும் வேதமும் துல்யப்ரமாணமென்றும், மற்ற இதிஹாஸபுராணாதிகள் வேத விரோதம் காணாத விடங்களில் ப்ரமாணமென்றும் மேலையார்களின் கொள்கை. இதைப்பற்றி இங்கு விஸ்தரிக்கின்றிலோம். 

முக்கியமாக நான்கு விஷயங்களைக் கொண்டு வேதத்தின் சிறப்பு அறியலாகும். நித்தியமாயிருத்தல் அபௌருஷேயமாயிருத்தல், அவிச்சின்ன பரம்பரா ப்ராப்தமாயிருத்தல், அனந்தங்களாயிருத்தல். ஆக இந்நான்கு விஷயங்கள் வேதத்தின் பெருமைக்கு நிதானங்களாகையாலே இவற்றை ஈண்டு சிறிது விவரிப்போம்.

1. **வேதங்களின் நித்யத்வம்** ;—ஸ்வரூபதோ நித்யமென்றும் ப்ரவாஹதோ நித்யமென்றும் நித்ய வஸ்துக்கள் இருவகைப்படும். வேதமென்பது சப்தராசியாதலாலும், உச்சாரணத்தினாலேயே அதற்கு ஸ்வரூப ஸித்தியாதலாலும் உச்சரிக்கப்படாதபோது அது இல்லையென்று சொல்லவேண்டி வருதலால் வேதம் ஸ்வரூபதோ நித்யமாகாது. சிலர் பலர் சிலபல விடங்களில் வேதத்தை உச்சரியாமலிருந்தாலும் ஆங்காங்குப் பல பலர் அதை உச்சரித்துக்கொண்டே இருப்பர்களாதலால் வேதம் ப்ரவாஹதோ நித்தியவகுப்பிற் சேரும். இதற்குமேல் ஒரு சங்கை தோன்றும். எம்பெருமான் ஸ்ருஷ்டிகாலத்தில் ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிப்பதுபோல வேதங்களையும் ஸ்ருஷ்டிக்கையாலும், ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்கமுடியாதாகையாலும் ஒருகாலத்திலே லயமடைவதும் ஒருகாலத்திலே படைக்கப்பெறுவதுமான வேதத்தை நித்யமென்று எங்ஙனே சொல்லமுடியும்?

இதற்குக் கேண்மின். ஈச்வரன் வேதத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்பது ஒரு நாளும் கிடையாது. வேதத்தை ஓதிவரும் அதிகாரிகள் பிரளயத்தில் அழிந்து

போய்விட்டாலும் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனுமான ஸர்வேச்வரன் வேதத்தின் ஆநுபூர்விகளைத் தான் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்து * யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை * என்கிற சுருதியின் படியே முன்னிருந்த ஆநுபூர்விமாருமல் அப்படியே நான்முகனுக்கு உபதேசிக்கிருன். ஆகவே வேதசப்தராசிகளுக்கு ஆதியும் அந்தமும் இல்லை யென்னத் தட்டில்லை. ஸ்வாமி பாஷ்யகாரர் தேவதாதிகரண ஸ்ரீபாஷ்யத்திலே "ஏததேவ ச வேதஸ்ய அபௌருஷேயத்வம் நித்யத்வஞ்ச ; யத் பூர்வபூர்வோச்சாரண க்ரம ஜநித ஸம்ஸ்காரேண ததேவ க்ரமவிசேஷம் ஸ்ம்ருத்வா தேநைவ க்ரமேண உச்சார்யமாணத்வம்" என்றருளிச் செய்திருப்பது இங்கே அநுஸந்தேயம். உபாத்யாயர்கள், இரவிலே உறங்கிப் பின்மாலை கண்விழித்தெழுந்த வித்யார்த்திகளுக்கு வேதமோதுவிப்பதுபோல ஸர்வேச்வரன் நான்முகன்முதலானேர்க்கு வேத மோதுவிக்கிருனத்தனை. இதை பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவ—உத்தரசதகத்திலே "ஸம்ஸ்காரம் ப்ரதிஸஞ்சரேஷு நிததத் ஸர்க்கேஷு தத்ஸ்மாரிதம் ரூபம் நாம ச தத்த தர்ஹநிவஹே வ்யாக்ருத்ய ரங்காஸ்பத !, ஸுப்தோத்புத்த விரிஞ்ச பூர்வஜநதாம் அத்யாப்ய......." என்று சுலோகமாக்கியருளினுர்.

2. வேதங்களின் அபௌருஷேயத்வம் :—கீழே நித்யத்வம் நிரூபித்ததனுலேயே அபௌருஷேயத்வமும் நிரூபிக்கப்பட்டதென்று கொள்ளலாம். ஆனுலும் சிறிது நிரூபிப்போம். உலகில் லக்ஷக்கணக்கான வாங்மயங்கள் தோன்றியிருக்கின்றன. இதை இன்னுரியற்றினுர், இதை இன்னுரியற்றினுர் என்று ஒவ்வொரு நூலுக்கும் கர்த்தாக்கள் குறிக்கப்பட்டுள்ளார்கள். அப்படி வேதத்திற்கு ஒரு கர்த்தாவும் யாராலும் எந்நாளிலும் குறிக்கப்பட்டிருக்கவில்லை. சிறுசிறு நூல்களுக்கெல்லாம் கர்த்தாக்கள் தெரியவரும்போது அளவுகடந்த நூலாகிய வேதங்களுக்கு உண்மையாக ஒருவர் கர்த்தாவாக இருந்தால் குறிப்பிடாமலிருப்பர்களோ? வேதாந்த வாசிரியர் யதிராஜஸப்ததியின் முதல் ச்லோகத்தில் ஆசார்ய பரம்பரையில் முதல்வனுன ஸர்வேச்வரனைத் துதிக்குமிடத்தில் * ப்ரவக்தா ச்சந்தஸாம், வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ் ஸ்வயம் * என்று பணித்துள்ளார். பகவான் பாஞ்சராத்ர சாஸ்திரத்திற்கு ஸ்வயம் வக்தா வென்றும், வேதங்களுக்கு ப்ரவசன கர்த்தா வென்றும் இதில் சொல்லிற்று. இதனுல் ஸர்வேச்வரன் கூட வேதகர்த்தாவல்லன் என்பது விளங்கும்.

இவ்விஷயத்தில் சிலருடைய குதர்க்க வாதம் என்னவென்றல், எந்த சப்த ராசியும் ஒரு கர்த்தாவோ வக்தாவோ இல்லாமல் ஆவிர்ப்பவிக்க இயலாதாகையால் விஸ்தாரமான இதிஹாஸபுராணுதிகளை எழுதிவைத்த மஹர்ஷிகள் தாமே வேதங்களையும் எழுதி வைத்திருக்க வேண்டும் என்பதாக. இதற்கு ஸாரமாகக் கேண்மின். வேதங்கள் ஒரு நூறு வருஷங்களுக்கு உட்பட்ட காலத்தில் அச்சேறி வருகின்றனவேயன்றி அதற்கு முன் இவற்றை யெழுதி வைத்தவர்களுங் கூடக் கிடையாது. 'ஓலைப்படாப்ரமாணம்' என்றே இதனைப் பூருவர்கள் வழங்கியுள்ளார்கள். வேதத்திற்கு ஸ்வரம் முக்கியமானது. அந்த ஸ்வரஸன்னிவேசம்

வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது. இந்த அற்புதத்தை வேதமோதினவர்களுங்கூட அனேகமாய் அறிந்திலர் என்று சொல்லலாம்.

வேதத்தில் பல லக்ஷக்கணக்கான பதங்கள் வருகின்றன. அவற்றிற்கு அமைந்திருக்கும் ஸ்வரங்கள் நியதங்களாய் ஓரிடத்திலும் பிறழாமலும், காரண விசேஷத்தினால் பிறழ்ந்தும் பூமண்டலம் முழுவதும் ஸமரூபமாக ஓதப்பட்டு வருவதை நோக்கினால் இது ஒரு புருஷனுடைய க்ருதிக்கு விஷயமாகக் கூடியதன்று என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். ஆகாசவாணியென்று ஒன்று சொல்லுவதுண்டே, அதேபோல வேதராசிகளும் ஆகாசத்திலே தோன்றிப் பரம புருஷனால் கிரஹிக்கப் பட்டிருக்கவேணுமே யல்லது பரமபுருஷனுக்குங்கூட இந்த சப்த ஸந்தர்ப்ப ஸங்கலனம் ஸாத்யமன்று என்று அடியேன் துணிந்து கூறுவேன்.

மற்ற வேதங்கள் ஒருபுறமிருக்க; ஸாமவேதத்தின் இயல்பை நோக்குவோம். அநாதி பரம்பரை யென்பதை இதுகொண்டே அறியலாமே. உலகத்தில் ராஜாஜ்ஞையென்பது பிரபலமாகச் சொல்லப்படுகிறது. அரசர்கள் அனைவரும் ஒன்று கூடிச் சில வாசகங்களைக் கோத்து இரண்டு மூன்று பக்கமெழுதிப் பிரசுரஞ்செய்து, இதை உலகமெல்லாம் ஒருவிதமான ஸ்வரத்துடன் உச்சரித்து வரவேணுமென்று கட்டளை யிட்டால், அக்கட்டளை ஒரு சிறிய க்ராமத்திலாவது இரண்டொரு நாளாவது பரிபாலிக்கப்பட்டு வருமாவென்று பாருங்கள். த்வீபாந்தரங்களிலும் கூட வியாபித்திருக்கின்ற வேதராசிகள் உலகம் போலவே அநாதியாய் அவிச்சின்ன பரம்பரையாய் வந்து கொண்டிருக்கின்றனவென்று இந்தப் பெருமையை யாவரும் இசைந்து தீரவேணுமே. பௌருஷேயமென்று நெஞ்சாலும் நினைக்க ப்ரஸக்தியில்லை. அதனாலேயே வேதங்கள் மானிடர்க்கு இயற்கையாக நேரக்கூடிய இருள் மருள் மறப்பு வஞ்சனை முதலான எவ்வகைக் குற்றமுமற்று விளங்கநின்றன.

வேதங்கள் அனந்தங்களென்பது காடகச்ருதியிலுள்ள பரத்வாஜோபாக்யானத்தினால் விளங்கும். தேவேந்திரனருளால் முந்நூறு பிராயம் ஜீவிதம்பெற்று அந்நாட்கள் முழுதும் வேதமேயோதின பரத்வாஜ மஹர்ஷி முந்நூறு வருஷகாலம் ஓதினதெல்லாம் மூன்று மலைகளாகக் காட்டப்பட்ட வேதராசிகளில் மூன்று முஷ்டி மாத்திரமேயென்று முடிவு பெற்றுள்ளது. அந்த பிரகரணத்தில் தான் "அனந்தா வை வேதா:" என்றோதப்பட்டது.

ஆக, நித்யமாய் அபௌருஷேயமாய் அத ஏவ நிர்தோஷ கந்தமாய் அவிச்சிந்ந பரம்பராப்ராப்தமாய் அனந்தமாயிருக்கின்ற வேதத்தின் ப்ரபாவம் வாசாமகோசரமென்று தலைக்கட்டி நிற்கின்றேன். * யஸ்ய வேதச்ச வேதீச விச்சித்யேதே த்ரிபூருஷம், ஸவை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்ம பஹிஷ்க்ருத: * என்னும் வசனத்தை யுற்று நோக்கி ப்ராஹ்மணர்களாய்ப் பிறந்தவர்கள் வேதாத்யயனத்தில் விருப்பங்கொள்ள ப்ராப்தம். ... .... .... ... *

---

**நிஜாமாபாத் நகரத்தில் ப்லவங்கஞூ புரட்டாசி மாதத்தில் நடந்த க்ரது விசேஷத்தில் நடைபெற்ற வித்வத் ஸதஸ்ஸின் ஒரு பகுதி.**



## "அந்நவாந் - அந்நாதோ பவதி"

நம்முடைய வேதத்தில் ஸம்ஹிதையிலும் ப்ராஹ்மணத்திலும் ('அந்தவாந் அந்நாதோ பவதி') என்கிற வாக்யம் சேர்ந்தாப் போலவும் சிறிது பிரிந்தாப் போலவும் அத்யயநம் செய்யப்பட்டு வருகிறது. தைத்திரீய யஜுஸ் ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டம் இரண்டாம் ப்ரச்நத்தில் ("அக்நயே அந்நவதே புரோடாச மஷ்டாகபாலம் நிர்வபேத்") என்று தொடங்கியுள்ள வாக்கியம் *அந்நவாநேவ பவதி* என்று முடிவடைகிறது. உடனே * "அக்நயே அந்நாதாய புரோடாச மஷ்டாகபாலம் நிர்வபேந்" * என்று தொடங்கும் வாக்யம் "அந்நாத ஏவ பவதி" என்று முடிவடைகிறது. மூன்றுவது காண்டம் நான்காவது ப்ரச்நத்தில் "அக்நீஷோமீயாமாலபேத" என்று தொடங்கும் வாக்யம் ("அந்நவா நேவாந்நாதோ பவதீ") என்று முடிவடைகிறது. தைத்திரீயோபநிஷத்தில் ("அந்நவாந்-அந்நாதோ

பவதி'' என்று ஓதப்படுவது ஸுப்ரஸித்தம். ஆக இந்த வாக்யங்களில் அந்நவானுகக் கடவேன் என்கிற ஒரு ப்ரார்த்தனையும், அந்நாதனுகக் கடவேன்! என்கிற மற்ருெரு ப்ரார்த்தனையும், அந்நவானுகிருன் என்கிற ஒரு பலச்ருதியும் அந்நாதனுகிருனென்கிற மற்ருெரு பலச்ருதியும் காண்கிறது. இதைப் பற்றி இங்கு விமர்சிக்க விரும்புகிருேம்.

(அந்நவாந்) என்பதற்கு அன்னத்தை யுடையவன் என்று பொருள். (அந்நாத:) என்பதற்கு அன்னத்தை யுண்பவன் என்று பொருள். உலகில் பிறப்பவர்கள் அன்னத்தை விரும்புவது உண்பதற்காகத்தானே. அதற்காகத் தனிப்பட்ட ஒரு ப்ரார்த்தனையும் பலச்ருதியும் வேணுமோ! என்று சங்கிக்க நேரும் இதைப் பற்றித் தெளிவுபடுத்துவதற்காகவே இக்கட்டுரை எழுதப்படுகின்றது.

அன்னம் என்பதற்கு சோறு என்று மட்டும் பொருளன்று. நாம் அநுபவிக்கும் பொருள்கள் எல்லாவற்றையும் அந்தச் சொல்லுக்குப் பொருளாகக் கொள்ளலாம். அதாவது, அன்ன ஸாதனங்களையும் அன்னமென்கிற சொல்லால் கொள்ளலாமென்றபடி. முன்னம் சோறு என்கிற பொருளைமட்டும் வைத்துக்கொண்டு ஈண்டு விசாரம் நடத்துவோம். அன்னமுள்ளவர்களெல்லாரும் அன்ன முண்பவர்களாயுமிருக்கிருர்களென்பது கிடையாது. 'காவேரிப் பாசனத்தில் எமக்கு ஆயிரம்வேலி நிலமுண்டு; எனக்கு இரண்டாயிரம்வேலி நிலமுண்டு' என்பவர்களை மிகமிகக் காண்போம். அவர்கள் அன்னவான்களென்பதில் ஐயமில்லை; ஆனுல் அவர்களெல்லாரும் அன்னுதர்களுமாக இருக்கிருர்களா? என்று பார்ப்போமாகில் அன்னவான்களுக்கு அந்நாதத்வமும் கூடுவது சிறுபான்மையேயாகும். ஒருவர் சொல்லுவர்—'எனக்கு ஜீரண சக்தி மிகவும் குறைவு; ஏதோ பாலும் பழமுந்தான்' என்பர். மற்ருெருவர் சொல்லுவர்....'எனக்குப் பொரிக் கஞ்சியையே ஆஹாரமாக மருத்துவர் விதித்திருக்கிருர்' என்பர். இன்னொருவர் 'எனக்கு சப்பாத்திதான் சாப்பாடு' என்பர்; வேருெருவர் 'கடலைக்காயையே உண்டு வழக்கப்படுத்தி விட்டேன், ப்ரஸாதம் பிடிக்கவில்லை' என்பர். இப்படி பலவகைப் பேச்சுக்களைக் கேட்டிருக்கிருேம். முன்னேர்களும் இதை யறிந்தே "போஜ்யம் போஜந சக்திச்ச நால்பஸ்ய தபஸ: பலம்'' என்ருர்கள். போஜ்ய வஸ்துக்கள் புஷ்கலமாயிருந்து போஜன சக்தியும் வாய்ப்பது அருந்தவப்பயன் என்றபடி.

தைத்திரீயோபநிஷத்தில் ஆனந்தவல்லியில் பரப்ரஹ்மத்தினுடைய ஆனந்தத்தைப் பேச அடியிட்ட வேதபுருஷன் முந்துற முன்னம் மநுஷ்யானந்தத்தைப் பேசவெழுந்து "[illegible]'' என்று [illegible] ஓதுகையில், (ஆசிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட:'') என்று இவற்றையும் மநுஷ்யானந்தங்களில் சேர்த்து ஓதிற்று. இங்கு (ஆசிஷ்ட:) என்பதற்கு பாஷ்யகாரர்கள் பலபொருள்கள் எழுதுகின்ருர்கள். அவற்றுள் ஒரு பொருள் ("ஆசிஷ்ட:—அசநசீல:'' நன்ருக உண்பவன் என்றபடி; இத்தால் உடலில் ரோகமொன்றுமில்லாமை சொன்னபடி—என்று விவரணம் செய்யப்பட்டுள்ளது. ஆக, கிடைத்த அன்னத்தை நோய் நொடியில்லாமல் பரிபூர்ணமாக அநுபவிக்கப் பெறவேண்டியதும் முக்கியமாதலால் அன்னவான் என்றதோடு நிறுத்தாமல் "அந்நாத:'' என்றும் சொல்ல வேண்டியதாயிற்று.

இது லௌகிகரீதியில் தெரிவிக்கப்பட்ட பொருள். இனி பரப்ரஹ்ம விஷய மான ஒரு சுவைப் பொருளை யறிவிக்கிறோம். ("அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்") என்கிற ச்ருதியின்படி அன்னம் என்பதற்குப் பரமபுருஷன் என்று பொருள். அந்நவாந் என்பதற்குப் பரம புருஷனைப் பெறுகிறவனென்று பொருள்; அந்நாதஃ என்பதற்கு பெற்ற பரமபுருஷனை நன்கு அநுபவிப்பவ னென்று பொருள். இவை யிரண்டும் ஒரு வ்யக்தியினிடத்தில் ஸம்பவிப்பது அரிதாதலால் இவற்றின் ஸாமா நாதிகரண்யத்தை வேதம் ஆசீர்வதிக்கின்றது.

க்ருஷ்ணாவதாரத்தை யெடுத்துக் கொள்வோம். வஸுதேவர் அருந்தவப் பயனாக ஸ்ரீ க்ருஷ்ணனை மகனாகப் பெற்றார். பெற்றவளவே யொழிய அனுபவிக்கப் பெற்றாரோ வென்னில்; அநுபவ பாக்யமெல்லாம் நந்தகோபர்க்கேயன்றோ ஆயிற்று. "நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன வசுதேவன் பெற்றிலனே" என்று தெய்வத் தேவகி புலம்பினது ப்ரஸித்தமன்றோ. ஆக, பரப்ரஹ்மத்தைப் பெறுவதும், அதனை யநுபவிக்கப் பெறுவதுமான இரண்டும் ஒன்று கூடுவது அரிதென்று உணரப்பெறின் இவற்றின் ஸாமாநாதி கரண்யம் ஆசாஸ்யமாதமென்னத் தட்டில்லை.

முந்துற முன்னம் லௌகிகரீதியில் தெரிவித்த பொருளையே சிறிது விவரித்து இக்கட்டுரையை முடிக்கிறோம். அன்னவாந்—என்பதற்குப் பொருள் அதுவேயாம். அந்நாதா:—என்றதன் கருத்தில் மட்டும் வாசிகாண வேணும். அநுபவிக்கப்படும் பொருளெல்லாம் அன்ன சப்த வாச்யமாகும். அதை யநுபவிப்பது இருவகைப்படும். தான் உண்பதும் பிறர்க்கு வழங்குவதுமாம். க்ருபணர் எனப்படுமவர்கள் தாமும் அநுபவியாமல் பிறர்க்கும் வழங்காமல் நிலத்தில் புதைத்து வைப்பார்களன்றோ. "விபவோ தாந ஸம்பத்திர் நால்பஸ்ய தபஸஃ பலம்" என்று இதையும் அருந்தவப் பயனாகச் சொல்லி வைத்தார்கள் மேலையோர். ஆக, அன்னப்ராப்திக்குமட்டும் ஸாத னுனுஷ்டானம் பண்ண வேண்டாமல் அன்னாதத்வத்திற்கும் அதுபண்ணவேண்டி யிருக்கையாலே வேதபுருஷன் ஓதினது உரியதேயென்று தலைக்கட்டினோமானோம்.

---

## அடியேனுடைய மாதாந்தப பத்திரிகைகள்.

தமிழில் ஸ்ரீராமாநுஜன் போல தெலுங்கில் "**ஸ்ரீராமாநுஜ பத்ரிக**" என்னும் பெயரால் மாதந்தோறும் வெளிவருகின்றது. இதுவரை 189 ஸஞ்சிகைகள் வெளி யாகியுள்ளன. இதில் பெரிய திருமொழியாயிரம் தவிர மற்ற மூவாயிரங்களுக்கு ஆந்திரடீகை வெளிவந்து விட்டது. இது தவிர 75 உபந்யாஸங்களும் வெளி வந்திருக்கின்றன. வருடச் சந்தா ரூ. 7-00 க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

**வைதிக மனோஹரா** என்பது ஸம்ஸ்க்ருதமாஸிக பத்ரிகை. இதில் திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஸம்ஸ்க்ருத பாஷையிலும் ஹிந்தீ பாஷையிலும் வியாக்கியானம் இன்றுவரை 2,500 பாசுரங்களுக்கு வெளிவந்துளது. இது தவிர நூற்றுக் கணக் கான ஸம்ஸ்க்ருதோபந்யாஸங்கள் வெளிவந்துள்ளன. இதுவரை 166 ஸஞ்சி கைகள். இதற்கு வருடச் சந்தா ரூ. 10-00. கிடைக்குமிடம் அதுவே. ... *

---



ஸ்ரீகாஞ்சி. P. B. அண்ணங்ராசாரியர் குடும்பக் காட்சி.



புதுடில்லி கரோல்பாகில் வாழும் ஸ்ரீமதுபயவே. (பிரதிவாதிபயங்கரம்)
P. V. S. ஐயங்காரும் அவருடைய திருக்குமாரரும்.

# 8. ஸஹஸ்ரநாமராமாயணம்.

"ராமாவதாரதமென்றால் பட்டர் போர பக்ஷபதித்திருப்பர்" என்று நம் ஆசார்ய கோஷ்டியில் ஸுப்ரஸித்தமாகையாலே ஸ்ரீராம பக்ஷபாதியான பட்டர் தம்முடைய ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் *ராமோ விராமோ விரத:* இத்யாதி திருநாமங்களுக்கு முன்னே "பரர்த்தி: பரமஸ்பஷ்ட:" என்னுமிடத்தில் "அத ம்ருதஸஞ்ஜீவநம் ராமசரிதம்" என்றருளிச் செய்துள்ளார். (பரர்த்தி:) என்கிற திருநாமம் முதலாக ம்ருதஸஞ்ஜீவினயான ராமகதை சொல்லப்படுகிறது என்றபடி. பரர்த்தி:, பரமஸ்பஷ்ட: துஷ்ட: புஷ்ட: சுபேக்ஷண: ராம: விராம: விரத: மார்க்க: நேய: நய: அநய:, வீர: சக்திமதாம்ச்ரேஷ்ட: தர்ம: தர்மவிதுத்தம:—என்கிற பதினாறு திருநாமங்களும் ராம சரித்திரங்களைத் தெரிவிப்பனவாகத் திருவுள்ளம் பற்றினபடி. இத்திருநாமங்களை விவரிக்கும் முகத்தால் ஸ்ரீராம குணானுபவம் செய்கிறேன். ஆகவே இக்கட்டுரைக்கு 'ஸஹஸ்ரநாமராமாயணம்' என்று மகுடமிட்டேன்.

1. பரர்த்தி: — 'பரா ருத்தி யஸ்மிந் ஸ: — பரர்த்தி:=ருத்தியாவது ஸம்ருத்தி மிக்க ஸம்ருத்தியையுடையவனென்றபடி. செல்வம் மல்கியிருப்பவனென்கை. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் *செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர் *செல்வம் மல்கி யவன்கிடந்த திருக்கோளூர் *செல்வம் மல்கு தென்திருக்குடந்தை* என்றாப்போலே யருளிச்செய்கிறார்கள்; இவ்விடங்களில் கல்யாணகுண ஸம்ருத்தியையே முக்கியமான செல்வமாக வியாக்கியானித்தருளுகிறார்கள். "பவாந் ஸர்வத்ரைவ து அகணித மஹாமங்கலகுண:" என்று ஆழ்வானருளிச்செய்தபடி எம்பெருமானுடைய ரூபங்களெல்லாவற்றிலுமே குணபூர்த்தி குறையற்றிருந்தாலும் ஸ்ரீராமாவதாரமொன்றில்தான் குணபௌஷ்கல்யம் விசேஷித்துக் காணலாயிருக்கும். ஸ்ரீராமாயணத்தில் கயிறுபோட்டு எந்த இடமெடுத்தாலும் அவ்வவ்விடமெல்லாம் குணகீர்த்தன ப்ரசுரமாகவே காணலாகும். ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமமே குணங்களைப்பற்றின வினாவிடை. சக்ரவர்த்தி திருக்குமாரனை முடிசூட்டித் தான் தவம் புரியப் போவதாக அறுதியிட்டு மஹாஸபைகூட்டி ப்ரஜைகளின் அபிப்ராயத்தை வினவும்போது "அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்தஸ் த்வமஸி பார்த்திவ!"—கிழவா! ஒழிந்து போ, கிழவா! ஒழிந்து போ என்றார்கள். பிறகு சக்ரவர்த்தி ப்ரஜைகளை நோக்கிக் கேட்கிறான் 'உங்களைக் கேளாமலே நான் வஸிஷ்டாதிகளோடு மட்டும் கலந்து முடிவு செய்யலாமாயிருக்கச் செய்தேயும் உங்களுக்கொரு பெருமை கொடுக்க வேண்டிக் கேட்டேன்; நீங்களும் பெருந்தன்மையுடன் விடை கூறியிருக்கலாம். 'உமக்கு இஷ்டமானபடி செய்க' என்று விநயமஸ்ருணமாகச் சொல்லியிருக்கலாம். அதைவிட்டு, இதுவரையில் நான் அதர்மராஜ்யம் செய்ததுபோலவும், நீங்கள் என்னைவிட்டு நீங்குவதற்கு ஸமயம்பார்த்திருந்தது போலவுங் காட்டி என்னிடத்திலே மிக்க வெறுப்புத் தோற்றப் பேசினீர்களே, நான் செய்த தவறு என்ன? என்று. அதற்குப் பிரஜைகளின் விடை யாதெனில்; [பஹவோ ந்ருப! கல்யாண

குண: புத்ரஸ்ய ஸந்தி தே] மஹாப்ரபோ! உம்மிடத்தில் ஒரு குறைகண்டு சொன்னோமல்லோம்; நீர் பெற்ற பிள்ளை *குணநாமாகரோ மஹான்* என்னும்படியிருக்கையாலே அவன் கோற்கீழே வாழவேணுமென்னு மாசையொழிய வேறில்லை என்றார்கள். ஸ்ரீராம குணங்களை வாயாரச் சொல்லிச் சொல்லிக் கண்ணீர் பெருக்குகிறார்கள். (அயோத். இரண்டாவது ஸர்க்கம் காண்க.) இங்ஙனே காண்டந்தோறும் ராமகுணங்கள் ஸர்க்கம் ஸர்க்கமாக ஒவ்வொருவர் முகமாய்ப் பேசப்படுகையாலே இப்படிப்பட்ட குணஸம்ருத்தியையிட்டுப் பரர்த்தி: என்கிறது. இனி "பரேஷாம் ருத்திரேவ (ஸவஸ்ய) ருத்தி: யஸ்ய" என்று கொண்டு பரஸம்ருத்தியே பேறாயிருப்பவன் இராமன் என்றுங் கொள்ளத்தகும். ஸுக்ரீவ விபீஷணாதிகளுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவைக்காமல் தான் முடிசூடுவதில்லை யென்றிருந்தபடியால் இத்திருக்குணம் நன்கு விளங்கும். "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" என்றவிடம் பரஸம்ருத்தியையே பேணுமவர் பெருமாள் என்பதற்கு முக்கியமான சான்றாகும். லங்காத்வாரத்தில் பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே ராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே 'ராஜத்ரோஹியான பையல் பெருமாள் திருமுன்பே நிற்கையாவதென்?' என்று ஸுக்ரீவமஹாராஜர் அவன் மேலேயெழப்பாய்ந்து வென்று வந்தபோது பெருமாள் அருளிச்செய்கிறார் [ஏவம் ஸாஹஸ யுக்தாநி ந குர்வந்தி ஜநேச்வரா:] சிலர்மேல் விழவேண்டிலுல் பரிகரபூதரையன்றோ ஏவவேண்டுவது; தலைவராயிருப்பாரோ மேல்விழுவது? [த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம்கார்யம் ஸீதயா மம?] பிராட்டியைப் பெறுவதற்காகவன்றோ நாம் இத்தனை பாடுபடுவது; உம்முடைய பெருமைக்கு ஒரு குறை விளையுமாயின் அந்தப் பிராட்டியினால்தான் எனக்கென்ன? என்று இங்ஙனே சொன்ன பெருமாள் பரஸம்ருத்திக்கு விரோதமின்றியிலே ஸ்வஸம்ருத்தியைப் பேணுமவரென்று விளங்க நின்றதாயிற்று. இத்திருநாமத்தை இன்னமும் விவரிக்கலாம். போதும்.

2. பரமஸ்பஷ்ட:—*ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம் *ந மாம்ஸ சக்ஷுரபீக்ஷதே தம் * என்றேனும் கட்கண்ணால் காணாதவவ்வுரு * இத்யாதிப்படியே ஒருவர் கண்ணுக்கும் காணவொண்ணாதிருந்த வடிவத்தை அனைவரும் கண்டுகளிக்கும்படி மிகவும் ஸ்பஷ்டமாக்கிக் கொடுத்தவனென்கை. ஆழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் (10) "க்ஷோதீயஸோபி ஹி ஜநஸ்ய க்ருதே க்ருதீ த்வம் அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:" என்றருளிச் செய்ததை இங்கே அநுஸந்திப்பது. பரமஸ்பஷ்ட: என்பதற்கு-பரமத்வம் ஸ்பஷ்டமாயிருக்கப் பெற்றவர் என்கிற பொருள் பட்டருடைய பாஷ்யத்தில் விளங்குமது. 'பரத்துவத்தை யொளித்து வந்து அவதரித்திருக்கச் செய்தேயும் அது சிலர்க்கு ஸ்பஷ்டமாக விளங்கா நின்றதென்பதை ஸ்ரீராமாயணத்திலறிகிறோம். பெருமாளுடைய வநவாஸப்ரஸங்கத்தில் கிலேசப்படா நின்ற கௌஸல்யாதேவியைத் தேற்றுகின்ற ஸுமித்திரை "ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய: தைவதம் தேவதாநாஞ்ச" இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தைத் தான் ஸ்பஷ்டமாகக் கண்டறிந்து பேசுகிறாள். இராவணன்மாண்ட பிறகு ப்ரேத பூமியிலே வந்து புலம்புகின்ற மந்தோதரி *வ்யக்தமேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதந:, அநாதி மத்யநிதந:......, தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:. ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யச்

சர்ச்வதோ த்ருவ: மாநுஷம் ரூபமாஸ்தாய விஷ்ணுஸ் ஸத்ய பராக்ரம:* இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தை அதிஸ்பஷ்டமாகக் கண்டு பேசுகிறுள். பம்பாதீரத்தில் முதன்முதலாகப் பெருமாளைக் காணவந்த திருவடி "ஆயதாச் ச ஸுவ்ருத்தாச் ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:? *" என்று கேட்கிறுர். இங்கு 'ஆயதௌ ச ஸுவ்ருத்தௌ ச பாஹூ தே பரிகோபமௌ' என்று த்விவசனமாக சுலோகம் கூடுமதாயிருக்க பஹுவசன மிட்டுச் சொன்னதுபற்றி கோவிந்தராஜர் எழுதுகிறுர்.—"ஹநுமதோ பக்தத்வேந தஸ்ய சதுர்ப்புஜவேஷேண த்ருச்யோபவத்" என்று (அதாவது) திருவடி பரம பக்தராகையாலே அவர்க்கு நிஜரூபத்தைக்காட்டினுரென்றபடி. அன்றியும் ஸமுத்ர சரணுகதி ப்ரகரணத்தில் பெருமாள் தலையணையாக வைத்துக்கொண்ட பாஹுவை வருணிக்கின்ற வான்மீகி முனிவர் "புஜை: பரமநாரீணும் அபிம்ருஷ்ட மநேகதா" என்கிறுர். இங்கு பரமநாரிகளாகச் சொன்னது ஸ்ரீதேவீ பூதேவீ நீலாதேவிகளை யென்று வியாக்கியானம். ஆகவே வான்மீகி முனிவரும் பெருமாளுடைய பரத்வவேஷத்தை ஸ்பஷ்டமாகக் கண்டவரென்று விளங்கும். ஆக இவ்வளவால் பெருமாளுடைய பரமஸ்பஷ்டத்வம் நிருபிதமாயிற்று. .... .... .... *

3. துஷ்ட:=ஸந்துஷ்ட: என்றபடி. பெருமாளுடைய அவதாரத்தைப் பேசுகின்ற நம்மாழ்வார் * நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய் * என்கிறுர். "கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத கஷ்டங்களை யெல்லாம்பட்டு" என்கிறுர்கள் வியாக்க்யாதாக்கள். " துக்க ஸம்வேதநாயைவ ராமே சைதந்ய மாஹிதம்" [உத்தரராமசரிதே.] என்று பெருமாள் தாமே சொன்னதாக பவபூதிகவி யெழுதுகிறுர். இவற்றுல் பெருமாளுடைய திருவுள்ளம் ஸந்தோஷமற்றிருக்கும் போலுமென்று நினைக்க இடமுள்ளது. உண்மை அப்படியில்லை. ஸம்ஸாரிகளின் ஸமுஜ்ஜீவனுர்த்தமாக வந்து அவதரிக்கப் பெற்றேமிறே யென்று திருவுள்ள முகந்தேயிருப்பர். முடி புனைந்து நாட்டையாளப் பாரித்திருக்கையில் சடை புனைந்து மரவுரியுடுத்துக் காட்டுக்குச் செல்ல நியமனம் பெற்றபோது எவ்வளவோ துக்கமாகத் தானே யிருந்திருக்குமென்று பலர் நினைக்கக் கூடும். அப்போதும் பரம ஸந்தோஷத்தையே யாயிற்று பெருமாள் கொண்டது. ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய:" என்றவரன்றே பெருமாள். இவ்விடத்தில் கம்பருடைய வாக்கு மிக வற்புதமானது. "இப்பொழு தெம்மனேரால் இயம்புதற்கெளிதோ? யாரும் செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின், ஒப்பதே முன்பு பின்பு வாசக முரைக்கக் கேட்ட, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா." என்பது அவருடைய ஆச்சரியமான செய்யுள். வனவாஸக் கட்டளை பெறுவதற்கு முன்னே இராமபிரானுடைய திருமுக மண்டலம் தாமரை போன்றிருந்ததாம்; அக்கட்டளை பெற்றவாறே அத்திருமுகம் அப்போதலர்ந்த செந்தாமரையை வென்றிட்டதாம். கொடிய வனம் போக நேர்ந்ததே யென்று சிறிதும் சோகியாமல், புண்ணிய புனல்களாடவும் புண்ணிய புருஷர்களைத் தொழவும் வாய்ப்பு கிடைத்தமைக்குப் பரம ஸந்தோஷ மெய்தினுனென்கை. * உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி * என்று பௌரஜனங்கள் நேரில் கண்டு சொன்னபடியே தனது நாட்டிலுள்ளவர்களுக்கு நேரும் ஸந்தோஷத்தைத் தன்னுடைய ஸந்தோஷமாகக்

கொண்டு மகிழ்பவன். "அபிஷிச்ய விபீஷணம் விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்கிறபடியே அன்பர்களை ஸந்தோஷப்படுத்தித் தான் ஸந்தோஷாதிசய மடைபவன்..... *

4. புஷ்ட:=கீழே துஷ்ட: என்கிற திருநாமத்தினால் சொன்ன ஸந்துஷ்டதையை நன்கு நிலைநாட்டுகின்றது இந்தத் திருநாமம். தான் அடையும் ஸந்தோஷம் வடிவிலே காணலாம்படி யிருப்பவன். 'உள்ளத்தின் மகிழ்ச்சி உடலிலே தெரியும்' என்பராதலால் ஹ்ருதயகதமான ஸந்தோஷத்தைத் திருமேனி கோட்சொல்லித் தரக்கடவதாயிருக்கும். வனவாஸக் கட்டளை ப்ராப்தமானது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது க்ருத்ரிமமென்று நினைக்கவொண்ணாதபடி திருமேனி புகர்த்துக் காட்டுமென்கை. வனவாஸம் ப்ராப்தமாவது பரம ஸந்தோஷத்திற்கே ஹேதுவென்று சொன்னதைச் சிறிது சோதிக்குமளவில் அது அஹ்ருதயோக்தியே யொழிய ஸஹ்ருதயோக்தி யன்றென்று அறுதியிடலாமா யிருக்கும். (எங்ஙனேயென்னில்) மேலே ஆரண்யகாண்டத்தில் ஸீதாவியோகம் நேர்ந்தபோது துக்கபரவசராய்க் கதறுகின்ற பெருமாள் * ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம். * என்று சொல்லிப் புலம்புகிறார். 'ஐயோ! ராஜ்யத்தை யிழந்தேனே! காட்டிலே வந்து வஸிக்கவும் நேர்ந்ததே!' என்று சொல்லுவது 'வநவாஸோ மஹோதய:, என்றதற்கு நேர்மூரணல்லவா? வனவாஸக்கட்டளை ஸந்தோஷகரமா யிருந்தால் 'ராஜ்யாத் ப்ரம்ச:' என்றும் 'வநேவாஸ: என்றுஞ் சொல்ல வாயெழும்புமோ? ஈத்ருசீ இயம் மம அலக்ஷ்மீ:' என்று ராஜ்யப்ரம்ச வனவாஸங்களை தௌர்ப்பாக்ய மாகவன்றே சொல்லுகிறார். இவை பொருந்தும்படி எங்ஙனேயென்று விசிகித்ஸை பண்ணுவார்கள். இதற்கு நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்; 

> " *ராஜ்யநாசோபகர்ஷதி* வநவாஸோ மஹோதய:* என்று சொல்லிப் போந்தவற்றை இப்போது அனர்த்தமாகச் சொல்லுகிற தென்னென்னில், ஆச்ரித ஸம்ச்லேஷத்துக்கும் ரிஷிகளை நோக்குகைக்கு மென்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப் பிரிகையாலும் பெரியவுடையாரை யிழக்கையாலும் இவற்றுக்கு அடியானவையும் இப்போது அனர்த்தமாகத் தோற்றினபடி."

என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. (இதைச் சிறிது விவரிக்கிறேன்) வனத்திற்குப் புறப்படும்போது எதனால் ஸந்தோஷமென்னில்; பிராட்டியோடு ஏகாந்தவாஸம் பண்ணப் பெறுவோம், பரமபாகவதர்களோடே ஸஹவாஸம் பண்ணப்பெறுவோம் என்றிங்ஙனே பாரித்ததனால் ஸந்தோஷமுண்டாயிற்று. பாரித்தபடியே பேறு கிடைத்து வந்தது. *வைதேஹி! ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ* என்று வாய் வெருவும்படி பிராட்டியோடே கூடியிருந்து குளிரப்பெற்றது. *இஹ வத்ஸ்யாமி ஸௌமித்ரே! ஸார்த்தமேதேந பக்ஷிணா* என்று ஜடாயு மஹாராஜருடைய சிறகின் கீழே யொதுங்கி வர்த்திக்கவும் பெற்றது. இந்த நிலைமையில் "ஹா ஹந்த ஹந்த நலினீம் கஜ உஜ்ஜஹார" என்னும்படியாகப் பிராட்டியைப் பிரியவும் ஜடாயுமஹாராஜரை அறவே யிழக்கவும் நேர்ந்தது. இந்த துக்கம் சொல்லுவித்த வார்த்தை

யன்றோ "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:" என்பது. இதனால் காட்டுக்குப் புறப்படும் போதே ஸந்தோஷமில்லாமல் வருந்தியே புறப்பட்டதாக எண்ணத்தகுமோ? பரம குதூஹலத்தோடு மஹோத்ஸவம் ஸேவிக்கத் திருவேங்கடமலை சென்றவர் அங்கு இடமும் சோறும் தண்ணீரும் பெறாமல் அப்பன் ஸேவையும் பெறாமல் வெய்யிலிலும் மழையிலும் பரிதபித்துக் கிடக்க நேர்ந்ததென்று கொள்வோம்; அப்போது 'ஏதுக்கு வீட்டைவிட்டு இங்கே வந்து வருந்துகிறோம்!' என்று தளர்ந்தால் இதனால் ஊரைவிட்டுப் புறப்படும்போதிருந்த குதூஹலத்தை இல்லைசெய்யவொண்ணுமோ? இலங்கைசென்ற திருவடி அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டவாறே "அநயா ஹீந: ப்ரபு:, தாரயதி ஆத்மநோ தேஹம் ந சோகேந அவஸீததி' என்று சொன்னது பெருமாளை கர்ஹிக்குமாபோலே யிருந்தாலும் (புஷ்ட:) என்னுமிந்தத் திருநாமத்தை வியாக்கியானம் பண்ணுமாபோலவே யிராநின்றது. 'வாடாமல் வதங்காமல் புஷ்டராகவே யிருக்கிறார் பெருமாள்' என்று காட்டினபடியாகக் கொள்ளலாம். இல்லையாகில் 'ஜீவதி' என்று மூன்றெழுத்தோடே முடிக்கலாமே; 'தாரயதி ஆத்மநோ தேஹம்' என்ற விரிவு தேஹபுஷ்டியை அந்தரங்கமாகக் காட்டவேபோலும். .... *

5. சுபேக்ஷண: =பெருமாளுடைய திருக்கண்ணழகிலே யீடுபட்டவர்கள் சக்ரவர்த்தியும் சபரியும் திருவடியுமாவர்கள். 'என் வேள்வியைக்காக்க உன் பிள்ளையைப் போரவிடாய்' என்று விச்வாமித்ர முனிவன் வேண்டினபோது *ஊநஷோடசவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:* என்று விடையிறுத்த சக்ரவர்த்தியின் கருத்துகள் பலவுண்டு; அவற்றுள் ஒரு கருத்து—இக்கண்ணழகனை விட்டுப் பிரிந்து எங்ஙனம் தரித்திருப்பேனென்கை: சபரி தன்னாச்ரமத்தேறப் போந்த பெருமாளைக் கண்டவாறே *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* என்று அவருடைய கண்ணழகிலே தான் ஈடுபட்டமையைத் தெரிவித்துக்கொண்டாள். இவற்றுக்கெல்லாம் மேம்பட்டது திருவடியின் வார்த்தை. அதாகிறது] ராம: கமலபத்ராக்ஷஸ் ஸர்வஸத்வமநோஹர: *] திருவடியோடு ஸம்பாஷணை செய்யும் பிராட்டி "யாநி ராமஸ்ய சிஹ்நாநி.. தாநி பூயஸ் ஸமாசக்ஷ்வ ந மாம் சோக: ப்ரதக்ஷ்யதி" என்று பெருமாளுடைய அடையாளங்களைச் சொல்லும்படி கேட்டவாறே முந்துறமுன்னம் "ராம: கமல பத்ராக்ஷ:" என்றான். அக்கண்ணழகு செய்யுமது என்? என்ன; [ஸர்வஸத்வமநோஹர:] பிராணிகளென்று பேர்பெற்றாரெல்லாருடையவும் நெஞ்சைக் கொள்ளை கொள்ளுமதாயிற்று அவ்வழகு என்கிறார் திருவடி. இங்கே விமர்சிக்க வேணும்; திருவடி பெருமாளுடைய கண்ணழகை ஒருபெரியநகரத்திலே கண்டாரல்லர். நிர்ஜநமானதொரு வனத்திலே ஒரு மூலையிலே கண்டுவைத்து 'ஸர்வஸத்வ மநோஹர:, என்று எதுகொண்டு சொல்விற்றென்று ஆராயவேணும். இங்கு நம்பிள்ளை யருளிச் செய்வது, "திர்யக் ஜாதீயனாய்ப் பணையோடு பணைதத்தித் திரிகிற என்னுடைய நெஞ்சையும் அபஹரித்ததே" என்று. இத்தால் பெருமாளுடைய கண்ணழகு ஸர்வ ஸத்வமநோஹர மென்னுமிடம் கைமுதிக ந்யாயஸித்தமென்கை. இதைக்கணிசித்தே கம்பர், அனுமன் இராமபிரானைக் காணும்போதே "மஞ்சனத்திரண்ட கோலமேனிய!, மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி நளிரிரும்பனிக்குத் தேம்பாக், கஞ்சமொத்தலர்ந்த கண்ண!" என்று கூறினதாகப் பாடினர்.

(சுபேக்ஷண:) இதற்கு பாஷ்யமருளிச்செய்யாநின்ற பட்டர் "ஸ்வகர்த்ருகம் ஸ்வகர்மகஞ் ச தர்சநம் அதிசுபம் அஸ்ய" என்பதோர் அர்த்தமு மருளிச்செய்கிறார். இராமனைப் பிறர் காண்பதும் இனிது, இராமன் பிறரைக் காண்பதும் இனிது என்றதாயிற்று. ஈக்ஷண சப்தமானது கண் என்கிற பொருளையும், காண்கையென்கிற பொருளையும் காட்ட வல்லது. கண் என்கிற பொருளைக்கொண்டு கீழே விவரணம் செய்தேன். இப்போது காண்கையென்கிற பொருள்கொண்டு விவரிக்கிறேன். [*யச் ச ராமம் ந பச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி. நிந்திதஸ் ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே *] (ஸ்ரீ ரா. அயோ. 17-14) இராமனைக் காணாதவனும் இராமனால் காணப்படாதவனும் உலகில் நிந்திக்கப்பட்டவனாவன்; உலகத்தார் நிந்திப்பது கிடக்கட்டும்; தன்னைத்தானே நிந்தித்துக் கொள்ளவேண்டியதுமாகும் என்றபடி. இதனால் இராமனைக் காண்பதுபோல இராமனால் காணப்பெறுவதும் புருஷார்த்தமென்று தேறுவதால் சுபேக்ஷண: என்பதற்கு இருவகைப் பொருளையும் பட்டர் திருவுள்ளம் பற்றினது சாலச் சிறக்கும். இந்த சுபேக்ஷண மஹார்த்த ப்ரஸ்தாவத்தில், அசோகவனத்தில் புலம்பாநின்ற பிராட்டி "தம் பத்மதலபத்ராக்ஷம் ஸிம்ஹ விக்ராந்த காமிநம். தந்யா: பச்யந்தி மே நாதம் க்ருதஜ்ஞம் ப்ரியவாதிநம்." என்று சொன்ன விந்த சுலோகமும் சிந்தைசெய்யத் தக்கது. இதில் பத்மதளபத்ராக்ஷமென்றுள்ளது. இங்கு பத்மதளமென்றோ பத்மபத்ரமென்றோ ஒன்று சொன்னால் போதும்; "பத்ரம் பலாசம் ச்சதனம் தளம் பர்ணம் ச்சத: புமாந்" என்ற அமரகோசத்தின்படி தளம் பத்ரம் என்பன பர்யாயமே யாதலால் தளபத்ராக்ஷமென்று இரண்டையும் கூட்டிச் சொன்னது புநருக்தமாகாதோவென்று சிலர் சங்கிப்பதுண்டு. சங்கை யுக்தமானதே. இங்குப் பெரியார் கூறும் ஸமாதானம் சுவை மிக்கது. வடமொழியில் அக்ஷமென்கிற சொல்லுக்கு "அக்ஷமிந்த்ரிய காயயோ:" என்கிற நிகண்டின்படி கண்ணென்றும் வடிவென்றும் இருபொருள்களுள்ளமை ப்ரஸித்தம். இரட்டுறமொழிதலென்னும் தமிழ் மரியாதையினால் பத்மதளபத்ராக்ஷமென்றவிவ்விடத்தில் அக்ஷபதத்திற்கு இவ்விரண்டு பொருள்களையுங் கொண்டு 'பத்மதளம் போன்று விசாலமான கண்ணழகுடையவர், பத்மபத்ரம் போன்ற [தாமரையிலை போல் பசுமையுள்ள] திருமேனியையுடையவரென்றதாகக் கொள்ளக்கடவது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் * செக்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலைபோலுந் திருமேனி * என்றருளிச்செய்தது மேலேவிவரித்த பொருளைத் திருவுள்ளம் பற்றியே.

6. ராம:—'ரமதே' இதி ராம: ரமு-க்ரீடாயாம் என்று தாதுவாகையாலே விளையாடுபவன் என்று பொருள்படும். "த்வம் ந்யஞ்சதிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை: ஹரே! விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:" என்று நாரத முனிவர் கூறினபடியே, சிறுவர்கள் பந்துகளைக் கொண்டு விளையாடுமாபோலே எம்பெருமான் பிராணிகளை வைத்துக்கொண்டு விளையாடுகிறான். பந்தானது வெளுப்பு நூல் கருப்புநூல் சிவப்பு நூலாகிய மூன்றுநிற நூல்களாலே கட்டப்பட்டிருப்பது போல பிராணிகளும் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மூன்று நிறமுள்ள குணங்களமைந்திருப்பர்கள். பந்தானது விஹாரகாலத்தில் மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பது போல, பிராணிகளும் "தே தம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம்

க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடியே மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பர்கள். இங்ஙனே விளையாடும் பரமபுருஷன் இராமனாகத் திருவவதரித்து "ராமஸ் து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந்ருதூந்" என்றுவான்மீகி பேசும்படி பிராட்டி யொருத்தியோடே விளையாடினான். "ராமஸ் து ஸீதயா ஸார்த்தம்" என்றதே (ராமஸ்து) என்றது ஸாபிப்ராயம். (து) என்னு மவ்யயம் வ்யாவ்ருத்தியைச் சொல்லும். இதுவரையில் பெருமாள் பித்ரு சுச்ருஷையிலும் தர்மப்ரவர்த்தனத்திலும் தேவதா ஸமாராதனத்திலும் புகழ்படைத்திருந்தவர் இப்போது பிராட்டியோடே சேர்ந்தவாறே வேறுபட்டார். ச்ருங்கார கேளிகளிலே பரம ரஸிகரென்று புகழ்பெற்றபடியைச் சொல்லுகிறது. .... .... ....

அன்றியே, ராம:—ரமதே என்பதற்கு உள்ளம் குளிரப் பெறுபவரென்பதும் பொருளாகையாலே அப்பொருளைக் கொண்டு அநுபவிப்பதும் பாங்கு. அன்பர்களோடு கலக்கப் பெற்றும் அன்பர்களின் காரியத்தைத் தலைக்கட்டியும் உள்ளம் குளிருபவர் பெருமாள். [குஹேந ஸஹிதோ ராம: ] ராமன் குஹனோடு சேர்ந்தானென்று இதற்குப் பொருளன்று; குஹேந ஸஹிதஸ் ஸந் ராம:—குஹனோடு சேர்ந்த பின்பு ராமனானானென்றே ஆசாரியர்களருளிச் செய்வது. குஹனோடு சேர்ந்து உள்ளங் குளிர்ந்தா னென்கை. மற்றோரிடமுங் காணலாம்; [க்ருத க்ருத்யஸ் ததா ராம: ]* *அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராம:* விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டித் தன் காரியம் தலைக்கட்டிற்றாக நினைத்து [ததா ராம:] அப்போது தான் ரதியை யடைந்து ராமனாயின னென்கை. பெருமாள் செய்தருளின ஒவ்வொரு காரியமும் அவர் தம்முடைய திருவுள்ளத்தைக் குளிரச் செய்ய வல்லதே யாயிற்று. குஹஸுக்ரீவ மாருதி விபீஷணாதிகள் பக்கலிலே காட்டின அநுக்ரஹ விசேஷத்தினால் திருவுள்ளம் குளிர்ந்தது போல, தாடகாதாடகேயவிராத கரதூஷண ராவணாதிகள் பக்கலிலே காட்டின நிக்ரஹத்தினாலும் ஆச்ரித விரோதிகள் தொலையப் பெற்றோமென்று திருவுள்ளம் குளிர்ந்திருக்கக் குறையில்லை. ஆக, 'ரமதே இதி ராம:' என்கிற வ்யுத்பத்தியினால் ஸ்ரீராமாயணத்தில் பல ப்ரகரணங்கள் ஸங்க்ருஹீதங்களாகும். .... .... .... .... *

அன்றியே ராம:—'ரமயதீதி ராம:' என்கிற வ்யுத்பத்தியும் பொருந்தும். தன்னைக் காண்பவர்களையும் தன் சரிதை கேட்பவர்களையும் மகிழ்விப்பவர் பெருமாள். உலகத்தில் அதிகாரிகள் வெவ்வேறு பட்டிருப்பர்களாதலால் ஒரே குணத்தினால் எல்லாரையும் ஏக ரூபமாக மகிழ்விக்க முடியாது. "ஸத்யேந லோகந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:. குரூந் சுச்ருஷயா வீர: தநுஷா யுதி சாத்ரவாந்." என்றாப்போலே ஒவ்வொருவர் பக்கலிலே ஒவ்வொரு குணத்தைச் செலுத்தி மகிழ்விப்பது ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தம். ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஸௌந்தர்யம் பொறுமை தயவு வாத்ஸல்யம் வீரம் என்றிவை முதலான பல திருக்குணங்கட்குக் கடலாயிருக்கின்ற பெருமாள் திருநாட்டிலே விலை செல்லகில்லாத திருக்குணங்களை விலை செல்லச் செய்வதற்காகவே இம்மண்ணுலகில் வந்து அவதரித்தபடியினால் அத்திருக்குணங்களிலே அவரவர்களை யீடுபடுத்தி மகிழ்விக்கச் சொல்லவேணுமோ? குஹப்

பெருமாளை ஸௌசீல்யத்தாலே மகிழ்வித்தான் ஸௌசீல்ய மென்பதும் சீல மென்பதும் பர்யாயம். தன் மேன்மை பாராதே தண்ணியரோடும் கலந்து பரி மாறுகை சீல குணத்தின் காரியம். இக்குணத்தினால் காரியங் கொண்டதுதான் ஸ்ரீ ராமாயணத்தில் அதிகம். ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களாலே தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகளை யீடுபடுத்தினது பெரியதன்று. காதும் மூக்குமறுப்புண்டு கதறி யழுதுகொண்டே கரதூஷணாதிகளிடம் செல்லலுற்ற சூர்ப்பணகை "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ... புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ் ணாஜிநாம்பரௌ, கந்தர்வராஜ ப்ரதிமௌ பார்த்திவ வ்யஞ்ஜநாந்விதௌ" என்று சொல்லிச் சொல்லிப் புலம்பும்படி செய்ததே சிறப்பு. இங்ஙனே ஓரோ குணங்களைக் காட்டி ஒவ்வொருவரையும் ரமிப்பித்தது பன்னியுரைக்குங்கால் பாரதமாம். .... .... .... .... .... *

7. [விராம:]—ரமயதீதிராம:' என்கிறப்போலே 'விரமயதீதி விராம:' என்றாகும். விராமமாவது ஓய்வு: (1) பிறருடைய சௌர்யவீர்ய பராக்ரமங்களை ஓயச் செய்பவர் (2) பிறருடைய வாதத்தை ஓயச் செய்பவர் என்று இருபொருள் கொள்ளலாம். முந்தின பொருளைப்பற்றி விசேஷமாக விவரணம் காட்ட வேண்டியதுண்டோ? *ப்ரஹ்மா ஸ்வம்பூச் சதுராநநோ வா ருத்ரஸ் த்ரிநேத்ரஸ் த்ரிபுராந்தகோ வா, இந்த்ரோ மஹேந்த்ரஸ் ஸுரநாயகோ வா த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம்* என்ற திருவடியின் வார்த்தை யொன்றே போதும். பிறருடைய வாதத்தை ஓயச் செய்பவர்—என்ற இரண்டாவது பொருளுக்குச் சேரச் சிலவிடங்களை யெடுத்துக்கா ட்டுதும். ஆரண்ய காண்டம் ஆறாவது ஸர்க்கத்தில், தண்டகாரண்யவாஸிகளான முனிவர்கள் அரக்கர்களினால் தங்களுக்கு நேரிட்ட கஷ்டங்களை இராமபிரானிடம் விஜ்ஞாபித்துச் சரணமடைந்தபோது இராமன் அம்முனிவர்களுக்கு அபயமளித்த வரலாறு வருணிக்கப்பட்டது. பிறகு ஒன்பதாவது ஸர்க்கத்தில் ஸீதா பிராட்டி இராமபிரானை நோக்கித் தர்க்கித்துப்பேசினாள். (அதாவது) நீர் முனிவேடம் பூண்டு காட்டுக்கு வந்திருக்கிறீர்; புண்ணிய புனல்களாடிச் சுகமாக அயோத்திசென்று சேரவேண்டியது ப்ராப்தம். அப்படியிருக்க நீர் முனிவர் முன்னிலையில் பரஹிம்ஸை செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்தது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. க்ஷத்ரியர் களுக்கு இது தருமமானாலும் இப்போது நீர் க்ஷத்ரிய தருமத்தைக் காக்கவேண் டிய நிலைமையில் இல்லாதபடியாலும், "தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந் தவம் மேற்கொண்டு" காட்டுக்கு வந்திருப்பதாலும் ஆயுதம் ஜைக்கொண்டு செய் யுஞ்செயலை நீர் நெஞ்சாலும் நினைக்கவே தகாது. உமக்குத் தெரியாததொன்று மில்லை; உமக்கு நான் தருமம் உபதேசிக்க வந்ததாக நினைக்கவேண்டா; திருத்தம்பி யாரோடும் ஆலோசித்து யுக்தமானபடி செய்யக்கடவீர்—என்றுரைத்தாள். இதைக் கேட்ட இராமன் (பத்தாவது ஸர்க்கத்தில்) அந்த ஸீதா பிராட்டியின் வாதத்தை ஓயச் செய்திருப்பதைக் காணவேணும். அதில் ஸாரமான விஷயம் இவ்வளவே: 'அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே! ஸலக்ஷ்மணாம், ந ஹி ப்ரதிஜ்

ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:* இத்யாதிகளைச் சொல்லி அவனுடைய வாதத்தை விராமமடையச் செய்தனனென்பது. வாலி "அரக்கரோரழிவு செய்து கழிவரேல் அதற்கு வேறோர் குரக்கினத்தரசைக் கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ?" என்றாப்போலே சில வாதங்களைச் செய்தபோது பெருமாள் அவன் வாயினாலேயே க்ஷமைவேண்டும்படி செய்து அவனை விராமமடையச் செய்ததும் இங்ஙனே பலவுங் காண்க. .... .... .... .... *

8. விரத: — தம்முடைய ஸமீசீன வாதங்களாலே பிறருடைய வாதங்களை விராமமடையச் செய்பவராதலால் விராம: என்று இத்திருநாமத்தில் அநுபவிக்கப்பட்டது. பிறருடைய ஸமீசீன வாதங்களாலே தாம் விராமமடைவதும் விதண்டாவாத வைதேசிகரான பெருமாள் பக்கலிலே காண்பதுண்டு. தாம் பிடித்ததே பிடிவாதமாக இராமல் "யுக்தியுக்தம் வசோ க்ராஹ்யம்" என்று கொண்டு தம்முடைய வாதத்திற்கு விச்ராந்திகொள்பவர் பெருமாள். அல்லது, காரண விசேஷத்தாலே தாம் நிக்ரஹிக்கப்புகுந்தாலும், உடனே நன்மைகண்டு நிக்ரஹத்தில் நின்றும் விரதராகி அநுக்ரஹோந்முகராமவர் என்பதையுங் கொள்ளலாம். இவ்விரண்டையும் அடைவே விவரிக்கிறேன். அயோத்தியா காண்டம் இருபத்தாறும் ஸர்க்கத்தில் இராமபிரான் தாய் தந்தையர் சொற்படி காட்டுக்குச் செல்ல நேர்ந்ததை ஸீதா பிராட்டியிடங்கூறி அவளை நகரத்திலேயே வாழுமாறு திட்டம் செய்ய, (ஸர். 27) அதற்கு பிராட்டி தன்னையும் உடனழைத்துச் செல்லுமாறு நிர்ப்பந்திக்க, (ஸர். 28) அவளுக்கு இராமன் காட்டின் கொடுமைகளைக்கூறி 'நீ காட்டுக்கு வரவே தகாது; என்று வலிதாகத் தர்க்கித்தான். அதற்குமேல் பிராட்டி (29, 30 ஸர்க்கங்களில்) ப்ரணயரோஷம் தலையெடுத்து "ராமா! உன்னிடத்தில் அழகு மட்டுமேயுள்ளது; அதைக்கண்டு அனைவரும மயங்கிவிடுகிறார்கள்; உனக்கு ஆண்மையென்பது சிறிதுமில்லை; என்னொருத்தியைக் காக்க முடியாமல் என்னை நிறுத்தி நீ காட்டுக்குப் போனாயென்று என் தந்தையார் கேள்விப்பட்டாராகில் 'ஹா! புருஷவேஷம் பூண்டுவந்த வொரு பெண்பிள்ளைக்கா என் மகளைக் கொடுத்தேன்!' என்று மிகவும் மனம் நொந்துகொள்வர்; என்னைக் காட்டிலே காக்கமாட்டாத காபுருஷனா நீ?' என்று இனைய பலவும் சொல்லித் தர்க்கிக்க, இராமன் தன்னுடைய பிடிவாதத்தில் நின்றும் விரதனாகி அவளையும் உடனழைத்துச் செல்ல இசைந்தனன்.

காரண விசேஷத்தாலே நிக்ரஹிக்கப்புகுந்து நிக்ரஹத்தில் நின்றும் ஓய்ந்தபடியையும் இரண்டிடங்கொண்டு காட்டுவோம். கிஷ்கிந்தா காண்டத்தில் (ஸர். 30) ஸுக்ரீவ மஹாராஜர் வர்ஷாகாலத்திலே பெருமாள் ஓய்வு கொடுத்ததை வியாஜமாகக் கொண்டு விஷயபோகங்களிலே ஊன்றிக்கிடக்க, காலம் கடந்தும் படைகளைத் திரட்டிக்கொண்டு வாராமையைக்கண்ட பெருமாள் சீறிச் சிவந்து நிக்ரஹிக்கத் திருவுள்ளம்பற்றினபடியை இளையபெருமாள் முகமாகத் தெரிவிக்கவெண்ணி "ந ச ஸங்குசித: பந்தா யேந வாலீ ஹதோ கத:" "மா வாலிபதமந்வகா;" "ஹநிஷ்யாமி ஸபாந்தவம்" இத்யாதிகளைச் சொல்லி அச்சமுறுத்தினர். ஸுக்ரீவன் குடும்பத்தோடு மாண்டுவிட்டானின்று என்றே நினைக்கும்படியாயிருந்தது. இந்த ப்ரபலமான நிக்ரஹ ஸங்கல்பம் என்னாயிற்று? "ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம்

ஸமஜாயத" என்று பிராட்டி பக்கலிலே திருவடி சொல்லும்படியாகவன்றே ஆயிற்று "வாநராணும் நராணுஞ்ச கதமாஸீத் ஸமாகம:?" என்று பிராட்டி திருவடியைக் கேட்டாள். பணைதத்தித்திரிகிற குரங்கினங்களுக்கும் புருஷோத்தமர்களுக்கும் சேர்க்கையுண்டானபடி எங்ஙனேயென்று கேட்டாள். அதற்குத் திருவடி சொன்னது, 'வெறும் ஸமாகமமன்று; ராமனும் ஸுக்ரீவனும் ஏகதத்வமென்னும்படியாகவன்றே குழைந்தார்களென்று. ஆக, நிக்ரஹத்தில் நின்றும் ஓய்ந்தபடியாலே விரதனென்றது ஒக்கும். மற்றோரிடம் யுத்தகாண்டத்தில் ஸமுத்ர சரணாகதி ப்ரகரணமாகும். "பாஹும் புஜக போகாபமுபதாயாரி ஸூதந:' அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்னும்படி கடலரசனை வழிவேண்டி மூன்றுநாள் தரைக்கிடை கிடந்தார் பெருமாள். அவனோ முகங்காட்டிற்றிலன்; *சாபமாநய ஸௌமித்ரே சராம்ச்ச ஆசீவிஷோபமாந், ஸாகரம் சோஷயிஷ்யாமி பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா:* என்று பலவுஞ்சொல்லி உலகில் ஜலதத்வமேயில்லாதபடி செய்துவிடுகிறேனென்று சீற்றத்தினெல்லையில் நின்றார் பெருமாள். பிறகு என்னாயிற்று? அக்கடலரசன் சிறிது ஆபிமுக்க்யம் காட்டினவாறே 'ஸமுத்ர ராஜனே! இவ்வம்பு உனக்காகத் தொடுத்ததன்று; உன் பகைவர்மேலேவிடத் தொடுத்ததத்தனை; உன் பகைவர்களைக் காட்டிக் கொடு' என்று கூறி அவன் காட்டிக்கொடுத்த த்ருமகுல்யமென்கிற விடத்திலே அம்பைச் செலுத்தி அநுக்ரஹசீலராகி நிக்ரஹத்தில் நின்றும் விரதராயினர். (யுத்தகாண்டம் ஸர்க்கம் 22 காண்க.).......மேலே ராவணனோடு துமுலமான யுத்தம் நடக்கும்பொழுது அவன் *சசால சாபஞ்ச முமோச வீர:* என்னும்படி கைமாண்டு நின்றவாறே "கச்ச அநுஜாநாமி" என்று சொல்லி விடைகொடுத்துப் போகவிட்டு அப்போது யுத்தத்தில் நின்றும் விரதரானார்பெருமாள்—என்பதும் இங்கு (விரத:) என்னும் திருநாமத்தின் பொருளாகக் கொள்ளத்தகும். இனி அடுத்த திருநாமத்திற்குச் செல்வோம்.

9. மார்க்க:='மார்க்யதே' இதி மார்க்க; மார்க்கணமாவது தேடுதல். தேடப்படுகிறவர் என்றபடி. தேடுகிறவர் என்கிற பொருளும் பொருந்தும். தேடப்படுகிறவர் என்னும் பொருளை முன்னம் விவரிப்போம். வேதாந்தங்களிலே "ஸோந்வேஷ்டவ்ய:" என்று ஓதியுள்ளது. பகவான் தேடத் தகுந்தவன் என்றபடி. இந்தச் சுருதியையடியொற்றியே திருமங்கையாழ்வார் "நான்மறைகள் தேடியோடுஞ் செல்வன்" என்றும். "நான்மறைகள் தேடியென்றுங் காணமாட்டாச் செல்வன்' என்று மருளிச்செய்தார். உத்தர ஸ்ரீராமாயணத்திலே 'சம்பூகவதம்' என்றொரு கட்டம். தவம்புரியத் தகாத ஜாதியிலே பிறந்தானொருவன் தண்டகாரணியத்திலே கொடுந்தவம் புரிய, அதனாலே அயோத்தியில் ஒரு அந்தணனுடைய குழந்தை இறந்துபோக, அந்த சூத்ரதபஸ்வியைக்கொன்றாலன்றி இந்த பிராமண சிசு உயிர்பெறுதென்றறிந்த பெருமாள் அவனை வதைக்கத் திருவுள்ளம்பற்றிக் கையுங்கத்தியுமாகத் தண்டகாரணியத்திற்கெழுந்தருளுகிறார். [பெருமாள் திருமொழியில் *செறிதவச் சம்புகன் தன்னைச் சென்று கொன்று செழுமறையோனுயிர்மீட்டு* என்றநுஸந்திக்கப்பட்ட கதை இது.] காடேறச் செல்லாநின்ற பெருமாள் "சம்புகனென்கிற சூத்திரன் தவம் புரிகிறானாமே; எங்கே எங்கே?" என்று கேட்டுக்கொண்டே அவனைத் தேடிக்கொண்டு செல்லுகின்றார்; சென்று

அவனையணுகினபோது அவன் சொல்லுகிருன்* அந்வேஷ்டவ்யோ யதவி புவநர் லோக நாதச் சரண்ய: மாம் அந்விஷ்யந் ...” [உத்தரராமசரிதே பவபூதி:] என்ருன். உலகர் களாலே தேடத்தக்கவனுக வேதங்களில் சொல்லப்படுகிற மஹாப்ரபுவே, நீ என்னைத் தேடிக்கொண்டு வந்தனையே, நான் எவ்வளவு பாக்யசாலி! என்ருன். இங்கு கர்த்தரியர்த்தம் கர்மணியர்த்தம் ஆகிய இரண்டு பொருளும் காணலாம். மாரீச மாயாம்ருகத்தை வதைத்து மீண்டபின் பர்ணசாலையில் பிராட்டியைக் காணுமல் அவளைத் தேடிக்கொண்டு திரிந்தது, தனுகபந்தனுடைய சொல்லின்படி சபரியையும் ஸுக்ரீவனையும் தேடிப்போந்தது என்னுமிவற்றையும் கொள்ளலாம். மார்க்க: என்பதற்கு வழியாயிருப்பவன், வழிகாட்டுபவன் என்கிற பொருள்களுங்கொள்ளலாம். வழியென்ருலும் நெறியென்ருலும் பரியாயம். நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் *நெறிகாட்டி நீக்குதியோ* என்கிற பாசுரத்தில் உபாயமென்னும் பொருளில் நெறியென்னுஞ் சொல்லைப் பிரயோகித்திருப்பதனுல் மார்க்க; என்னும் வடசொல்லும் உபாயவாசகமாகக் குறையில்லை. முகுந்தமாலையில் “கரசரண ஸரோஜே காந்திமந் நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி விகாஹ்ய....” என்ற சுலோகத்தில் 'அகாதமார்க்கே' என்றவிடத்தில் மார்க்க சப்தம் உபாயார்த்தமாகவே பிரயோகிக்கப்பட்டுள்ளது. “உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ” என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் அருளிச்செய்தபடி எம்பெருமானுக்கு உபாயத்வம் ஸ்வரூபமாகையாலே உபேயபூதனுன தானே உபாயமுமாயிருக்கும்படியைச் சொல்லிற்றுகிறது. ராவண வதமான பிறகு பிரமன்வந்து செய்யும் துதியில் “சரண்யம் சரணஞ்ச த்வாம் ஆஹுர் திவ்யா மஹர்ஷய:” என்றதனுல் மூதலிக்கப்பட்ட அர்த்தமேயன்ருே இது. இனி, வழிகாட்டுகிறவன் என்னும் பொருளுக்கு ஸமந்வயம் பெரியவுடையார் (ஜடாயு) பக்கலிலே காணலாம். *மயா த்வம் ஸமநுஜ்ஞாத: கச்ச லோகாந் அநுத்தமாந்* என்று சொல்லிச் சடாயுவுக்கு வைகுந்தத்தேற வழிகாட்டினவரன்ருே பெருமாள். *யா கதிர் யஜ்ஞ சீலாநாம்* இத்யாதியாகச் சொன்ன ராம வாக்யத்தில் (கதி:) என்பதற்கு மார்க்கமென்பதுதானே பொருள். பகவத் கீதையில் (8-26) *சுக்ல க்ருஷ்ணே கதீ ஹ்யேதே* என்றவிடத்தில் கதிசப்தார்த்தம் மார்க்கமேயன்ருே. இனி அடுத்த திருநாமத்திற்குச் செல்வோம்.

**10.** நேய:=நாயகனென்னும் பொருளதான நேதாவென்னுஞ் சொல்லுக்கு எதிரான சொல் (நேய:) என்பது. கட்டளையிடுபவனை நேதா என்போம்; கட்டளையிடப் பெறுபவனை (நேய:) என்போம். “யஸ்ய விச்வ உபாஸதே ப்ரசிஷம் யஸ்ய தேவா:” என்று வேதமோதியுள்ளபடியும், * ஆணை மெய்பெற நடாய தெய்வம் மூவரில் முதல்வனுகி* (திருவாசிரியம்) என்று ஆழ்வாரருளிச்செய்தபடியும்* மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவனுகிய தான் ஸகலதேவர்களையும் கட்டளையிட்டுப் பணிகொள்ளத் தக்கவனுயிருந்துவைத்தும் பிறர் தன்னைக் கட்டளையிடும்படியாக வாயிற்று ஸ்ரீராமாவதாரம் செய்தருளிற்று. விசுவாமித்ரமுனிவன் தான் ஒரு வேள்வி செய்வதாகத் தொடங்கி அதனை இடையூறின்றி நிறைவேற்றுதற் பொருட்டுத் தசரதமன்னவனிடம் வந்து இராமனைத் தருகவென்று இரந்தனன். அதற்கு மன்னவன் உடன்படவில்லை, அரக்கர்களோடு போர்புரியத்தக்க பருவ

மின்றிக்கே மிக இளையவனை என் சிறுவனை நான் உம்மோடுகூட அனுப்பமாட்டேனென்றனன். அதற்கு முனிவன் மன்னவனை நோக்கி இவனது பெருமையை நீ அறிந்திலே; அறப்பெரியோனை இவனை மிகச் சிறியவனாக நீ நினைத்திருக்கிறுயத்தனை; *வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* என்று வேதம் பேசின பெருமைவாய்ந்த மஹாபுருஷனன்றே இவன்; இவனை உள்ளபடியே யானறிவேன்; நான் மட்டுமல்ல; இதோ உன்னெதிரில் வீற்றிருக்கின்ற நற்றவமாமுனிவர்களும் நன்கறிவர்கள் என்று இனையபலவுஞ்சொல்லி ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக் கொண்டுசென்றுன். தந்தையாரிடம் இங்ஙனே முனிவன் பேசின பேச்சுக்களையெல்லாம் ஏகாந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்த இராமபிரான் 'சேஷபூதனுய்ப் பரதந்திரனுய்ப் பிறக்க வேணுமென்று ஆசைப்பட்டு வந்து பிறந்த நம்மைப் பரமாத்மாவென்று வெளியிட்டுவிட்டாரே! இது நமது நினைவுக்குத் தகுதியன்றே; மேலும் இந்த விச்வாமித்திரர் இதுவரையில் எத்தனையோ அரியபெரிய வேள்விகளையும் தவங்களையும் இயற்றியிருக்கிறுர்; அப்போது ஒருவரையும் துணைவேண்டினவரல்லரிவர்; இப்போது இவர் மிகச் சிறிதாகச்செய்ய நினைத்திருக்கிற ஆறு நாளைய வேள்விக்குத் துணை வேண்டிவந்தது வெறுமனல்ல; நம் தந்தையார் சதுரங்க பலத்தோடு தாம் வந்து அவலீலையாக வேள்வியைக் காத்துத் தருவதாகச் சொல்லவும் அதையும் மறுத்து நம்மையே வேண்டிக் கொணர்ந்தவிம்முனிவர்க்கு ஏதோ விசேஷமானதொரு கருத்து இருக்கவேண்டும். நம்மை ஏவிக் காரியங்கொள்ள நினைத்தே (அதாவது நாம் ஆசைப்பட்ட சேஷத்வத்தை உலகமறியச் செய்யக் கருதியே) நம்மை வேண்டிக் கொணர்ந்தார்போலும்' என்று மருமமறிந்துகொண்டு இராமன் அம் முனிவரிடம் கைகூப்பி ஒன்று விண்ணப்பஞ்செய்தான்;—'இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்" என்றுன். இதன் பொருளாவது, முநிஸார்வபௌமரே! நானும் என் தம்பியான லக்ஷ்மணனும் உம்முடைய கட்டளைப்படி நடந்துகொள்ள வந்தவர்கள்; எப்போதும் உமது அருகிலேயேயிருந்து நீர் நியமிக்கும் குற்றேவல்களைச் செய்ய நாங்களிருவரும் காத்திருக்கிறேம்; நீர் கூசாமல் எங்களுக்கு எவ்விதமான கட்டளையுமிடலாம்; உமக்கு என்ன பணிவிடை செய்யப் பெறுவோமென்று எதிர்பார்த்திருக்கிறுமென்பதாம். ஆக, ஆஜ்ஞாபகனை நான் ஆஜ்ஞாப்யனுகைக்கு ஆசைப்பட்டது தான் (நேய:) என்பதனுல் தெரிவிக்கப்பட்டதாகிறது. இனி அடுத்த திருநாமத்திற்குச் செல்வோம்.

.... .... .... .... *

11. நய:=அந்யாந் ஸர்வாந் ஸ்வயம் நயதீதி நய:. பிறருடைய கட்டளையைத் தான் எதிர்பார்த்து அப்படியே நடத்துகொள்வதாகக் கீழ்த்திருநாமம் காட்டிக் கொடுத்தது. *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* என்று ஓதப்படுகிற பகவானுக்கு அந்த நேயத்வம் [ஆஜ்ஞாப்யத்வம்] ஸ்வேச்சையினுலாயது; நிருபாதிகமாகவுள்ள தன்மையைச் சொல்லுமிடத்து ஸர்வநிர்வாஹகத்வமேயன்றே அஸாதாரணமாகச் சொல்லுகிறது. இராமபிரான் தன்னைப்பற்றித் தன்வாக்காலே சொல்லிக்கொள்ளும்போது *ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்* இத்யாதியாக எங்ஙனே சொல்லிக்கொண்டாலும், பிறர் சொல்லும்போது அவனுடைய பெருமையைப் பரக்கச் சொல்லியிருக்கவில்லையா? *சரண்யம் சரணஞ்ச த்வாம் ஆஹுர் திவ்யா மஹர்ஷய: .. ஜகத் ஸர்வம் சரீரம் தே ....*இத்யாதியாகவன்றே

பிரமன் சொல்லிவைத்தது. ஆகவே (நேய:) என்கிற கீழ்த்திருநாமத்திற்கு எதிர்த் தட்டான (நேதா) என்னுந்திருநாமத்தின் அர்த்தமே (நய:) என்பதிலுள்ளதென்று கொள்ளலாம். அன்றிக்கே, நயதீதி நய:—கொண்டுபோகிறவன் என்றபடி. இராமபிரான் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளும்போது தான் ஒருவனுக எழுந்தருளவில்லையே; *அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி* என்று ஸ்ரீகுல சேகரப் பெருமாளருளிச் செய்தபடியே சராசரங்களையுமன்றோ உடன் கொண்டு சென்றது (இதனைச் சிறிது விவரிப்போம்;) *முனிவன் வேண்டத் திறல்விளங்கு மிலக்குமனைப் பிரிந்தான் தன்னை* என்று குலசேகரர் பணித்தபடியே இளைய பெருமாளைவிட்டுப் பிரிந்ததனால் தரிக்கமாட்டாமல் மிகவும் கிலேசமடைந்த இராமபிரான் ராஜ்யத்தைவிட்டு எழுந்தருளத் தொடங்கியபோது அயோத்யா நகரத்து உயிர்களெல்லாம் பெருமாளைச் சரணமடைந்து 'தேவரீர் எங்குச் சென்றாலும் அடியோங்களையும் கூடவே அழைத்துக்கொண்டு செல்லவேண்டும்' என்று பிரார்த்திக்க. ஸ்ரீராமன் அவர்களது பத்திப்பெருங்காதலைக் கண்டு 'அப்படியே யாகட்டும்' என்றருளிச்செய்து அனைவரையும் தன்னைப் பின்தொடர்ந்துவருமாறு பணித்தருளிப் பயணப்பட்ட வளவிலே. அந்நகரத்திலிருந்த மனிதர்களேயன்றி விலங்கு பறவை முதலிய அஃறிணையுயிர்களும் அகமகிழ்ந்து பெருமாளைப் பின் செல்ல, இங்ஙனம் பலரும் புடைசூழ பகவான் ஸரயூநதியில் இறங்கித் தன்னடிச் சோதிக்கெழுந்தருளும்போது தம்மிடத்து இடையறாத அன்புகொண்டு பின்பற்றிச் சரயுவில் மூழ்கி உடம்பைத்துறந்த எல்லாவுயிர்கட்கும் பிரமலோகத்திற்கு மேற் பட்டதாய்ப் பரமபதம்போலவே மீட்சியில்லாததான ஸாந்தானிக மென்னும் உலகத்தையளித்தனரென்பது இதிஹாஸம். இங்ஙனே நயனம் பண்ணின படியைக் காட்டும் (நய:) என்கிற திருநாமம். வராஹ சரமச்லோகத்தில் "அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்" என்று சொன்னவரேயன்றோ.

.... .... .... .... .... ....

12. அநய:=இதற்கு பாஷ்யத்தில் பட்டர் அருளிச்செய்திருக்கும் ரஸவத்தர மான பொருளை முன்னம் விவரிக்கிறேன். "அய: சுபாவஹோ விதி:; ஸ: அஸ்மாத் அந்யோ ஜநாநாம் நாஸ்தி இதி அநய:" என்பது பகவத்குணதர்ப்பண ஸ்ரீஸூக்தி. அமரகோசத் தில் "அயச் சுபாவஹோ விதி:" என்னப்பட்டது. நன்மைபயக்கும் செயலுக்கு அய மென்று பெயர்; இராமனைக் காட்டிலும் நன்மை செய்வார் வேறுயாருமிலர் என்பது தாற்பரியமாகத் தேறும். ஸ்தோத்ரரத்னத்தில் *அநுத்தமம் பாத்ரமிதம் தயாயா:* என்றவிடத்தில் 'அநுத்தமம்' என்பதற்குப்போல இங்கு 'அநய:' என் பதற்கும் பஞ்சமீ பஹுவ்ரீஹிஸமாஸம் பொருத்தமுடையதேயாம். தீங்கிழைப்ப வர்களுக்கும் நன்மை புரிவதையே தன்மையாகக் கொண்டவரன்றோ பெருமாள். *நஸ்மரத்யபகாராணாம் சதமப்யாத்மவத்தயா, கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி* என்றன்றோ அயோத்யாவாஸி ஜனங்கள் ராமகுணகீர்த்தநம் பண்ணிற்று. மேலெடுத்த சுலோகத்தில் [கதஞ்சிதுபகாரேண] என்றதன் பொருளை ஆழ்ந்து அறிய வேணும். பிறர் செய்வது உண்மையில் உபகாரமன்று; அவர்கள் செய்தது அபகார மாகவேயிருந்தாலும் கதஞ்சித் உபகாரமாக ஆக்கிக்கொள்ளப்படுகின்றதென்கை. இதனை ஸ்ரீவசனபூஷணத்தில் (4-1) "நன்மையென்று பேரிடலாவதொரு தீமையுங் காணாதே ...தனக்கேற இடம் பெற்றவளவிலே 'என்னூரைச் சொன்னாய் என்

பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள்விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்றாப்போலே சிலவற்றையேறிட்டு மடிமாங்காயிட்டு .." இத்யாதி திவ்ய ஸூக்திகளாலறிக. இப்படியாக ஏறிட்டு அநுக்ரஹித்தது ராமாவதாரத்திலுண்டோவென்னில்; ஓரிடம் காட்டுவோம். ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னததில் வாயஸரக்ஷணத்தை யருளிச்செய்யுமிடத்து "தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதிதயாலு:" என்றருளிச்செய்தார். இங்கு "ப்ரணதஸ்ய வாயஸஸ்ய தயாலுः* என்னாதே [ப்ரணத இதி தயாலு;] என்றதன் உட் கருத்தையறிந்து ஸ்தோத்ர பாஷ்யத்தில் பணித்திருப்பது—"தயார்த்ரபுத்த்யா ப்ரணதத்வேந பரிக்ருஹ்ய இத்யர்த்த:' என்று. அதாவது, ப்ரணதியை யுத்தேசித்துக் காகம் வந்ததில்லை; எங்குந்திரிந்து செயல் மாண்டு புகலிடமற்று வந்துவிழுந்ததத்தனை. அந்த வீழ்ச்சியையே ப்ரணதியாகக்கொண்டு பெருமாள் காத்தருளினர் என்கை. விபீஷண அபயப்ரதாந ப்ரகணத்தில் "ந ஞ்யஜேயம் கதஞ்சந" என்றது இங்கு சிகரமாக நினைக்கத்தக்கது.



அதவா, அநய: என்பதற்கு 'ந வித்யதே நய; யஸ்மிந் ஸ:' என்று கொண்டு நயமில்லாதவர் என்கிற பொருளுங்கொள்ளலாம். நயமாவது நீதி: இராமனை நீதியற்றவரென்று சொல்லலாமோ? கோபிகள் கண்ணனை நோக்கி "நீரிலே நின்றயர்க்கின்றோம் நீதியல்லாதன செய்தாய்" என்கிறார்கள். அப்படி இராகவனை நோக்கி யாரும் சொன்னதில்லையே; வாலி போல்வார் சொல்வது பரமார்த்தமாகக் கொள்ளத் தகுமோ? என்று சங்கை தோன்றும். அநியாயமான செய்கையைச் செய்பவரென்று பொருளன்று. நீதியாவது நியதி; இராமபிரானுடைய செயல் ஒரு நியதியிலே [வ்யவஸ்தையிலே] அடங்குமதன்று என்று தாற்பரியங்கொள்க. (இதன் விவரணம் கேண்மின்.) பரமபூஜ்யரான பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமத்திலே அமுதுசெய்தாரென்று கேள்விப்படுமாபோலே சபரி கையாலே அமுது செய்தருளினரென்றுங் கேள்விப்படுகிறோம். விச்வாமித்ரமுனியை நாதராகக் கொண்டாரென்று கேள்விப்படுமாபோலே *ஸுக்ரீவம் நாதமிச்சதியென்றும் *ஸுக்ரீவம் சரணம் கத:* என்றும் கேள்விப்படுகிறோம். இப்படியாக ஒரு நியதியில்லையாயிற்று ராமகாரியங்களில். ஸங்கல்பஸூர்யோதயத்தில் "பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே" இத்யாதி பணித்திருப்பதைக்கொண்டு ரஸிக ஹ்ருதயங்கமமாக நிர்வஹிக்கும்படி இது.



13. வீர:=பகவானுடைய திருக்குணங்களில், வீர்யம், சௌர்யம், பராக்ரமம் என மூன்று குணங்கள் சேர்த்து அநுஸந்திக்கப்படுவதுண்டு. இம்மூன்று சொற்களுக்கும் பொருளில் வாசியில்லைபோல் தோன்றினாலும் வாசியுண்டு. எதிரிகளின் சேனை எவ்வளவு பிரபலமாக இருந்தாலும் அதைக்கண்டு அஞ்சாமை (1), அந்தச் சேனையினுள்ளே ஒருவனாகவே புகுந்து எதிரிகளை அநாயாஸமாகக் கொன்று முடிக்கும் வல்லமை (2), அப்படிச் செய்யுமளவில் தனக்குச் சிறிதளவேனும் பங்கம் நேராதபடி ஸகலவித பங்கங்களும் எதிரிகளுக்கே சாரநிற்றல் (3), என்றிங்ஙனே மூன்று வகையான ஆற்றல்கள் பெரும் போர் வீரர்களுக்கு இருக்கவேண்டியவையுண்டு. இம்மூன்றையுஞ் சொல்லும் சொற்களாக வீர்ய சௌர்ய பராக்ரம சப்தங்களைக்

கொள்ளலாம் இங்கு வீர: என்று வீர்யமொன்று மாத்திரமே சொல்லப்பட்டிருந்தாலும் மற்றையிரண்டும் உபலக்ஷணமாகக் கொள்ளத்தக்கன அல்லது உள்ள சொல்லிலேயே (அதாவது வீர: என்ற சொல்லிலேயே) அம்மூன்று பொருள்களையும் சேர அநுஸந்தானம் செய்யவுமாம். ஸ்ரீராமாயணத்திலும், மற்றும் இராமபிரானைப்பற்றிப் பேசும் பல நூல்களிலும் இராமனை வீரனென்றும் சூரனென்றும் "பராக்ரமசாலியென்றும் பாராட்டிக்கூறுவது விசேஷமாகக் காணத்தக்கது. இராமனுக்கு மஹாவீரனென்றே ஒரு திருநாமமுண்டு. "ஜயஜய மஹாவீர!" என்றே ரகுவீரகத்யத்தின் தொடக்கம். வீரராகவனென்றே ஒரு திவ்யதேசத்தில் திருநாமம்பெற்று விளங்குகின்றமை ப்ரஸித்தம். பவபூதிமஹாகவி மஹாவீரசரிதமென்றே பெயரிட்டு நூலியற்றினன். ஆழ்வார்கள் இராமனது செயலைச் சொல்லி வீரனென்றே வாய் வெருவுவர்கள்; "இலங்கை மன்னனைந்தொடைந்து பைந்தலை நிலத்துகக் கலங்க வன்று சென்று கொன்று வென்றிகொண்ட வீரனே!" "மாறுசெய்த வாளரக்கன் நாளுலப்ப அன்றிலங்கை நீறு செய்து சென்றுகொன்று வென்றிகொண்ட வீரனு" என்றுமுள்ள [திருச்சந்த விருத்தம்] பாசுரங்கள் காண்க. இவை யெல்லாவற்றிலுங்காட்டிலும் எதிரி கைபாலே விடுநீட்டென்னுங் கணக்கிலே இராவணனே வியந்துபோற்றும் வீரியம் இராமனுக்குள்ளது. [வால்மீகி. யுத்த. 106-6] "சத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்பது இராவணனுடைய மொழி. இராமனை ப்ரக்யாத வீர்யனென்று இராவணன் தன்வாயினால் போர்க்களத்திற் சொல்லுவதானது அந்த வீர்யத்தைத் தான் மிக நன்றாக வநுபவித்ததனாலன்றோ! "விக்ரமை: ரஞ்ஜநீயஸ்ய" என்றும் அடுத்தபடியே சொல்லுகிறான். இங்ஙனே சொல்லும்படியாக இராமன் செய்த வீரச்செயல்கள் பலபல விருப்பினும் ஒன்றெடுத்துக் காட்டுவோமிங்கு. யுத்த காண்டத்தில் தொண்ணூற்று நான்காம் ஸர்க்கம் காண்க. அங்கு மூலபலம் திரண்டவன்று இராமனுடைய அதிமாநுஷப் போர்வல்லமையைப் பேச வான்மீகி முனிவரும் தடுமாறுகின்றார். "சிந்நம் பிந்நம் சரைர் தக்தம் ப்ரபக்நம் சஸ்த்ரபீடிதம். பலம் ராமேண தத்ருசுர் ந ராமம் சீக்ரகாரிணம்" என்று, இராமனால் பலவாறு தகர்ப்புண்ட அரக்கரது சேனைகளைக் கண்டார்களொழிய பம்பரமாகச் சுழல்கின்ற இராமனை ஒருவரும் காணமாட்டிற்றிலர் என்கிறார். மேலே *தே து ராமஸஹஸ்ராணி ரணே பச்யந்தி ராக்ஷஸா:* என்று ஆயிரக்கணக்கான ஸ்ரீராமமூர்த்திகளைக் கண்டார்களென்கிறார். உடனே *புந: பச்யந்தி காகுத்ஸ்தம் ஏகமேவ மஹாஹவே* என்று, அந்தப் போர்க்களத்தில் இராமனொருவனையே கண்டார்களென்கிறார். இராமனைக் காணவேயில்லையென்பது, ஆயிரக்கணக்கான ராமர்களைக் கண்டார்களென்பது, ஒரு ராமனையே கண்டார்களென்பது—ஆகவிப்படி ஒன்றோடொன்று சேராதவண்ணம் பேசும்படியாக வன்றோ பெருமாள் மிக விசித்திரமான போர்த்தொழில் நிகழ்த்திற்று.

திருவாய்மொழியில் (8—6—3) *ஒருவரிருவரோர் மூவரென நின்று, உருவு கரந்து உள்ளுந்தோறும் தித்திப்பான்* என்ற பாசுரத்திற்குப் பூருவாசாரியர்கள் பொருள் நிர்வஹித்திருக்கிறவிதம் இதர பண்டிதர்களின் புத்திக்குச் சிறிதும் எட்டமாட்டாதது. ஒருவரிருவரோர் மூவரென நின்றதும் உருவுகரந்ததும் எப்போதென்று தெரிந்துகொள்ள முடியாதபடி ஆழ்வாருடைய பாசுரம் தோன்றி

யுள்ளது. இதற்குக் கீழ்ப்பாட்டு *செருக்கடுத்தன்று திகைத்த வரக்கரை உருக் கெடவாளிபொழிந்த வொருவனே* என்று முடிந்திருக்கிறது. மேற்பாட்டின் முன்னடிகட்குக் கீழ்ப்பாட்டின் பின்னடிகளோடு அந்வயமென்று கண்டு உரை செய்தருளியுள்ளார்கள். இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் இவை காண்மின்;—''ஒருவரிருவரோர் மூவரென நின்று உருவுகரந்து—உருக் கெடவாளி பொழிந்தவொருவன் என்று கீழோடே அந்விதமாகக்கடவது. மூலபலம் சாம்படி அருளுகிறவன்று முந்துற ஒருவனாய்த்தோற்றி, சாரிகையில் வேகம் மிகமிக இருவரும் மூவருமாய்த்தோற்றி, வேகம் மிக்கவாறே இந்த்ரிய ஸம்யோகத்துக்கு இடமில்லாதபடியாகையாலே ரூபக்ரஹணம் அரிதாகி உருக்கெட வாளிபொழிந்த வொருவனென்று அந்வயம். வ்யாபரித்த சடக்காலே ரூபம் கண்ணுக்குப் பிடிபடாதொழிகை'' என்று. இதனால் இராமனது வீரம் வாசாமகோசரமென்றதாயிற்று. .... .... .... *

14. சக்திமதாம் ச்ரேஷ்ட:= அபரிமித சக்தியுக்தனென்கை. இராமன் மஹாசக்திமானாயிருக்கும்போது இராவணனை ஒரு நொடிப்பொழுதில் கொன்றிருக்கலாமே அங்ஙனங்கொல்லாது வெகு ப்ரயாஸங்கள் பட்டதாகத் தெரிகிறதே. அஃது என்? என்று சிலர் கேட்கக்கூடும். கேண்மின்; ''பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை'' என்று ஆண்டாளும் ''சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறைவன் தலைபத் துதிரவோட்டி ஓர்வெங்கணையுய்த்தவன்'' என்று திருப்பாணாழ்வாரு மருளிச்செய்தபடியே ராவண ஸம்ஹாரத்தைப் பெருமாள் அவலீலையாகவேதான் செய்தார். அதில் ஐயமொன்று மில்லை. 'எப்படியாவது ராவணன் உடன்பட்டு வழிபட்டு உஜ்ஜீவிக்கவும் ஜீவிக்கவும் ப்ராப்தமாமோ?'' என்கிற நசை பெருமாளுக்கு இருந்தமையினாலேயே அவனை ஸம்ஹரிப்பதில் காலதாமதம் செய்யப்பட்டதென்கிற தத்துவம் உணரத்தக்கது. இராவணனைக்காட்டிலும் பன்மடங்கு வலிமைமிக்கவனென்று ப்ரஸித்தி பெற்றிருந்த வாலியை அநாயாஸமாக முடித்தவர் பெருமாள். [ஸுந்தரகாண்டம் ஸர். 51 ச்லோ. 11] திருவடி இராவணனுக்கு ஹிதோபதேசம் செய்கையில் *த்வயா விஜ்ஞாதபூர்வச் ச வாலீ வாநரபுங்கவ:, ராமேண நிஹத ஸங்க்யே சரேணைகேந வாநர: * என்று, அப்பா ராவணா! வாலியென்கிற வாநரேச்வரரை ஏற்கெனவே நீ அறிவாயன்றோ; அவர் இராமனால் ஒரே அம்பினால் முடிக்கப்பட்டார்காண்' என்கிறார். அன்றியும் இராவணனைப் பலவாறு பங்கப்படுத்தியவன் கார்த்தவீரியார்ஜுனன்; அன்னவனைப் பரசுராமன் தனது கோடாலிப்படையினால் ஆயிரங்கைகளையும் வெட்டிக் கொன்றவன். அப்பரசுராமன் இராமபிரானிடம் பட்டபாடு தெரிந்ததே. இத்தகைய ஒப்புயர்வற்ற ஆற்றல்பெற்ற இராகவன் இராவணனைச் சங்கரிக்கச் சிரமப்படவேணுமோ? சிரமப்பட்டதாகக் கதையிலே கண்டால் ஸத்யஸங்கல்பனும் மஹாவீரனுமான இராமன் எதற்காக இப்படிச் சிரமப்பட்டாரென்று ஆராயவேண்டுமன்றோ? சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜனஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய கரனிடஞ்சென்று செய்தியறிவித்துப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தையுண்டாக்க, அவன் பதினாலாயிரம் ஸேனாதிபதிகளையும் ஸேனைகளையும் இராமனோடு போர்புரியவனுப்ப, இராகவன் அவர்களத்தனை பேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட, பிறகு கரன்தானே நேரில் வந்து எதிர்க்க

இராமன் "அஸஹாயசூர!" என்று ரகுவீரகத்யத்தில் விளிக்கும்படியாக லக்ஷ்மணனையும் துணைகொள்ளாமல் ஏகாகியாய் அவனது தலையை யறுத்திட்டதும் ப்ரஸித்தம். 'சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி!" என்று வயிறு பிடித்த மஹரிஷிகளும் வியக்கும்படி அவலீலையாகவன்றோ நீறு செய்தது. அத்தகைய பேராற்றல்பெற்ற பெருவீரனுக்கு இராவணன் ஒரு பதார்த்தமோ? ஒரேயடியில் அவனைத் தொலைக்கமாட்டாமையில்லை; எவ்வகையினாலாவது அவன் அழிமுகத்தை வருகிறானோவென்று பார்த்திருந்தாரத்தனை. இனி அடுத்த திருநாமத்திற்குச் செல்வோம்.

15 தர்ம:=ஸ்ரீராமபிரானை ஸாக்ஷாத் தர்மமாகச் சொல்லியிருப்பது பலவிடங்களில். இராவணன் இலங்கையிலிருந்து பஞ்சவடிக்கு ஓடிவந்து ஸீதாபஹாரத்திற்கு மாரீசனைத் துணைவேண்டினபோது அவன் ராவணனுக்குப் பலவாறு ஹிதோபதேசங்கள் செய்கிறான். அதனிடையில் (ஆரண். 37-13.) *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்றான். 'கைகால் முளைத்து நடையாடும் தருமம் இராமன்' என்று ஆஸுர ப்ரக்ருதியான மாரீசன் சொல்லுகிறான். ராவணவதானந்தரம் இலங்கையிலே வந்து துதிக்கின்ற தேவவர்க்கத்தில் பிரமன் *பவாந் நாராயணோ தேவ: *என்றபின் *லோகாநாம் த்வம் பரோ தர்ம:* என்றான். கீதையில் "தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமியுகேயுகே" என்று தர்மஸ்தாபனத்திற்காகத் தான் அவதரிப்பதாகச் சொன்ன பரமபுருஷன் *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்று ஸகல தருமங்களையும் விடும்படி சொன்னது கூடாது; விட்டுவிடு என்றதோடு நிற்காமல் "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று தன்னைப் பற்றச் சொல்லுகையாலே ஸாக்ஷாத் தர்மம் தானேயென்கிற தத்துவம் வெளியிடப்பட்டதாகிறதன்றோ. நாம் சிரமப்பட்டு ஸாதிக்க வேண்டிய தர்மம் ஸாத்ய தர்மமெனப்படுகிறது. அங்ஙனன்றிக்கே எப்போதும் ஸித்தமாயிருக்கிற தர்மம் எம்பெருமான். ஸாத்ய தர்மம் அபாய பஹுளமென்றும், ஸித்ததர்மம் நிரபாயமென்றும் அறியத்தக்கது. தசரதசக்ரவர்த்தி ஸ்ரீ ராமபிரானைப் பிள்ளையாகப் பெறப்பெற்ற பாக்யசாலியாயிருந்தும் ஒரு தௌர்ப்பாக்யமுடையனாயினன். ஆஸுர ப்ரக்ருதியான மாரீசனுக்குத் தெரிந்த தத்துவம் அந்தோ! அவனுக்குத் தெரியாமலன்றோ போயிற்று. *ராமோ விக்ரஹவாந் தர்ம:* என்று அவன் சொன்னபடி வடிவெடுத்த ஸித்த தர்மமான இராமனோடு கூடி வாழ்வதை விட்டு ஆபாஸ தர்மமான ஸத்ய வசனத்தைப் பற்றி நின்று இழந்தானன்றோ அம்மன்னவன். முமுக்ஷுப்படியில் *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்றவிடத்தில் "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்குறுப்பு" என்றவிடத்து மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திரத்னங்களை அநுபவிப்பது. க்ருஷ்ணாவதாரத்தில் ததிபாண்டனுடைய கதையை அறியாதாரில்லை: தாயெடுத்த சிறு கோலுக்கு உளைந்தோடி வந்த கண்ணனை மறைத்திட்டுவைத்து 'உன்மகன் இங்கில்லை' என்று பொய் சொல்லி ஸபரிகரமாக மோக்ஷம் பெற்றுப் போனான்; தசரதன் ஸத்யவாதியென்று பேர்படைத்து நரக பர்யாயமான ஸ்வர்க்கத்தையே பெற்று நின்றான். ராமனே ஸாக்ஷாத் தர்மமென்று அறியப் பெருததனாலானதன்றோவிது.

பெருமாள் பிராட்டியோடு கூடியிருந்தகாலத்தில் செய்தவுபந்யாஸங்களில் சிறந்தவுபந்யாஸமாக வொன்றைத் திருவடியிடம் சொல்லுகிறாள் பிராட்டி—(ஸுந்தர.38-41.) *ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம: த்வத்த ஏவ மயா ச்ருத:* என்று. ஆந்ருசம்ஸ்யமாவது இரக்கம்; அதுதான் பரமதர்மமென்று பெருமாள் உபந்யஸிப்பது

வழக்கமாம். 'கருணையே வடிவெடுத்தவன் காகுத்தன்' என்று ப்ரஸித்தம். தசாவதார ஸ்தோத்ரத்தில் *இச்சாமீந விஹாரகச்சபேத்யாதி ச்லோகத்தில் ஒவ்வோரவதாரத்தையும் ஒவ்வொரு விசேஷணமிட்டுச் சொல்லிவருகையில் இராமனைக் கருணாகாகுத்ஸ்த! என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. வாலிவதமான பிறகு *ஸஞ்ஜாத பாஷ்ப: பரவீர ஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ* என்னும்படி நின்ற பெருமாளைக் கருணாகாகுத்ஸ்தனென்றுதானே சொல்லவேண்டும், இனி அடுத்த திருநாமத்திற்குச் செல்வோம். .... .... .... ....

16. தர்மவிதுத்தம:. தர்மஜ்ஞர்களில் தலைவன் இராமபிரான் என்றவாறு. தர்மத்தை நன்கறிந்தவனென்கை. ஆண்டாள் கண்ணபிரானுக்குத் *தருமமறியாக் குறும்பனென்று பிருதுசாத்தினாள். அதற்கு நேர்மாறாக இராமபிரான் தர்மஜ்ஞர்களில் தலைவனாயிருப்பன். பிராட்டி இராவணனுக்கு ஹிதமுபதேசித்தருளுங்காலத்தில்* விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞ:* என்று பெருமாளை தர்மஜ்ஞரென்று கூறியிருப்பது ப்ரஸித்தம். அவள் திருவுள்ளம்பற்றின தருமம் இன்னதென்பதை அவள்தானே அடுத்தபடியாகக் கூறுகின்றாள் *சரணாகதவத்ஸல:* என்பதனால். சரணாகதர்களிடத்திலே அன்பு பூண்டிருப்பதுதான் பெருமாள் கடைப்பிடித்த தருமமென்றும் அதை அவர் நன்கறிந்தவரென்றும் சொல்லிற்றாயிற்று. நன்கறிந்தவரென்றால் அறிந்திருப்பதுமட்டும் பொருளன்று. அறிவுக்குப் பயன் அனுட்டானமாதலால் அந்த தருமத்தை நன்கு அனுட்டிப்பவர் என்கிறவரையில் பொருளாகத் தேறும். ஸ்ரீராமாயணத்தில் சரணாகதி செய்தவர்கள் யார் யார்? அவரவர்களிடத்திலே பெருமாள் காட்டின வாத்ஸல்யம் எத்தகைத்து? என்று விமர்சிக்கவேண்டும். இதற்குமுன் சரணாகதியாவது என்? என்கிற விமர்சம் மிக முக்கியமானது. ஸாரமாகத் தெரிவிப்போமிங்கு. சரணாகதியென்றாலும் ப்ரபத்தியென்றாலும் ஒன்றே. நூற்கொள்கையை ஆய்ந்து ஆழ்ந்துபார்க்குமளவில் "பகவத் ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்திதான் ப்ரபத்தியாகத் தேறுகிறது" என்கிற பூர்வாசார்ய ஸித்தாந்தமே தஞ்சமாகும். கஜேந்த்ராழ்வான் ப்ரபந்நன், த்ரௌபதி ப்ரபந்நை என்கிறோம். இவர்கள் பக்கலிலே மேலே சொன்ன லக்ஷணந்தான் ஸமந்விதமாகும். "கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே" என்னும்படியாக கஜேந்திராழ்வான் தன்னைத்தான் காப்பாற்றிக் கொள்வதாக ஸ்வப்ரவ்ருத்திபரனாயிருக்குமளவும் அவன் மீது பகவானுடைய கருணை ப்ரஸரிக்கவில்லை. அந்த ப்ரவ்ருத்தி ஓய்ந்தவாறே அரை குலையத் தலைகுலைய ஓடிவரும்படியான பதற்றம் எம்பெருமானுக்கு உண்டாயிற்று த்ரௌபதியினிடத்திலும் இத்தன்மையே பார்க்கலாம். "இரு கையும் விட்டேனோ த்ரௌபதியைப் போல" என்னும்படியான நிலைமை அவளுக்கு உண்டான பின்புதான் அவள் ரக்ஷை பெற்றாள். தன் மானத்தைத் தானே காத்துக்கொள்வதாக முயன்று தன் சேலையைத் தான் இறுகப்பிடித்துக் கொண்டிருந்த நிலைமையுண்டே அதுதான் பகவத் ப்ரவ்ருத்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியாயிருந்தது அது கழிந்தவுடனேயன்றோ புடவை சுரக்கும்படியான பகவத் க்ருபை தோன்றிற்று இந்த மருமத்தை ஸ்ரீ ராமாயணத்திலே காட்டுகிறேன் காண்மின்; காகம் சரணாகதி செய்ததாகச் சொல்லப்படுகிறது. அந்த சரணாகதியின் தன்மையை விமர்சித்துப் பார்த்தால், மேலே விவரித்த ரீதிதான் தேறும் *ஸ தம் நிபதிதம் பூமௌ* என்றபடி எங்கும் தரிப்பற்று வந்து நிலத்திலே விழுந்தமையுண்டே, அதுவேயன்றோ அவனுடைய சரணாகதியாக ஆசாரியர்களால் நிஷ்கர்ஷிக்கப்பட்டது அவனுக்கும் ரக்ஷணம் நேர்ந்

த்து. காகத்தினுடையதான இந்நிலை ராவணனுக்குமுண்டு; பிரபலமான யுத்தம் நடைபெறுகிற காலத்திலே *யோ வஜ்ரபாதாசநி ...சசால சாபஞ்ச மும்மோச வீர:* என்னும்படியான நிலைமை ராவணனுக்கு உண்டாயிற்று. அப்போது பெருமாள் ''கச்சர்நுஜாநாமி—புறப்பட்டுப்போ, விடைதருகிறேன்'' என்று சொல்லி விட்டரு ளினதுண்டே, அது தத்கால ரக்ஷணத்தில் சேர்ந்ததேயாகும். ஆத்யந்திகரக்ஷணமே பண்ணவேணுமென்கிற திருவுள்ளமும் பெருமாளுக்கு இருந்ததுண்டு; அவன் விதி வசத்தாலே மீண்டும் யுத்தத்திலே மூண்டு பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ் ருத்தி நிஷ்டனாகித் தொலைந்து போனான். அவனுக்கும் ரக்ஷணமே செய்தருளினார் பெருமாள் என்பது ஸ்ரீ ராமாயணத்தில் அந்தரங்க பரமார்த்தம். அவனுக்கு சரம ஸம்ஸ்காரம் பண்ணமாட்டேனென்று பிடிவாதமாயிருந்த விபீஷணாழ்வானை நிர்ப் பந்தப் படுத்தி அது செய்யுமாறு கட்டளையிட்ட பெருமாள் 'அவனுடைய தேஹத் திற்கு நன்மை செய்ய நினைத்த நமது நினைவு நிறைவேறாதொழிந்தாலும் அவனு டைய ஆத்மாவுக்காவது நன்மை செய்யப்பெற்றோமே!' என்று மகிழ்ந்தபடியை நினைப்பது. *மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம், க்ரியதாமஸ்ய ஸம்ஸ்கார: யதா ஹ்யேஷ ததா மம* என்கிற பெருமாளுடைய சுலோகத்திற்கு நம்பிள்ளையின் ரஸகனமான வியாக்கியானத்தை நமது அபூர்வ ராமாயணத்திலே நாம் விசதீகரித்திருப்பது காண்க. .... .... .... *

ஸஹஸ்ரநாம ராமாயணம் முற்றிற்று.

## பட்டருடைய தமிழ்ப்புலமையின் வீறு.

திருவாய்மொழி முதற்பத்தில் தூதுவிடும் பதிகமான *அஞ்சிறைய மடநாரையில் நான்காவது பாசுரமான*என்னீர்மை கண்டிரங்கியில் ஒருதமிழனுக்கும் பட்டர்க் கும் நடந்த ஸம்வாதம் ஈடு முப்பதாறாயிரத்தில் அருளிச் செய்யப்பட்டுள்ளது. அரும் பதவுரைகாரர்கள் தவறுதலாக உரைசெய்திருப்பதனால் உள்ளவாறுரைப்போம்.

பிரிவில் தரிக்கமாட்டாத என்னுடைய ஸ்வபாவத்தை நன்றாகக் கண்டு வைத்தும் 'ஐயோ? இப்படிப்பட்டவளையோ விட்டுப்பிரிவது!, ஒருகாலும் பிரியத் தகாது' என்றிராத என்னீலமுகில்வண்ணர்க்கு என்ன ஸமாஸாரம் சொல்லுவே னென்பன முன்னடிகள். முற்காலத்தில் ஒரு தமிழன் பட்டரிடத்தில் வந்து இப்பாட்டின் முதலடியில் ஒரு ஆக்ஷேபம் செய்தானாம்; அதாவது—இது பிரிந் திருக்கும் நிலைமையில் சொல்லுகிற பாசுரமேயன்றிக் கூடியிருக்கும் நிலைமையிற் சொல்லுகிற பாசுரமன்றே; பிரிந்திருக்குங்காலத்தில் தலைவியின் தன்மைகளைத் தலைமகன் பிறர்சொல்லக் காதால் கேட்கலாகுமே தவிரக் கண்ணால் நேரில் காண முடியாதன்றோ; ஆகவே, ''என்னீர்மை கேட்டிரங்கி யிது தகாதென்னாத'' என்று பாசுரமிருக்கவேண்டியது உசிதமாயிருக்க, ''என்னீர்மை கண்டிரங்கி'' என்று எப்படிச் சொல்லலாம்? என்று பூர்வபக்ஷம் செய்தானாம். பட்டர் அதைக்கேட்டு, 'பண்டி தரே! நன்கு கேட்டீர்; *புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேனவ்வளவில், அள்ளிக் கொள்வற்றே பசப்பு.* என்ற திருக்குறளும், *ஊருண்கேணியுண்டுறைத் தொக்க

பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே* என்ற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத் தெரியாதுபோலும் என்று சொல்லி அவற்றைப் பரக்க உபந்யஸித்து ஸமாதானப்படுத்தியருளினராம்; ஸமாதான விவரணம் வருமாறு:—)

*புல்லிக்கிடந்தேன்* என்ற குறள் திருக்குறளில் பசப்புறு பருவரல் என்னுமதிகாரத்தில் ஏழாவதாகும். இது நாயகியின் பேச்சு; முன்பொரு நாள் காதலரை அழுந்தத் தழுவிக்கிடந்தேன்; கை மாறுவதற்காகச் சிறிது புடைபெயர்ந்தேன்? ஒரு நொடிப்பொழுது விலகினமாத்திரத்திலும் பசலைநிறம் வந்து உடம்பெல்லாம் மூடிக்கொண்டது-என்பது இதன் கருத்து. *ஊருண்கேணி* என்ற செய்யுள் -குறுந்தொகையில் முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பதாவது. இதன் கருத்தாவது—ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப்பெறுகிற கேணியினுள்ளே படர்ந்துகிடக்கின்ற பாசியைப்போன்றது பசலைநிறம்; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்ட விடங்களில் பாசி நீங்கும்; கையை எடுத்துவிட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்; அதுபோல, கணவனுடைய கைபடுமிடங்களில் பசலைநிறம் நீங்கும்; அணைத்தகை நெகிழ்த்தவாறே அப்பசலை நிறம் படரும்; ஆதலால் பாசி போன்றது பசலைநிறம் என்றபடி. (தொடுவுழித்தொடுவுழி — தொட்டவிடங்கள்தோறும். விடுவுழிவிடுவுழி — விட்ட விடங்கள்தோறும். பரத்தலான் — வியாபிக்கிறபடியினாலே.) பிரிவாற்றாமையினால் ஸ்த்ரீகளின் மேனியில் தோன்றும் நிறவேறுபாடு பசலைநிறமெனப்படும். நாயகனை விட்டுப் பிரிந்தகாலத்திலே நாயகியினுடலில் இந்த நிறவேறுபாடு தோன்றுவது ஆச்சரியமன்று; ஒரு படுக்கையிலேயே படுத்துக் கூடியிருக்கும்போதே க்ஷணகாலம் கைநெகிழ்ந்தவளவில் இந்தப் பசலைநிறம் படர்கின்றதென்றால் பிரிந்த நிலைமையிற் கேட்கவேண்டியதில்லையன்றோ.

பட்டரிடத்தில் ஆக்ஷேபம் செய்த தமிழனுக்கு இப்போது என்ன ஸமாதானமாயிற்றென்னில், இப்பாட்டு பிரிவுகாலத்திற் சொல்லுவதானாலும் கூடியிருந்த காலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே நினைப்பூட்டுவதாதலால் கேட்டிரங்கி என்ன வேண்டியதில்லை; கண்டிரங்கி என்றே சொல்லத்தகும் என்றதாயிற்று. .... .... *

—:o:—

ஸ்ரீ:

# கலியனும் கண்ணனும்

## திருமங்கையாழ்வார்க்கும் கண்ணனுக்கும் 12 படிகளால் ஒற்றுமை

ஸௌர்யத்வாத் ஸௌசிதத்வாத் அபஹ்ருதிகரணாத் கோகுலோத்தாரகத்வாத்
பத்தத்வாத் சாஸ்த்ரதத்வாத் படுஜநஸஹயோகாச்ச லக்ஷ்மிபதித்வாத்
நீலத்வாத் நீதிமார்க்கச்யுதி மதிபஜநாத் அந்தச் சாவதாராந்
சத்ருத்வம்ஸோத்படத்வாத் கலிரிபுமுநிராட் க்ருஷ்ணதுல்யோ விபாதி

இந்தச்லோகத்தினால் கண்ணனுக்கும் கலியனுக்கும் பன்னிரண்டுபடிகளாலே ஸாம்யம் நிர்வஹித்திருக்கின்றோம். இதுதன்னை ஒவ்வொன்றாகவெடுத்து விவரிப்போம்

1. [ஸூர்யத்வாத்] ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கண்ணபிரானுடைய திருவவதாரத்தைக் கூறுகின்ற பராசரமஹர்ஷி கண்ணனவதரித்தானென்று சொல்லவில்லை, *ததோகிலஜகத்பத்மபோதாய அச்யுதபாநுநா, தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா.* என்கிற ச்லோகம் க்ருஷ்ணாவதாரத்தைக் கூறுமது. இதில் தேவகியாகிற பூர்வஸந்தியையிலே க்ருஷ்ண ஸூரியன் ஆவிர்ப்பவித்தான் என்றது. இதனால் க்ருஷ்ணன் ஸூர்யனென்னுமிடம் ஸித்தித்தது. கலியனும் ஸூர்யனாகவே பேசப்பட்டிருப்பதை *கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்* என்கிற அவருடைய ஸ்துதிபத்யத்தினால் உணரலாம். ஆக இருவரும் ஸூர்யர்களென்னு மத்தாலே ஸாம்யம் பெற்றனர்.

2. [ஸூசிதத்வாத்] ஸூசிப்பிக்கப்பட்டபடியாலே என்பது இதன் பொருள். கண்ணனுடைய அவதாரமும் கலியனுடைய அவதாரமும் இவர்கள் அவதரிப்பதற்கு வெகுநாள் முன்னமே ஸூசிப்பிக்கப்பட்டிருந்தது எங்ஙனே யென்னில்; கண்ணனுடைய திருத்தாயாரான தேவகிப்பிராட்டி கம்ஸனுக்கு உடன்பிறந்தவள். அக்கம்ஸன் தேவகிக்கு மிகச் சிறப்பாக விவாஹமஹோத்ஸவத்தை நடத்திவைத்துப் பரமப்ரீதியுடன் தம்பதிகளை ரதத்தில் வீற்றிருக்கச் செய்து அதனைத் தானே ஓட்டிக்கொண்டு போகையில் ஆகாசவாணியொன்று செவிப்பட்டது; 'இத்தேவகியின் எட்டாவது குழந்தையினால் உனக்கு ம்ருத்யு விளையும்' என்று அந்த வாக்கு அப்படியே பலித்தது. இதனால் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருவவதாரம் முன்னமே ஸூசிதமாயிற்றென்பது விளங்கிற்று. இது போலவே திருமங்கையாழ்வாருடைய திருவவதாரமும் முன்னமே ஸூசிதமாகியுள்ளது. திருவாய்மொழியில் (5-2-1) *கலியுங் கெடும் கண்டு கொண்மின்* என்கிற பாசுரத்தை ஆகாசவாணி யென்றே கொள்க. தவறுமல் பலிப்பது ஆகாசவாணி. இந்தப் பாசுரமும் தவறுமல் பலித்திருக்கின்றது ஆசார்யஹ்ருதயத்தில் "கலியும் கெடும் போலே ஸூசிதம்" என்றவிடத்து வியாக்யானத்தில் மணவாளமாமுனிகள் "இவர் தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே *கலியுங்கெடும்* என்று—திருமங்கையாழ்வார் உடையவர்போல்வார் அவதரித்துக் கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல் வரும் அம்சத்தை தர்சித்து அருளிச்செய்தாப்போலே "என்று திருவாய்மலர்ந்தருளியுள்ள திவ்யஸூக்தி இங்கே அநுஸந்தேயம். கண்ணன் கம்ஸவதம் செய்தவன்; இவ்வாழ்வார் கலிபுருஷவதம் செய்தவர்.

3. [அபஹ்ருதிகரணாத் கண்ணன் கள்வனென்று ப்ரஸித்திபெற்றதுபோலே இவ்வாழ்வாரும் கள்ளரென்று ப்ரஸித்திபெற்றவர். 'வெண்ணெய் களவுசெய்தான், பெண்களைக் களவுசெய்தான்' என்று ஸ்ரீக்ருஷ்ண சரித்திரங்களிலே வாசிக்கிறோம், இவருடைய சரித்திரத்திலும் திருவரங்கம் பெரியகோயிலில் கோபுர ப்ராகார மண்டபாதி நிர்மாணத்திற்காகப் பலபல களவுகள் செய்த செய்திகளை வாசிக்கின்றோம். ஆக இத்தகைய கள்வத்தினாலும் ஸாம்யம்.

4. [கோகுலோத்தாரகத்வாத்] *ஆயர்பாடிக்கணிவிளக்கே* என்றும், *ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கை* என்றும் சொல்லுகிறபடியே கண்ணன் திருவாய்ப்பாடியில் திருவவதரித்துக் கோகுலத்தை உத்தரிப்பித்தமை பிரஸித்தம்.

இவ்வாழ்வாரும் கோகுலோத்தாரணம் செய்ததுண்டு; எங்ஙனே யென்னில்; *ந்ருபசு:* என்று ஆளவந்தாரும் *வ்ருத்தியா பசுர் நரவபு:* என்று மணவாள மாமுனிகளும் அருளிச்செய்தபடி நாமெல்லாரும் பசுக்களேயன்றோ. *ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ் ஸமாந:* என்றும் ப்ரஸித்தமாகவுள்ளது. ஞானமும் நன்னடத் தையு மொன்றுமின்றிக்கே யிருப்பதனால் கோக்களாயிருக்கின்ற நம்முடைய குலத்திலே ஆழ்வார் வந்து அவதரித்து உத்தாரகராயினர்.

5. [பத்தத்வாத்] கண்ணன் *மத்துறு கடைவெண்ணெய் களவினிலுரவிடை யாப் புண்டு* என்றும் *கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்* என்றும் சொல்லுகிறபடியே கட்டுண்டமை ப்ரஸித்தம். இவ்வாழ்வாரும், பகவதாராதனத் திற்காட்டிலும் பரமபாவனமான பாகவதாராதனத்தில் ஊன்றியிருந்தகாலத்தில் தாம் அரசனுக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பொருளுமுட்படச் செல்வம் முழுதை யும் செலவிட்டுவர, அச்செய்தியைச் சிலர் சொல்லக்கேட்ட கொற்றவன் கோபங் கொண்டு இவரை ஒரு தேவாலயத்தில் சிறைவைக்கச் செய்தனனென்பது இவ் வாழ்வாருடைய சரித்திரத்தில் பிரஸித்தம், ஆக கட்டுண்டமையினால் இருவர்க்கும் ஸாம்யம் உணரத்தக்கது.

6. [சாஸ்த்ரதத்வாத்] சேதநர்களுக்கு உஜ்ஜீவநோபாயமான சாஸ்திரத்தைக் கொடுத்ததனாலே என்று பொருள், கண்ணபிரான் *அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய, நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி* என்கிறபடியே ஸகலார்த்தப்ரகாசமாய் ஸகலசேதநோஜ்ஜீவநஸாதனமான கீதா சாஸ்த்ரத்தையருளிச்செய்தான். திருமங்கையாழ்வாரும் *நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்கா நெடும்பிறவி நஞ்சுக்கு நல்லவமுதம், தமிழநன்னூல் துறைகளஞ்சுக்கிலக் கிய மாரணசாரம், பரசமயப்பஞ்சுக்கனலின் பொறி பரகாலன் பனுவல்களே* என்கிறபடியே கீதாசாஸ்த்ரத்திற்காட்டிலும் பரமோத்க்ருஷ்டமான திவ்யப்ரபந்த மஹாசாஸ்த்ரத்தை யுபகரித்தருளினார். கண்ணன் தந்த சாஸ்திரத்தை 'கீதோப நிஷத்து' என்னுமாபோலே இதையும் "பொங்குபுகழ் மங்கையர்கோனீந்த மறையா யிரம்" என்பர்கள். ஆக, சாஸ்த்ரப்ரதாநத்தாலே இருவர்க்கும் ஸாம்யம்.

7. [படுஜநஸஹயோகாத்] கண்ணபிரான் *தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டுவருவான்* என்கிறபடியே *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர்மகனை தான் செய்யும் தீமைகளுக்குத் துணைவராகப் பல சதுரர்களை உடன் கொண்டிருந்தான். திருமங்கையாழ்வாரும், நீர்மேல் நடப்பான் நிழலிலொதுங்குவான், தாளூதுவான், தோலாவழக்கன் முதலான சதுரர்களைத் தமது செய்கைகளுக்குத் துணைவராகக் கொண்டிருந்தார்,

8. [லக்ஷ்மீபதித்வாத்]. கண்ணபிரான் ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாதலால் லக்ஷ்மீபதியாவன். திருமங்கையாழ்வாரும் லக்ஷ்மீபதியாவர். எங்ஙனே யென்னில்; இவர் வளர்ந்து வருகையில் அந்நாட்டில் அண்ணன்கோயில் என்று வழங்குகின்ற திருவெள்ளக்குள மென்னுந் திருப்பதியில் மிகச் சிறந்ததொரு தாமரைப் பொய் கையில் தேவலோகத்து அப்ஸரஸ் ஸ்த்ரீகள் பலர் வந்து ஜலக்ரீடைசெய்து செல்ல அவர்களுள் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தைவிட்டு, மானுடவடிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்துநின்றளாக, அங்கு அநுஷ்டா

நத்திற்காக வந்த ஒரு வைஷ்ணவ வைத்யன் அவளைக் கண்டு செய்தி விசாரிக்க அவள் 'என்னோடு கூடவந்த மாதர்கள் என்னைவிட்டுப் போய்விட்டார்கள், தனியிருந்து அலைகின்ற என்னை நீர் பாதுகாத்தருளவேணும்' என்று வேண்டிக்கொள்ள, மலடனான அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன் மாளிகைக்கு அழைத்துப்போய் மனையாள் வசம் ஒப்பித்து, குமுதமலர் கொண்டு நின்றது காரணமாகக் குமுதவல்லியென்று அப்பெண்ணுக்கு நாமமிட்டு வளர்த்து வருகையில் அக்கன்னிகைக்கு விவாஹத்துக்குரிய பிராயம் வந்தவளவிலே அவளை வளர்க்கிற அந்த வைத்தியனுக்கு 'மஹாகுணவதியான இப் பெண்ணுக்கு ஏற்ற கணவன் உலகத்திலுளனோ' என்ற கவலையுண்டாக, அப்பொழுது அவளுடைய ரூபலாவண்ய ஸௌந்தரியங்களையும் குணநிசயங்களையும் சாரர்கள் திருமங்கை மன்னனிடம் கொண்டாடிக்கூற, உடனே அவர் அங்கு வந்து அந்த வைத்தியனிருக்கும் வீட்டிலே புக்கு அவனோடு ஸம்பாஷணை செய்து அப்பெண்ணின் வரலாற்றை வினவி அதைத் தந்தையார்வாயில் அறிந்த வளவில் 'இவளை எனக்குத் தாரைவார்த்துக்கொடுக்கவேணும்' என்று அவரை வணங்கிக் கேட்டார் அப்போது குமுதவல்லி குறுக்கிட்டு "திருவிலச்சினை திருமண்காப்பு முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமுடைய ஒரு ஸ்ரீ வைஷ்ணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்படமாட்டேன்" என்று தன் உறுதியைத் தெரிவித்தாள். அதுகேட்ட திருமங்கை மன்னன் உடன் திருநறையூர்க்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னுமெம்பெருமானுடைய திருமுன்பே நின்று பிரார்த்தித்து அப்பிரானிடத்தில் திருவிலச்சினை பெற்றுப் பன்னிரண்டு திருமண் காப்புகளும் சாத்திக்கொண்டு விவாஹார்த்தமாக விரைவில் வந்துசேரக் கண்டு மீண்டும் குமுதவல்லி "நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீ பாத தீர்த்தத்தையும் போனகஞ் செய்த சேஷத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் பாணிக்கிரஹணம் செய்து கொள்ளமாட்டேன்" என்ன, அவளிடத்தில் கொண்ட ஆசையின் கனத்தால் அவர் இவ்வரிய விரதத்தையும் செய்துமுடிப்பதற்கு உடன்பட்டு அங்ஙனேமே செய்வதாகச் சபதஞ் செய்து கொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணம் நடைபெற்றது லக்ஷ்மீபதித்வமானது பகவானுக்கு அஸாதாரணமாயிருந்தாலும் லக்ஷ்மியின் பெயரைத் தரித்திருந்த குமுதவல்லித்தாயாருக்குப் பதியென்னும் காரணத்தினால் ஆழ்வாரும் லக்ஷ்மீபதியாயினர். ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மிக்குப் பதியென்றுங் கொள்ளலாம்.

[9. நீலத்வாந்.] கண்ணபிரான் *கண்ணனென்னுங் கருந்தெய்வம்* என்றும் *கானகமெல்லாந் திரிந்து உன் கரிய திருமேனிவாட* என்றும் சொல்லுகிறபடியே நீலநிறத்தழகார்ந்தவன். திருமங்கையாழ்வாரோவென்னில் நீலனென்னுந்திருநாமமுடையவர். இராமாநுச நூற்றந்தாதியில் "தண்டமிழ் செய்த நீலன் தனக்கு" என்னுமிடத்தில் நீலனென்ற சொல்லால் திருமங்கையாழ்வாரே விவக்ஷிதரென்பதறிக. குருபரம்பராப்ரபாவத்திலு முள்ளதேயிது.

10. [நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்] கண்ணபிரானுடைய சரித்திரங்களை நோக்குமிடத்து *மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலுந் தீமைகள் செய்வாய்* என்றும், *பிறர் மக்களை மையன்மை செய்து தோளாலிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன

செய்தாய்* என்றுமுள்ள பாசுரங்களின்படி கொடிய கடிய சேஷ்டிதங்களைச்செய்த விவன் நீதிநெறியில் நின்றும் நழுவினவனல்லவா? என்று நினைப்பதற்கு இலக்கா யிருப்பனன்றோ கண்ணபிரான். திருமங்கையாழ்வாரும் அப்படியேயன்றோ. இத் தன்மையினுல் ஒரு ஸாம்யம். நீதி நெறியில் நழுவினதாக நினைக்கலாமத்தனை யன்றி உண்மையில் இருவரும் நீதிநெறிவழுவாதவர்களே. நமது ச்லோகத்தில் "நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்" என்றது 'ச்யுதிமதிவிஷயத்வாத்' என்றபடி. கண்ணபிரானுடைய நீதிநெறிவழுவாமையை வேதாந்த வாசிரியர் யாதவாப்யுத யத்தில் (4-64.) *விமோஹநே வல்லவகேஹிநீநாம் நப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம், ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்* என்னும் ச்லோகத்திஞல் தெளிவித்தார். அதாவது, பாரதப்போரில் அச்வத்தாமா பிரயோ கித்த அபாண்டவாஸ்த்ரத்திஞல் உத்தரையின் கருப்பிண்டம் கரிக்கட்டையாக, அப்போது கண்ணபிரான் "யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ்ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:" [நான் ப்ரஹ்ம சர்யமும் ஸத்யமும் வழுவாதவனுயிருந்தேனுகில் இது உயிர்பெற்றெழுக.] என்று பலருமறிய ப்ரதிஜ்ஞை செய்து நிறைவேற்றப்பெற்ற கதையினுல் கண்ணன் நீதிநெறிவழுவாதவனென்பது விளங்கிற்று திருமங்கையாழ்வார் நீதிநெறி வழு வாதவரென்பதை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ர திமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணுந் விததே பரகாலகவி ப்ரணமேமஹி தாந்* என்னும் ச்லோகரத்நத்திஞல் வெளியிட்டருளினர்.

Released by Maran's Dog ,Toronto, Canada

11. [அந்த்தர்ச அவதாராத்] பகவானது விபவாவதாரங்களில் கிருஷ்ணுவ தாரமே முடிவானது. கல்கியவதாரம் பவிஷ்யத்தென்கிறுர்கள். அது வந்தபோது பார்த்துக்கொள்வோம். இதுகாறும்முடிந்துள்ள அவதாரம் க்ருஷ்ணுவதாரமே. திரு மங்கையாழ்வாரும் ஆழ்வார்களுக்குள் கடைப்பட்டவர் *பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையனருள்மாறன் சேரலர்கோன், துய்யபட்டநாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன், ஈதிவர்தோற்றத்து அடைவாமிங்கு* என்ற உபதேசரத்னமாலைப் பாசுரம் காண்க. ஆக இருவரும் சரமாவதாரபூதர் என்பதஞல் ஸாம்யம் பெற்றனர்.

Released by Maran's Dog ,Toronto, Canada

12. [சத்ருத்வம்ஸோத்பட்த்வாத்.] கண்ணபிரான் *தேனுகன் பிலம்பன்காளிய னென்னும் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி*என்றும்*மலைபுரைதோள் மன்னவரும் மார தரும் மற்றும் பலர் குலைய, நூற்றுவரும் பட்டழிய* என்றும் சொல்லுகிற படியே பகைவர்களையெல்லாம் வேரோடு களைந்தொழித்ததில் பேர் பெற்றவன். ஆழ்வாரும் *அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்* என்றும் *ஒன்றலர் தங்களை வெல்லு மாடல்மாவலவன் கலிகன்றி* என்றும் தாமே யருளிச் செய்த படியே புறமதத்தவர்களாகிற பகைவர்களைக் களைந்தொழிந்து இதஞலே பர காலனென்று பேர்பெற்றவர். ஆக இப்பன்னிரண்டு படிகளாலே கண்ணனுக்கும் கலியனுக்கும் ஒற்றுமை நிர்வஹிக்கப்பட்டதாயிற்று.

ஸ்ரீ க்ருஷ்ண கலித்வம்ஸி ஸாம்ய நிர்வாஹம் முற்றிற்று.

-:(O):-

# யஜுர்வேத ஸாரம்

நாம் அத்யயனம் செய்கிற க்ருஷ்ணயஜுர் வேதத்தில் ஸம்ஹிதை 44 ப்ரச்னங்களாயும், அஷ்டகம் என்கிற ப்ராஹ்மணம் அருணகாடக முட்பட 36 ப்ரச்னங்களாயுமுள்ளது. இதுதான் அசீதி யெனப்படுகிறது. எண்பது ப்ரச்னங்க ளென்றபடி. இவற்றில் என்ன விஷயம் ஓதப்படுகிறதென்று அறியவிரும்புவார் பலருளர்; அவர்களுடைய த்ருப்திக்காக இந்த விருந்து அளிக்கப்படுகிறது. .... (*)

## வேதஸம்ஹிதையில் சில விஷயங்கள்

### — வெள்ளிநாணயம் தக்ஷிணைக்கு உரியதன்று —

நமது யஜுர் வேதத்தில் முதல்காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் தொடங்குவது * தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந்,தே தேவா விஜயமுபயந்த: * இத்யாதி. இங்கு அக்நி யைப் பற்றின ஓர் உபாக்கியானம் ஓதப்படுகிறது. அதை பாஷ்யாநுஸாரேண விவரித்தெழுதுகின்றேன். தேவர்களும் அசுரர்களும் யுத்தம்செய்கையில் வெற்றி பெற்ற தேவர்கள் அசுரர்களிடமிருந்து முத்தும் மணியுமான சிறந்த பொருள்களைக் கொள்ளைகொண்டு அவற்றைக் காப்பாற்றும் பொருட்டு அக்நி தேவனிடம் வைத் தார்கள். மீண்டு மொருகால் நமக்குத் தோல்வி விளைந்தால் அப்போது இவை நமக்கு ஆபத்தனமாயிருக்குமென் றெண்ணிவைத்தார்கள். அவற்றை அக்நிதேவன் தானே கொள்ளை கொள்ள வெண்ணி அப்பால் நெகிழத் தொடங்கினன். அதை யறிந்த தேவர்கள் அப்பொருள்களை மீட்டுக் கொள்ளவேண்டிப் பின்தொடர்ந்தோடி னார்கள். ஓடி பலாத்காரமாகப் பிடுங்கினபோது அக்நிதேவன் அழுதான்; அதனால் அவனுக்கு ருத்ரனென்கிற பெயருமுண்டாயிற்று. [ரோதிதீத ருத்ர:-என்று நிர்வசனம் ] அவன் அழுத கண்ணீர் கீழே விழுந்து அது வெள்ளியாக ஆயிற்று. கண்ணீரின் விகாரமான வெள்ளியானது தக்ஷிணைக்குத் தகாதது. எவன் யஜ்ஞத் தில் வெள்ளி நாணயத்தை தக்ஷிணையாகக் கொடுக்கிறானே அவனுடைய இல்லத் தில் வருஷத்திற்குள் ரோதன நிமித்தமுண்டாம். ஆதலால் யஜ்ஞத்தில் வெள்ளி நாணயத்தை தக்ஷிணையாகக் கொடுக்கக் கூடாது.

மேலே விவரித்த வேத வாக்யத்தில் ''ரஜதம் ஹிரண்யமபவத்'' என்றும் ''ரஜதம் ஹிரண்யம் அதக்ஷிண்யம்'' என்று யிருக்கையாலே ரஜத மென்கிற வெள்ளி யும், ஹிரண்யமென்கிற பொன்னும் தக்ஷிணைக்கு அநர்ஹமென்று சிலர் சொல்லு வர்கள். அது தவறு. ஹிரண்யமென்பது தனத்திற்குப் பொதுவான வாசகம். 'ரஜதரூபமான தனம்' என்று அர்த்தமேயொழிய, வெள்ளியும் பொன்னும் என்று அர்த்தமன்று. இங்கு வித்யாரண்ய பாஷ்யபங்க்தி வருமாறு—''ரஜதரூபம் தநம் அபவத்; அத்ர ஹிரண்ய சப்தஸ்ய தநஸாமாந்ய வாசித்வாத் ரஜதம் ஹிரண்யமிதி அவிருத்தம்.''

விஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாத்தை ஸஹிப்பவரல்லர் அவர். ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) *காமை ஸ்தை ஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா: * என்று தொடங்கிச் சொல்லி வருகையில் *அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் * என்று தலைக் கட்டப்பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் சங்கராசாரியர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்கியமிது காணீர்; "ஏவம் ஸமாநே அப்யாயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே இத்யநுக்ரோசம் தர்சயதி பகவாந் * என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜிப்பவர்களுக்கே அநந்தாக்ஷயபலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந்தவர்களுங்கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தரபஜனம் செய்கிறார்களே! என்று பகவான் தானே கண்ணீர்விட்டழுது கதறுவதாக ஸாக்ஷாத்கரித்தன்றோ சங்கராசாரியர் இதை யெழுதியுள்ளார். ... ..... ... *

பகவத்கீதை ஆறுமத்யாயத்தில் முடிவான சுலோகமிது—*யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா, ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததரோ மத: * என்பது. இங்கு சங்கர பாஷ்ய பங்க்தி வருமாறு—*யோகிநாமபி ஸர்வேஷாம் ருத்ராதி த்யான பராணாம். மத்கதேந—மயிவாஸுதேவே ஸமாஹிதேந, அந்தராத்மநா-அந்த:கரணேந, ச்ரத்தாவாந்-ச்ரத்ததாநஸ் ஸந், பஜதே-ஸேவதே யோ மாம், ஸ மே-மம யுக்ததம:—அதிசயேந யுக்த:, மத:—அபிப்ரேத:* என்று. இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாதமற்றவர்கள் நற்றெளிவு பெறுவர்கள்.

## — ஆதிசங்கர ஸஹஸ்ரநாம பாஷ்யஸூக்தி விமர்சம் —

ஆதி சங்கராசார்யர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் பல பல இதிஹாஸங்களை யெடுத்துக்காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணுவின் தாழ்வையோ,தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும்அவர்காட்டினதில்லை. கேசவநாம பாஷ்யத்தில் * கோ ப்ரஹ்மேதி ஸமாக்க்யாத ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந் * என்று சொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்ததாக ஹரி வம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத்பாதர். (அர்க்க:) என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் * ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க: * என்ற விவரணம் காட்டினர். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் க்ரஹிக்கக் கூடியவர் பார்வதீபதியல்லவோ? ஏன்? *ஸ ப்ரஹ்மா ஸ சிவ: * என்றோதுகிற வேத புருஷன் பிரமனுக்கடுத்தபடி சிவபிரானைச் சொல்லி வைத்திருப்பது பிரஸித்தமன்றோ? [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் ஸம்ஹாரஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:" என்று விவரித்தார் பகவத் பாதர். சிவபெருமான் விச்வ பஹிர்ப்பூதனல்லனோ. *நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும் * என்கிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. *அத்தா சராசரக்ரஹணாத் * என்கிற ஸூத்திரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்

டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன, ப்ரஸக்தியில்லையே. உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வனென்பது பகவத்பாத ஸித்தாந்தம். *ஸர்வவாகீச்வரேச்வர: * என்கிற நாம பாஷ்யத்திலும், *ஸர்வேஷாம் வாகீச்வராணாம் ப்ரஹ்மாதிநாமபி ஈச்வர:* என்றார் அவர் தாமே.

## — நிர்க்குணப்ரஹ்மவாத நிராகரணம் —

பரப்ரஹ்மம் நிர்க்குணம் என்று பிறர் செய்யும் வாதம் மிகவும் வருந்தத்தக்கது. ஹேய குணமில்லாமையைத் தெரிவிக்கவேண்டி உபநிஷத்து சில விடங்களில் ப்ரஹ்மத்தை நிர்க்குணமென்று சொல்லி யிருப்பதுண்டு. எண்ணிறந்த திருக்கல்யாண குண முடைமையை ஓதியிருக்கின்ற ச்ருதிசதங்களுக்கு விரோதமின்றிக்கே நிர்வாஹம் செய்யவேண்டுமன்றோ; அங்ஙனே நிர்வஹிக்குமளவில் நிர்க்குண ச்ருதிகளுக்கு ஹேயகுணமில்லாமையைக் கூறுவதில் தாத்பர்யம் என்றே சொல்லித் தீரவேண்டும். ப்ரதாநம் முதலானவை ஜகத்காரணமாகக் கூடுமென்று நேர்ந்த சங்கைகளைப் பரிஹரியா நின்ற சாரீரக மீமாம்ஸையானது பெரும்பாலும் அதிகரணந்தோறும் பரப்ரஹ்மத்தினிடத்திலுள்ள திருக்குணங்களை யெடுத்துக்கொண்டே 'அத்தகைய குணங்களில்லாத வஸ்துக்களுக்கு காரணத்வம் ஸம்பவிக்கமாட்டாது' என்று தலைக்கட்டுகின்றது. இக்காலத்தவர்களான அத்வைதிகள் தங்கள் நூல்களில் "ஆதிசங்கராசாரியரும் ஸகுணப்ரஹ்மத்தையும் ஸசரீரப்ரஹ்மத்தையும் ஒப்புக்கொண்டிருப்பதுண்டு" என்றெழுதுகிறார்கள். இங்ஙனே யெழுதுமவர்களுக்கு அவ்யவஸ்தித சித்தத்வம் தவிர வேறொன்றும் தேருது. நையாயிகர்கள் "உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணமகுணம் திஷ்டதி" என்பர்கள். பரப்ரஹ்மத்திற்கு உற்பத்தி ஒப்புக்கொண்டாலாவது அது க்ஷணகாலம் நிர்க்குணமாக இருக்கவுமாகும். முமுக்ஷுக்களும் முக்தர்களும் நித்யர்களுமான ஸமஸ்த ஜீவராசிகளையும் தன்னுடைய குணாநுபவத்தினாலேயே உஜ்ஜீவிப்பிக்குமதான பரப்ரஹ்மம் க்ஷணமாத்ரமும் நிர்க்குணமாக இருக்ககில்லாது. கூரத்தாழ்வானருளிச்செய்த ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * தூரே குணாஸ் தவ து ஸத்வரஜஸ்தமாம்ஸி தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம், நித்யம் ஹரே! நிகில ஸத்குணஸாகரம் ஹி த்வாமாமநந்தி பரமேச்வரமீச்வராணாம் * என்றுள்ள ச்லோக ரத்நம் இங்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது. .... *

## — ஸ்ரீராமாயணாதிகள் பிறர்க்குப் பயன்படுமா ? —

முக்கியமாகக் குறிக்கொண்மின் ; பாஞ்சராத்ரம் அப்ரமாணம்" என்கிற பிறர் உபநிஷத்துக்கள் ப்ரஹ்மஸூத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் முதலியவற்றை ப்ரமாணமாக ஒப்புக்கொள்பவர்கள்போலும். இது வாங்மாத்ரேண அங்கீகாரமே யொழிய வேறில்லை. "பாஞ்சராத்ரத்தை ப்ரமாணமாக வொப்புக்கொண்டால் என்ன ஹாநி விளைந்திடும்? ச்ருதீதிஹாஸ புராண ஸூத்ரங்களை ப்ரமாணமென்று ஒப்புக்கொண்டதனால் என்ன லாபம் விளைந்திட்டது? என்று இவர்களை வினவினால் இவர்கள் என்ன விடையிறுப்பர்களோ, பார்க்கவேணும். *வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா* என்று வேத ப்ராதுர்ப்பாவ விசேஷமாகக் குலாவப்படுகிற ஸ்ரீராமாயணத்தில் ஆதிபோடந்தமாகத் திருக்கல்

யாண குணகண ப்ரஸ்தாவமே விளங்கா நின்றது. வான்மீகி முனிவர் தம்மிடம் வந்து சேர்ந்த நாரத மஹர்ஷி பக்கலில் கதை கேட்க விரும்பிற்றிலர்; திருக்குணங்கள் கேட்கவே விருப்பத்தை வெளியிட்டார். அதில், *கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்* என்றும் *பஹவோ துர்லபாச்சைவ யே த்வயா கீர்த்திதா குணா:* என்றும் உபக்ரமத்தில் காணும் வினுவிடைகளினால் இஃது அறியலாகும்.

## — உபப்ர்ம்ஹணங்களின் அவதாரம் எதற்காக? —

எம்பெருமானுடைய திருவவதாரங்களெல்லாம் குணபரீவாஹ ரூபங்களென்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். எம்பெருமான் ஸ்வாத்மாவிலே நிரம்பியுள்ள திருக்குணங்களை வெளியிட்டுத் தரிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்கிருனென்கை. ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண திருவவதரித்து வேதஸித்தங்களும் ஸ்வாபாவிகங்களுமான திருக்குணங்களை ஸகல பக்தர்களும் அநுபவிக்கும்படி செய்தருளினன் பகவான். இதை அறியாதாரில்லை. "ப்ரஹ்மம் குணசூந்யமே" என்பவர்கள் ஸ்ரீராமாயணம் முதலான இதிஹாஸ புராணங்களுக்கும் அவற்றுக்கும் மூலமான ச்ருதிகளுக்கும் நெடுந்தூரத்திலிருக்கத் தக்கவர்களென்பது அதிவாதமுமன்று, ஆக்ரஹ வார்த்தையுமன்று. *இதிஹாஸ புராணுப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்* என்று பொதுவாகவும் *வேதோபப்ரும்ஹணர்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:* என்று சிறப்பாகவும் சொல்லியுள்ள மஹர்ஷிகள் வேதப்பொருள்களே இதிஹாஸ புராணங்களில் வெட்டவெளிச்சமாகக் காணப்படுகின்றனவென்று ப்ரதிஜ்ஞை செய்தவர்களாகின்றனர். ஆக, நிருக்குணங்களிலேயே நோக்காகத் திருவவதரித்த வேதங்களுக்கும் ததுபப்ரும்ஹணங்களுக்கும் சிறிதும் பொருந்தாதபடி நிர்க்குணப் ரஹ்மவாதம் செய்பவர்களைப்பற்றி இன்னமும் பேசவேண்டியதொன்றுமில்லை.



## — இனி வேதாந்த வாக்யங்களுக்கு அத்வைதத்தில் நோக்கில்லை யென்பது விளக்கப்படுகிறது —

ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். *க்ஷரம் ப்ரதானம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* என்பது முதலான ச்ருதிவாக்யங்கள் சேதந அசேதந ஈச்வர ரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* *ஸர்வம் கல்விதம ப்ரஹ்ம* தத்த்வமஸி* இத்யாதிகளான ச்ருதி வாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தால் அபேதத்தைக் காட்டுகின்றன. ஆக, ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேதப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்தமான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம் பெறத்தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப்போக்கி ஸமந்வயம் காட்டவேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது, ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்று கொள்ளுகிற அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை மட்டும் முக்கியமாகப்

பரிக்ரஹித்து பேதத்தைக்காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக்காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கிய மாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். *யஸ்யாத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீ சரீரம். ய ஆத்மநி திஷ்டந்* இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியா யிருக்கிருனென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக த்வைதாத்வைத மதங்க ளிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்க்யார்த்தங்களாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகையதோஷம் சிறிதும் தட்டப்பெருதது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படும்.

## — பேதாபேதகடகச்ருதிகளின் நிர்வாஹம் —

கீழே யெடுத்துக்காட்டிய மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களையும் ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒரு ச்ருதி வாக்யத்திலும் அமுக்க்யார்த்த கல்பநை யென்பது கிடையாது. எங்ஙனேயென்னில், கடைசியாக எடுத்துக்காட்டப்பட்ட *யஸ்யாத்மா சரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேசமு மின்றிக்கே பொருந்தச் செய்யவல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்கள்— என்கிற காரணத்தினுல் இவற்றுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப் பொருத்த மானது. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதி களினுலேற்பட்ட அபேதத்தையும் *க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர:* இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளினுலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண் மின்; சேதநா சேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வருபபேதம் உண்மையாதலால் *க்ஷரம் ப்ரநாந மித்யாதி பேத ச்ருதியானது பேதத்தைச் சொல்லியிருப்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க்கொண்டு ஒன்றேயாகிறபடியால் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதியான அபேத ச்ருதி களும் பொருந்தக் குறையில்லை. *யஸ்யாத்மா சரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனை ஸர்வாந்தர்யாமியென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன என்பது புநருக்தம்.

## — கீழே காட்டிய நிர்வாஹத்தின் விளக்கம் —

சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக் கண் செலுத் தினுல் பேதம் க்ரஹிக்கப்படுகிறது. அசேதனமாகிய சரீரம்வேறு. அதனுள்ளுறை யும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்று பேத ப்ரதிபத்தி சாஸ்த்ரஸம்மதமேயாகும். பல அவயவங்களின் கூட்டரவான சரீரத் திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேத ப்ரதிபத்தியும் 'அவயவஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத

ப்ரதிபத்தியும் பொருந்துகின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவதத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனம்? என்று விமர்சிக்கவேணும். 'தேவதத்தஃ க்ருசஃ, யஜ்ஞதத்தஃ ஸ்தூலஃ' இத்யாதி வ்யவஹாரங்களில் க்ருசத்வமும் ஸ்தூலத்வமும் சரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்கள் சரீர பரங்களேயென்று அறுதியிடப்படுகிறது. 'தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்தஃ ப்ரதிபாவாந்' இத்யாதி வ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதியையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்களே ஆத்ம பரங்களென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் சரீரமும் ஒன்றல்ல, வெவ்வேறுபட்டவை. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'சரீர விசிஷ்டனான சரீரி ஒருவன்' என்னும் அபிஸந்தியாலத்தனையன்றோ? இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்ற ச்ருதியும் விசிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக் குறையில்லையே. ஏவஞ்ச பேதத்திற்கும், அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லை யென்றதாயிற்று. சரீரங்களும் சரீரிகளுமாகிற நானா வஸ்துஸத்பாவம் ப்ராமாணிக மாகையாலே அபலபிக்க வொண்ணாததே. இங்ஙனே விசிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபலபிக்க வொண்ணாததே. ஆக உண்மையில் வெவ்வேறுபட்ட வஸ்துக்களும் சரீர சரீரி பாவநிபந்தநமாகவே ஒன்றாக வழங்கப்படுவதாய் ஸித்திக்கையாலே அப்படிப்பட்ட சரீர சரீரிபாவத்தை யுணர்த்துகின்ற அந்தர்யாமி ப்ராஹ்மணாதி ரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு நமது மதத்தில் மிகுந்த கௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும் நாம் ஒருவகையான ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதி ஸாமரஸ்யம் நமக்கேயொழியப் பிறர்க்கில்லையென்று கல்வெட்டாயிற்று.

### — ஸித்தாந்தத்தில் சரீராத்மபாவத்தின் ப்ராதான்யம் —

மதாந்தரஸ்தர்கள் ஒப்புக்கொள்ளாத பல அர்த்தங்களை நாம் ஒப்புக்கொண்டிருக்கின்றோம். நித்யஸூரிஸத்பாவம், எம்பெருமானுடைய கல்யாண குணாச்ரயத்வம், திவ்யமங்கள விக்ரஹவிசிஷ்டத்வம் முதலானவை அவை. இவற்றையெல்லாம் விட்டு சரீர சரீரிபாவத்தையே கொண்டு விசிஷ்டாத்வைதமென்று பெயரிடுவதில் என்ன விசேஷமென்னில், கேண்மின். ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற அர்த்த விசேஷங்களுள் ஜகத்சரீரகத்வமென்பதே ப்ரதாநமானது. ஆனது பற்றியே இது ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்த மெனப்படுகிறது. இதுவே ப்ரதாநமென்பது எங்ஙனமென்னில் ஸர்வச்ருதிகளினுடையவும் முக்கியமான அர்த்தத்தைத் தெரிவிப்பதாய், ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமரஸ்யத்தை நிர்வஹித்து வாதி விஜய ப்ரயோஜகமாயிருப்பதனாலே, இதற்கு ப்ராதாந்ய மென்றுணர்க. இந்த சரீராத்ம பாவத்தைத் தெரிந்து கொள்ளாமையினாலன்றோ பிறமதத்தவர்கள் ஸர்வ ச்ருதி ஸாமரஸ்யத்தை நிர்வஹிக்கமாட்டாமல் தளருகின்றார்கள். குத்ருஷ்டிகளின் குசோத்யங்களை அவலீலயா பரிஹரித்துத் தருவது இந்த சரீராத்மபாவமே யென்க. .... *

### — சாரீரக மீமாம்ஸையினால் விசிஷ்டாத்வைத நிர்ணயம் —

ஸித்தாந்தத்தில் சரீராத்மபாவமே பிரதான மென்பது கீழே உபபாதிக்கப்பட்டது. ப்ரஹ்மஸூத்ரகாரருக்கும் இதுவே அபிமதமென்பதை மூதலிக்கிறேன்

இவ்விஷயத்தில் சாரீரக மீமாம்ஸை முழுவதுமே பிரமாணமாகக் காட்டக் கூடிய தாயினும் வ்யுத்பித்ஸுக்களின் புத்தியில் ஏறுவதற்காக ஸம்க்ஷேபமாய் நிருபித்தல் நலமென்று கருதி அந்த சாரீரக மீமாம்ஸையில் ஒரு அதிகரணத்தை மட்டும் ஈண் டெடுத்துக் காட்டிப் பிராமாணிகர்களின் மனத்தில் பதியவைக்கிறேன். அதில் முதலத்யாயம் நான்காவது பாதத்தில் வாக்யாந்வயாதிகரண மென்பது ப்ரஸித்த மானது. நான்கு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். ப்ருஹதாரண்யகோப நிஷத்தில் ப்ரஸித்தமான மைத்ரேயீ ப்ராஹ்மணமென்னும் பகுதியில் அம்ருதத்வோ பாயமேதென்று கேட்ட மைத்ரேயியைக் குறித்து யாஜ்ஞவல்க்யருடைய விடை "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" என்பது. இதில் ஆத்மா என்னும் சப்தத்தால் குறிக்கப்பட்டவன் பரமாத்மாவா? ஜீவாத்மாவா? என்று விசாரம் ப்ரஸக்தமாக, பரமாத்மாவே யென்று நிர்ணயம் செய்வதும் இவ்வதிகரணத்தின் ப்ரமேயம். இது *வாக்யாந்வயாத்* என்கிற முதல் ஸூத்ரத்தினுல் தேறியது. மேத்ரேயீப்ராஹ்மணத்திலுள்ள மஹாவாக்யம் ஸமஞ் ஜஸமாக அந்வயிக்க வேண்டுகையாலே அந்த வாக்யத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆத்மா கருமபலஊ யநுபவிப்பவனுன ஜீவாத்மாவாக இருக்க முடியாது, பரம புருஷனேயாகவடுக்கும் என்று சொல்லப்பட்டதாயிற்று. இதற்குமேல் ஒரு கேள்வி எழுந்தது. அதாவது, இங்குப் பரமாத்மா விவக்ஷிதனுகில் ஜீவாத்ம வாசகமான ஆத்மா என்கிற சொல்லையிட்டுச் சொல்லுவானேன்? பரமாத்மாவென்றே பிர யோகிக்கலாகாதா? என்று. இக்கேள்விக்கு ஸூத்ரகாரரான வியாஸரால் மேலே மூன்று ஸூத்ரங்களினுல் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டுள்ளது அடைவே ஆச்மர த்ய மதம், ஔடுலோமி மதம், காசக்ருத்ஸ்ந மதம் என மூவருடைய மதம் காட் டப்பட்டுள்ளது. *ப்ரதிஜ்ஞாஸித்தேர் லிங்கமாச்மரத்ய:* என்கிற முதல் ஸூத்ரம் ஆச்மரத்ய மதம். ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்ய காரண பாவம் சுருதியில் சொல்லப்பட்டிருக்கையாலேஅதனுல் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. காரண மான மண்ணுக்கும் அதன் கார்யமான பானைக்கும் அபேதம் காண்கிறதன்றே. ஆக இவ்வபேதத்தைத் தெரிவிப்பதற்காக பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தி யுள்ளதென்றார் ஆச்மரத்யர். இனி ஔடுலோமி மதம்; கீழே காட்டிய ஆச்மரத்ய மதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவினிடத்திலிருந்து உத்பத்தியைக்கொள்ளுகை யாலே *ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித்* இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோ திக்கையாலும் மற்றும் அநேக தோஷப்ரஸங்கத்தாலும் ஆச்மரத்ய மதம் ஸாது வன்றென்று கொண்ட ஔடுலோமியானவர் — [உத்க்ரமிஷ்யத ஏவம்பாவாதித் யௌடுலோமி:] முக்தி தசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் ச்ருதி ஸித்தமாயிருக்கையாலே முக்தி தசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபே தத்தை யவலம்பித்து ஐக்யம் சொல்லிற்றுக நிர்வஹித்தார். இதற்குமேல் காசக் ருத்ஸ்ந மதம்:—கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம்வரையில் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு பேதமுள்ளதென்றும், முக்தி தசையில் அபேதமென்றும் கொள்ளப்படுகிற விது "பரமாத்மாத்மநோர் யோக: பரமார்த்த இதீஷ்யதே. மித்த் யைதத் அந்யத் த்ரவ்யம் ஹி நைதி. தத்த்ரவ்யதாம் யத:* என்கிற ஸ்ரீவிஷ்ணு புராண வசன விருத்தம். வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்றேடொன்று சேருமே

யொழிய ஐக்கியத்தை யடையமாட்டா வென்று இதில் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கின்றதன்றோ முக்தி தசையில் ஜீவாத்மாவுக்கு அபஹத பாப்மத்வாதி வ்வரும் ஆவிர்ப்பவிக்குமதொழிய பரமாத்மாவோடு ஐக்யாபத்தியென்பதில்லை யென்னுமிடம் [4-4-1.] *ஸம்பத்யாவிர்ப்பாவாதிகரணத்தில் நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஆக இத்தனைக்கும் முரணாக நிர்வஹிப்பது அநுசிதம் என்று கொண்ட காசக்ருத்ஸ்நர் [ஸூ * அவஸ்திதே ரிதி காசக்ருத்ஸ்நஃ] பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம சரீரத்வமும் *ய ஆத்மநி திஷ்டந்...யஸ்யாத்மா சரீரம் * இத்யாதி ச்ருதி ஸித்தமாகையாலும், சரீர வாசகங்களான சப்தங்களுக்கு சரீரிபர்யந்த வாசகத்வமானது ஆக்ருத்யதிகரண ஸித்தமாகையாலும் ப்ரக்ருதத்தில் ஜீவாத்மவாசியான ஆத்ம சப்தத்தைப் பரமாத்ம பர்யந்த வாசகமாக நிர்வஹிப்பதுதான் உசிதமென்று கருதினர். .... ... *

❀ வேதாந்த ஸாரார்த்த நிரூபணம் முற்றிற்று ❀

## நாம் பெற்ற நிதிகள்

நம்முடைய பூருவாசாரியர்களில் மணவாளமாமுனிகளீருகவுள்ள பரிகணிதர்களான ஆசாரியர்கள் பதினெண்மர் தாம் க்ரந்தங்களை யருளிச்செய்து உபகாரம் செய்தருளினவர்கள் என்று விவரித்து நிரூபிக்கப்படுகிறது. இதுவொரு விலக்ஷண மானவிருந்து.

1. **ஆளவந்தார்.** முதன்மையான ஆசாரியர் ஸ்ரீமந்நாதமுனிகளானாலும், அவர் நியாய தத்வமும் யோக ரஹஸ்யமுமருளிச் செய்ததாகப் பிரஸித்தியிருந்தாலும் அந்த திவ்ய க்ரந்தங்கள் லுப்தமாயிற்றென்று தெரிவதனால் ஆளவந்தாரையே முந்துற முன்னம் கொள்ளுகிறேன். இவரருளிச்செய்த க்ரந்தங்களுள் ஒன்றிரண்டு லுப்தங்களெனப்படுகிறது. இப்போது பிரசாரத்திலுள்ள க்ரந்தங்களாவன— ஸ்தோத்ர ரத்னம், சதுச்ச்லோகி, ஸித்தித்ரயம், ஆகமப்ராமாண்யம், கீதார்த்த ஸங்க்ரஹம் என்னுமிவையே; கத்யத்ரயம்போல் ஸித்தித்ரயம் மூன்று க்ரந்தங்கள்.

2. **எம்பெருமானார்.** ஸ்வாமியருளிச் செய்த க்ரந்தங்களில் ஒன்றுகூட லுப்தமானதாகத் தெரியவில்லை. 'நவரத்னம்' அல்லது 'நவநிதி' என்னும்படியாக ஸ்வாமி ஸாதித்தருளின க்ரந்தங்கள் ஒன்பது. கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், வேதார்த்த ஸங்க்ரஹம், சரணாகதிகத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்—என்னுமிவை ஒன்பது க்ரந்த ரத்னங்களாம். வேதாந்த தீப வேதாந்த ஸாரங்களுக்குத் தவிர மற்ற ஏழு க்ரந்தங்களுக்கும், வியாக்கியானங்கள் அவதரித்துள்ளன. வேதாந்த வாசிரியரருளிச் செய்த ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷையில் மூன்றுமதிகாரத்திற்கு நித்யவ்யாக்க்யாநாதிகாரமென்று பெயரிட்டிருப்பதால் நித்யத்திற்கும் வியாக்கியானமுள்ளதாகக் கொள்க.

3. **திருக்குருகைப்பிரான்பிள்ளான்.** *தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான் பிள்ளான், எதிராசர் பேரருளால்—உள்ளாருமன்புடனே மாறன்மறைப் பொருளை அன்றுரைத்தது, இன்பமிகுமாறுயிரம் * என்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரப்படியே எம்பெருமானார் திருவாணையின்படி திருவாய்மொழிக்கு முதன் முதலாக ஆறுயிரப்படியென்கிற ஸங்க்ரஹ வியாக்கியானமிட்டருளினவர் திருக்குருகைப்பிரான் பிள்ளான். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் முதன்முதலாகத் திருவவதரித்த மணிப்ரவாள க்ரந்தம் [அதாவது ஸம்ஸ்க்ருதத்ராவிட மிச்ரமான க்ரந்தம்] இதுவேயாகும். .... *



4. **கூரத்தாழ்வான்.** ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், அதிமாநுஷஸ்தவம், ஸுந்தர பாஹு ஸ்தவம், வரதராஜ ஸ்தவம், ஸ்ரீஸ்தவம் என்னுமிந்த பஞ்சஸ்தவங்கள் ஆழ்வானருளிச் செய்தவை வியாக்கியானத்தோடு கூடிய யமகரத்நாகரம் ஆழ்வானருளிச் செய்ததாகச் சொல்லப்படுவது விவாத க்ரஸ்தம். கூரேச விஜயம் பின்புள்ளார் பணித்ததென்று அதிலேயே வ்யக்தமாகிறது. சரமச்லோக வியாக்கியானமும் நித்யமுமருளிச்செய்திருந்ததாக தேசிகர் உதாஹரிக்கிறார்; அவை லுப்தங்கள். கூரத்தாழ்வான் திருவடியான கூரநாராயண ஜீயர் ஸுதர்சந சதகம் பணித்தார். ஆனல் இவர் ஆசார்ய பரம்பரையில் சேர்ந்தவரல்லர். மந்த்ர சாஸ்த்ரத்தில் மஹாநிபுணர். .... ... ... *

5. **பட்டர்.** [ஸ்ரீபராசரபட்டார்யரென்பது இவரையே] இவரருளிச்செய்த க்ரந்தங்கள்—ஸ்ரீ ரங்கராஜஸ்தவம், ஸ்ரீ குணரத்நகோசம், ஸ்ரீ ரங்கநாதஸ்தோத்ரம் [*ஸப்தப்ராகாரமத்யே* இத்யாதி.] அஷ்டச்லோகீ. பகவத்குணதர்ப்பணமென்கிற ஸஹஸ்ரநாமபாஷ்யம். கோஷ்டீ நாதஸ்தவம். க்ரியாதீபமென்கிற நித்யம், கைசிக புராண வியாக்கியானம். நம்பெருமாள் திருமஞ்சனச்லோக ரத்னங்கள். லக்ஷ்மீ கல்யாண நாடகமும் தத்வரத்நாகரமும் லுப்தங்கள். பட்டருடைய திருத்தம்பியாரான சீராமப்பிள்ளையின் திருக்குமாரரான வேதாசார்யர் க்ஷமாஷோடசி பணித்தார்.

6. **நஞ்சீயர்.** பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்த நஞ்சீயரருளிச்செய்த க்ரந்தங்களாவன—திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஒன்பதினாயிரப்படி. திருப்பாவை வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம். .... *

7. **எங்களாழ்வான்.** ஸ்ரீ விஷ்ணுசித்தார்ய ரென்கிற எங்களாழ்வான் மஹாஜ்ஞாநிகராய் விளங்கினவர், ஸ்ரீ பாஷ்யத்தில் அப்ரதிம பாண்டித்யம் பெற்றவர். ஸ்ரீவிஷ்ணு சித்தீயமென்கிற ஸ்ரீ விஷ்ணு புராண வ்யாக்கியான மொன்றுதானருளிச்செய்ததாகத் தெரியவருகிறது. .... ... *

8. **நடாதூரம்மாள்.** வாத்ஸ்ய வரதாசார்ய ரென்னுமிவர் எங்களாழ்வான் திருவடிகளிலாச்ரயித்து மஹாஜ்ஞாதாவாயிருந்தவர் அருளிச்செய்தவை—தத்வஸார மென்கிற ஸ்ரீபாஷ்யார்த்த ஸாரஸங்க்ரஹ ரூபமான க்ரந்தம், ப்ராதரநுஸந்தேய ச்லோகமாலா, பரத்வாதிபஞ்சகம். .... ... ... *

9. **நம்பிள்ளை.** இவரருளிச் செய்தவை—திருவாய்மொழி வியாக்கியானமான ஈடு முப்பத்தாறுயிரப்படி. திருவிருத்த வியாக்கியானமான ஈடு. இவற்றை

வடக்குத் திருவீதிப்பிள்ளையின் க்ருதிகளாகவுங் கொள்ளலாம். நம்பிள்ளை கங்கா ப்ரவாஹமாக அருளிச்செய்தவைகளை ஏடுபடுத்தினவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. ஆகவே இவற்றை இவருடையவும் க்ருதியாகக் கொள்ளத் தட்டில்லை. ... •

10. வடக்குத் திருவீதிப் பிள்ளை. இவர் திவ்யப்ரபந்த வியாக்கியானமாக வல்லாமல் வேறுசில க்ரந்தங்களுமருளிச் செய்திருப்பதாகக் காண்கிறது. குன்றத்தூரய்யன் திருக்குமாரரான அப்பன் ஸ்ரீநிவாஸாசார்யர் பணித்ததாக (1913-ஆம் வருஷத்தில்) தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டுள்ள அஷ்டச்லோகி பெரியபடி வியாக்கியானத்தில் (பக்கம் 14லும் 66லும்) வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷர தீபிகை யென்றொருக்ரந்த மருளிச்செய்திருப்பதாக உதாஹரிக்கப்பட்டுளது.

11. பெரியவாச்சான் பிள்ளை. இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள். அதிலும் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் நானூறு பாசுரங்களுக்கு லுப்தம். ஸ்தோத்ர ரத்ன வியாக்கியானம். ஜிதந்தா வியாக்கியானம். நிகமனப்படியென்கிற மிகச் சிறியதொரு ரஹஸ்ய க்ரந்தம். ஸ்ரீராமாயணத் தனிச்லோகம். ... .... ... •

12. பிள்ளை லோகாசார்யர். இவரருளிச் செய்த க்ரந்தங்கள். அஷ்டாதசரஹஸ்யம். அவையாவன—ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், அர்த்தபஞ்சகம், அர்ச்சிராதி, ப்ரமேயசேகரம், ப்ரபந்நபரித்ராணம், ஸாரஸங்ரஹம், ஸம்ஸாரஸாம்ராஜ்யம், நவரத்னமாலை, நவவிதஸம்பந்தம், யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ச்ரியஃபதிப்படி, தத்வசேகரம், தனிப்ரணவம், தனித்வயம், தனிசரமம், முமுக்ஷுப்படி. இந்த ரஹஸ்ய க்ரந்தங்கள் தவிர வேறு சில க்ரந்தங்களும் இவரருளிச் செய்திருந்ததாகத் தெரியவருகிறது. தத்வத்ரயத்திற்கு ஒரு வியாக்கியான மருளிச்செய்திருந்ததாக மணவாள மாமுனிகளெடுத்துக் காட்டியருளுகிறார்;—தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்தில் (6) 'ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாகையாவது ஆநந்த ரூபஜ்ஞானனாயிருக்கை" என்ற விடத்து மாமுனிகளின் வியாக்கியானத்தில் "அநுகூலஜ்ஞானமே ஸ்வரூபமாயிருக்க ஜ்ஞாநானந்தங்களென்று பிரித்துச் சொல்லுகிறது இரண்டுமுண்டாகைக்காக என்றே இவர் தாமிட்டருளின கத்ய வ்யாக்யானத்திலே அருளிச்செய்தது" என்கிற ஸூக்தி காணப்படுகிறது. அந்த வியாக்கியானம் லுப்தம்.

13. அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இளைய திருக்குமாரர்; பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியார். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஆசார்ய ஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம், திருப்பாவைக்கு ஆறாயிரப்படி வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், அமலனாதிபிரான் வியாக்கியானம், (பெரிய திருமடல் வியாக்கியானம்) ஆசார்ய ஹ்ருதயத்திற்கு மூலமான பாட்டோலை (இது லுப்தம்.) .... .... *

14. ஸ்ரீஸுதர்சந பட்டர். ச்ருதப்ரகாசிகாசார்ய ரென்பது இவரையே. இவர் நடாதூரம்மாள் திருவடிகளிலே யாச்ரயித்து தீபாதுத்பந்ந ப்ரதீபம் போலே மிக விளங்கினவர். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஸ்ரீபாஷ்யத்திற்கு விபுல வியாக்கியானமான ச்ருதப்ரகாசிகையும், அதிஸம்க்ஷிப்த வியாக்கியானமான ச்ருதப்ரதீபி

கையும், வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானமான தாத்பர்ய தீபிகையும். சரணாகதி கத்ய வ்யாக்யானமும், ஸுபாலோபநிஷத்பாஷ்யமும். .... .... *

15 ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அதிக ஸங்க்யையான க்ரந்தங்கள் அருளிச்செய்தவர் இவ்வாசிரியர். அந்த க்ரந்தங்கள் ஸ்தோத்ராவளீ விபாகம், காவ்ய நாடக விபாகம், வேதாந்த விபாகம், வ்யாக்க்யான விபாகம், ஸம்ப்ரதாய விபாகம் என்று ஐந்து தொகுதிகளாக அடியேனால் வகுத்து அச்சிடப் பட்டுள்ளது. உலகமெல்லாம் பரவியுள்ளது. ஐந்தாவது தொகுதியைப் பற்றின அடியேனுடைய ஆராய்ச்சி நூல்கள் பல காண்க. ... ... *

16. ஆச்சான் பிள்ளை. இவர் பெரியவாச்சான் பிள்ளையின் திருக்குமாரரும் திருவடியுமாவர். இவர் பரந்த ரஹஸ்யம், மாணிக்கமாலை, சதுச்ச்லோகி வியாக்கியானம், தத்வ ஸங்க்ரஹம் முதலான க்ரந்தங்களை யருளிச் செய்தவர். ... *

17. வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர். இவர் ஆச்சான் பிள்ளை திருவடிகள். இவரருளிய க்ரந்தங்கள்—திருவாய்மொழிக்குப் பன்னிராயிரப்படியுரை. திருவிருத்தத்திற்கு ஸ்வாபதேசவுரை. திருப்பாவைக்கொரு ஸங்க்ரஹ வியாக்கியானம். தத்வ தீபம், தீபப்பிரகாசம், தத்வநிரூபணம், ரஹஸ்யத்ரய காரிகாவளீ, தீபஸங்க்ரஹம். *

18. மணவாள மாமுனிகள். ஸ்வாமி எம்பெருமானாரான பூர்வாவதாரத்திலருளிச்செய்தவை ஒன்பது திவ்ய க்ரந்தங்கள்; அவற்றுக்கிரட்டிப்பாகப் பதினெட்டு க்ரந்தங்கள் இவ்வவதாரத்திலருளிச்செய்தவை 1. முமுக்ஷுப்படி வியாக்கியானம், 2. தத்வத்ரய வியாக்கியானம். 3. ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், 4. ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானம், 5. பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் [நானூறு பாசுரங்களுக்கு] 6. இராமாநுச நூற்றந்தாதியுரை, 7. உபதேச ரத்தினமாலை. 8. திருவாய்மொழி நூற்றந்தாதி, 9. ஆர்த்திப்பிரபந்தம், 10. ஞானஸார ப்ரமாண யோஜனை, 11. ப்ரமேய ஸாரப்ரமாண யோஜனை, 12. யதிராஜவிம்சதி, 13. தேவராஜ மங்களம், 14. கீதாதாத்பர்ய தீபம் (லுப்தம்). 15. திருவாராதன ப்ரயோகம். 16. ஈட்டு ப்ரமாண ஸங்க்ரஹம். (இப்போது அச்சிடப்பட்டிருப்பதல்ல.) 17. ரஹஸ்ய ப்ரமாண ஸங்க்ரஹம். 18. திவ்யதேசமங்களாசாஸன மாலிகை. *

★ ஜீயர் திருவடிகளே சரணம் ★

ஸ்ரீ காஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர் இயற்றிய

**ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வம்**

முற்றிற்று.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்





ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

## அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகள் எழுதிய

# வடநாட்டுத் தென்னுட்டு யாத்திரை

**— யாத்ரா ரஸிகர்களான பக்தர்களுக்கு உபகாரமான வெளியீடு —**

அடியேன் வடநாட்டுத் தென்னுட்டு யாத்திரையைப் பலகால் செய்திருப்பதோடு யாத்திரையைப்பற்றி நான்கு பாஷைகளிலும் நூல்கள் அச்சிட்டிருந்தேன். அவற்ருல் பலர் மிகமிக வுபகாரங் கொண்டதாகத் தெரிவித்துமிருந்தார்கள். அப்புத்தகங்கள் இப்போது கிடைப்பதில்லை. மறுபதிப்புச் செய்ய நெடுநாளாக இருந்த மனோரதம் இப்போது நிறைவேறுகிறது. திவ்யதேச யாத்திரையில் குதூஹலமுள்ள பத்தர்களுக்கு இது மிகவும் உதவியளிக்கும். வடநாட்டில், பண்டரிபூர், புனு, பாம்பே, நாஸிக் வழியாகச்சென்று

கல்கட்டா ஜகன்னாதம் ஸ்ரீ கூர்மம், ஸிம்ஹாசலம், கோதாவரி, க்ருஷ்ணா வழியாகத் திரும்புகிற க்ரமம் ஒன்று. க்ருஷ்ணா கோதாவரி, ஸிம்ஹாசலம், ஸ்ரீகூர்மம், ஜகன்னாதம் கல்கட்டா வழியாகச் சென்று பாம்பே வழியாகத் திரும்புகிற க்ரமம் மற்றொன்று. இங்கு அடியேன் தெரிவிப்பது கல்கட்டா வழியாகச் சென்று, பாம்பே வழியாகத் திரும்பும் க்ரமம். 75 நாள் அல்லது மூன்று மாதங்களில் சுகமாக வடநாட்டுத் திருப்பதி யாத்திரையைச் செய்து முடிக்கலாம். இரண்டொரு மாதத்திலுமாகலாம்

* * * * * * * *

## — நெல்லூர், க்ருஷ்ணா, கோதாவரி —

சென்னைக்கு ஸமீபத்தில் (110 மைல் தூரத்தில்) உள்ளது நெல்லூர். இங்கு வடபெண்ணை யாற்றின் கரைமேல் ஸ்ரீ ரங்கநாதனுடைய ஸேவை முன்னம் ப்ராப்தமாகலாம். இங்கிருந்து விஜயவாடா சேர்ந்து க்ருஷ்ணாநதீ ஸ்னானம் செய்து, அங்கிருந்து ஆறுமைல் தூரத்திலுள்ள மங்களகிரியில் பானகந்ருஸிம்ஹனை ஸேவித்து விஜயவாடா ஸ்டேஷனிலிருந்து கோதாவரி ஸ்டேஷனை யடைந்து அங்கே கோதாவரீ ஸ்னானம் செய்து ஸிம்ஹாசலம் சேர்வது. ராஜமந்திரி ஸ்டேஷனுமுண்டு.

## — ஸிம்ஹாசலம் —

ஸிம்ஹாசலமென்றே ஸ்டேஷனுள்ளது. வால்டேரிலிருந்தும் போகலாம். ஏறக்குறைய ஆயிரம் படிகளேறி ஸேவிக்க வேண்டிய இந்த க்ஷேத்திரத்திற்குச் சில வாண்டுகளாய் பஸ் மார்க்க முள்ளது. ஸன்னிதி வெகு விஸ்தாரமாக அமைந்திருக்கின்றது. இவ்விடத் தெம்பெருமானுக்கு வருஷத்திற்கு லக்ஷம் ரூபாய்க்கு மேற்பட்ட வருமானமென்று சொல்லப்படுகிறது. அதற்குத் தக்கபடி விசேஷமான போகங்களைக் கண்டருளுகிறார். ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதிகாரிகள் பலர் இங்கு தினப்படியாக வந்து க்ரந்த பாராயணங்கள் செய்து தேவஸ்தான ஸன்மானம் பெறுகிறார்கள். தேசாந்தரிகளுக்கு வஸதி ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படுகிறது. இத்தலத் தெம்பெருமானுடைய திருமேனி ஸேவை வருஷத்தில் ஒருநாள் மட்டுமே [அக்ஷயத்ருதீயையன்று] பக்தர்களுக்கு ப்ராப்தமாகும். மற்ற நாட்களில் சந்தனக் காப்பினால் திருமேனி முழுதும் கவசமணியப் பெற்றிருக்கும். *தெழி குரலருவித் திருவேங்கடத்திற் போலவே இங்கும் அருவிநீர் வீழ்ச்சி விசேஷமாக விருப்பதனால் தீர்த்த ஸௌகரியத்திற்குக் குறையில்லை. இத்தலத்தில், கீழே தேவஸ்தானச் சார்பில் ஸம்ஸ்க்ருத வித்யாப்ரவசனங்கள் விசேஷமாக நடைபெற்று வருகின்றன. .... ... ... ...*

## ... ஸ்ரீ கூர்மம் ...

ஸிம்ஹாசலத்திலிருந்து ஸ்ரீகூர்மக்ஷேத்ரம். ஸ்ரீகாகுலம் ரோட் என்கிற ஸ்டேஷனில் இறங்கி ஸ்ரீகாகுலம் வழியாய் பதினெட்டாவது மைலில் பஸ்மார்க்கமாக ஸ்ரீகூர்மம் அடையத்தக்கது. இங்கு அழகிய அக்ரஹாரமுண்டு. ஸ்ரீகூர்ம நாதனுடைய ஸன்னிதி விசாலமாகவும் அதிரமணீயமாகவும் அமைந்துள்ளது. ஸன்னிதியைச் சார்ந்து விளங்கும் ஏரிபோன்ற தடாகம் கண்காட்சியிலேயே ஸகலதாபங்களையும் ஆற்றக்கூடியது. இத்தலத்தில் எம்பெருமானார் சிலகால மெழுந்தருளி

யிருந்து பரிஷ்காரங்கள் செய்தருளினதாகச் சொல்லப்படுகிறது. இஃது உண்மையான தென்றே நம்புவதற்கு இடமுள்ளது. நித்யாராதந நித்யோத்ஸவாதிகள் விலக்ஷண வைகரியாக நடந்து வருகின்றன. சீகாகுலம் ரோட் என்னுமிடத்திற்கு அமதாலவலஸா என்றுபெயர். இங்கு ஸ்டேஷனுக்கு அதிஸமீபத்தில் ஸ்ரீவேங்கட ரமண ஸ்வாமி ஸன்னிதியொன்று நவீன காலத்தில் ஏற்பட்டிருக்கிறது. மிகவு மழகாக அமைந்திருக்கு மிந்த ஸன்னிதியில் ரைல் வண்டியை எதிர்பார்த்து ஸௌகரியமாகத் தங்கியிருக்கலாம். தீர்த்த வஸதி நன்றாகவுண்டு. ... *

## — ஸ்ரீ ஜகன்னாதம் —

இதுவே புரீஜகன்னாத மெனப்படும். ஸ்ரீகூர்மத்திலிருந்து (கடற்கரையில்) புரீஸ்டேஷன் சேர்ந்து ஸமீபத்தில் இந்த க்ஷேத்திரம் சேர்வது. வெகு புராதனமும் அதிவிசாலமுமான மந்திரம். இங்கு ஸ்ரீவைஷ்ணவமடங்கள் இருபதுக்கு மேலுண்டு. ஸன்னிதி ஸமீபத்தில் எமார்மடம், த்ரீமாலீமடம், உத்தரபார்சுவமடம் தங்குவதற்கு ஸௌகரியம். ஊரைச் சுற்றித் தீர்த்த விசேஷங்கள் பலவுண்டு ... *

## — கல்கத்தா நகரம் —

ஸ்ரீஜகன்னாதத்திலிருந்து கல்கத்தா நகரம் (Howra) சேர்வது. க்ஷேத்ர தீர்த்த யாத்ரா ரஸிகர்களுக்கு இந்நகரில் கர்த்தவ்ய மொன்று மில்லையாகிலும், தர்சநீயமான மஹாநகரமாயிருப்பதாலும், இதைக் கடந்தே மேல் யாத்திரை செல்ல வேண்டியிருப்பதனாலும் இங்கே இரண்டொருநாள் தங்கியிருக்கலாம். இங்கே ஸ்டேஷன் ஸமீபத்தில் கங்கை பெருகுகின்ற தெனினும் அது வைதிகர்கள் உகக்கும் சுத்த கங்கை யென்னப் பொருத்தமில்லை. இந்த நதியின் கரைக்கு (ஜகன்னாதகாட்) என்று பெயர். இங்கு பலதேவஜீ மந்திரமென்கிற கோவில் நூதன பரிஷ்காரங்கள் செய்யப்பட்டு வாஸயோக்யமாக விளங்குகின்றது. ஆனாலும் 5, 6 மைலுக்கு அப்பாலுள்ள மிக விசாலமான லக்ஷ்மீ நாராயண மந்திரத்தில் தங்கலாம். இந்த ஸன்னிதி ஸமீபகாலத்தில் ஏற்பட்டது. ஸ்ரீவைஷ்ணவயாத்ரிகள் மிகவும் ஸௌகரியமாகத் தங்கி யிருப்பதற்கு உரியது. ஸமீபத்தில் தீர்த்த வஸதியுமுண்டு.

## — கயா க்ஷேத்ரம் —

கல்கத்தாவிலிருந்து கயைக்கு வந்து சேர்வது. வடதேச யாத்திரை செய்பவர்கள் இவ்விடத்தையும் காசியையும் பதரிகாச்ரமத்தையுமே முக்கிய லக்ஷ்யமாகக் கொள்ளுவர்களென்பதைப்பற்றி நாம் எழுதவேணுமோ? கயாச்ராத்தத்தை இங்கு நடத்தி வைக்கத் தென்னாட்டுப் புரோஹிதர்கள் விசேஷமாக இங்குக் குடிகொண்டிருக்கின்றனர். அவர்களே ஸ்தல வசதிகள் செய்து கொடுக்கிறார்கள். தர்மசாலைகளுமுண்டு. பல்குநீ நதிக்கரையில் ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் காதி, அனந்தாசார்ய ஸ்வாமியினுடைய ஸ்தானம் [ஸ்ரீ ராமானுஜமடம்] மிகவும் ஸௌகரியமாக அமைந்திருக்கின்றது. பல்குநீ நதியில் நிர்மலமான தீர்த்தம் சிறு ப்ரவாஹமாகப் பெருகிக்கொண்டிருக்கும். நதிக்கரையில் கயாதீசனுடைய ஸந்நிதி விசாலமாகவும் ரமணீயமாகவும் விளங்குகின்றது. இங்கே தான் விஷ்ணுபாதம். *

## — காசீ க்ஷேத்ரம் —

கயையிலிருந்து காசிக்கு வந்து சேர்வது. இந்நகரின் பெருமையைப் பற்றியோ, இங்குள்ள பட்டு பீதாம்பரக் கடைகளின் சிறப்பைப் பற்றியோ அபூர்வமாகத் தெரிவிக்கவேண்டியதுண்டோ? எல்லாவகைச் சிறப்புகளிலும் நிகரற்று விளங்கு மிந்நகரில் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் அருமைப்பட்டிருக்கிறார்களென்பதொன்றே குறை. இதர மதஸ்தர்களில் பரிகணித வித்வான்களென்று மதிக்கக்கூடியவர்கள் எண்ணிறந்துள்ளார்கள். வித்யாலயங்களும் அபரிமிதங்கள். பதினான்கு வித்யைகளுக்கும் (அல்லது) அறுபத்து நான்கு கலைகளுக்கும் ப்ரபல ப்ரசாரம் காணவேணுமானால் அது இம் மஹாநகரமொன்றில்தான் காணலாகும். கங்கை ஸுப்ரஸந்நமாகப் பெருகிக்கொண்டிருக்கிறது. யாத்ரிகர்கள் தங்குவதற்கு கங்கைக் கரையிலேயே அனேக ஸ்தானங்களுண்டு. நாகபூர் போஸலாகாட்டில் போஸலா மந்திரம் ஸர்வ ப்ரகாரத்தாலும் ரமணீயமானது. .... .... *

## — ப்ரயாகக்ஷேத்ரம் —

காசியிலிருந்து ப்ரயாகக்ஷேத்ரம் (Allahabad) வருவது. இங்கு த்ரிவேணீ ஸ்நானம் விசேஷமென்பது ஜகத் ப்ரஸித்தம். "கங்காயமுநயோர் மத்யே யத்ர குப்தா ஸரஸ்வதீ" என்கிற ப்ரயாகமாஹாத்மிய வசனத்தின்படி கங்கையும் யமுனையும் ஸரஸ்வதியும் கூடுமிடமாதலால் த்ரிவேணீ ஸங்கமமெனப்படுகிறது. கங்கா யமுனைகளின் சேர்க்கை ப்ரத்யக்ஷமாகத் தெரிகிறது. ஸரஸ்வதிமட்டும் குப்தவாஹினி. வடநாட்டில் இந்த ஸ்தலத்திற்கு விசேஷ மாஹாத்மியம் சொல்லப்படுகிறது. பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமமும் இங்குள்ளது. தாராகஞ்ஜ் என்னுமிடம் இவ்விடத்தில் கங்கைக்கு ஸந்நிஹிதமாதலால் இங்கே தங்குவது. இங்கு த்ரிதண்டி மடம் என்னுமிடம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் புகலிடம். தர்மசாலைகளும் பலவுண்டு. பரமார்த்த பூஷண, கோவிந்தாச்சாரி யென்பவர் ஸ்ரீ வைஷ்ணவர்களின் வஸதிக்காக மிக விசாலமான மந்திரமொன்று இங்கே அமைத்திருக்கிறார். சுகமாகத் தங்கலாம். கீடகஞ்ஜில் நம்மவர்களின் வேணீமாதவ மந்திரமுள்ளது *

## — ரீவா நகரம் —

இது யாத்ராஸ்தலத்தில் சேர்ந்ததன்றாகிலும் விருப்பமுள்ளவர்கள் சென்று வரலாம். இங்கு லக்ஷ்மணபாக் என்னும் விசாலரமணீய மனோஹரோத்யானத்தில் ஸ்ரீ வைஷ்ணவ பீடாதிபதியாய் விலக்ஷண ஸம்பத்துடன் விளங்கிவரும் மஹாத்மாவுளர். தமஸாநதியும் இங்கே ப்ரவஹிக்கின்றது. ஸம்ஸ்க்ருத கலாசாலையுமுண்டு.

## — சித்ரகூடம் —

அடுத்தபடியாக சித்ரகூட க்ஷேத்ரம் சேர்வது. "ஸுபச் சித்ரகூடோஸௌ கிரிராஜோபமோ கிரிः, யஸ்மிந் வஸதி காகுத்ஸ்தः குபேர இவ நந்தநே" என்று ஸ்ரீ ராமாயண ப்ரஸித்தமான அதிசயம் இன்னமும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம் போலே யிரா நின்றது. இவ்விடத்து ஸந்நிவேசம் பரமபாவநம், பரமரமணீயம்

என்னுமத்தனை. "ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா" என்றதற்கு முக்யலக்ஷ்யமாக மந்தாகிநிப்ரவாஹிக்குமழகும், ப்ரதக்ஷிணார்ஹமாகப் பர்வதராஜம் ப்ரகாசிக்குமழகும், கரையிலே ஸுகவாஸ யோக்யமாக தர்மசாலைகள் திகழுமழகும் மிகமிக ஆகர்ஷகமாயிருக்கும். இவ்விடத்தில் எத்தனை நாள் வஸித்தாலும் திருப்தியே பிறவாது. அடியேன் 17 தடவை ஸேவித்த தலம் இது. .... *

## — திருவயோத்யை —

சித்ரகூடத்திலிருந்து திருவயோத்யை சேர்வது. ஸப்த புண்ய புரிகளைப் பரிகணநை செய்யும்போது "அயோத்யா மதுரா மாயா" என்று இத்தலமேயன்றோ முற்பட்டிருக்கின்றது. ஸ்ரீ வைகுண்டத்தின் ஒரு கண்டமே மண்ணுலகில் இந் நகராக வந்து தோன்றியதாய்ச் சொல்லப்படுமதில் அதிவாத சங்கையே யில்லை. இங்கு அநுபாவ்ய ஸ்தலங்களாக அநேக இடங்கள் காட்டப்படுகின்றன. 'த்ரேதாயுகமெங்கே! கலியுகமெங்கே!' என்று சிலர் சொல்ல நேர்ந்தாலும், அந்தந்த ஸ்தல விசேஷங்களைக் காணும்போது ஆஸ்திகர்களுக்கு மஹத்தான ப்ரதிபத்தியே உண்டாகிறது. ஸந்தத ப்ரவாஹிநியான ஸரயூ நதியின் கரையிலே ஸத்குரு ஸதன மென்னுமிடத்தில் வெகு ஸௌகரியமாகத் தங்கியிருக்கலாம். கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமத் யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமியும் அவருடைய தேவியாரும் இத்தலத்தில் விலக்ஷணமாக அமைத்திருக்கின்ற சக்ரவர்த்தி திருமகனார் ஸந்நிதி தென்னாட்டினர்க்குப் புகலிடமாகவுள்ளது. இந்த ஸந்நிதிக்கு அம்மாஜீ மந்திரம் என்றே ப்ரஸித்தி. ... ... ... *

## — கான்பூர் —

திருவயோத்யையிலிருந்து கர்ணபுரி யென்னுமிடம் சேர்வது. இது மிகப் பெரிய நகரம். சுத்த கங்கையில் முடைந்தாடவே இவ்விடம் வருவர்கள். இவ் விடத்தில் ஸ்ரீவைஷ்ணவ மந்திரங்கள் பலவுள்ளன. அவற்றுள் ப்ரயாகநாராயண (திவாரீ) மந்திரம் மிகப்பெரிது. கங்கைக்குச் சிறிது சமீபத்திலுள்ளது. இந்த மந்திரம் மஹாதநிகச்ரேஷ்டரான ஸ்ரீ வைஷ்ணவோத்தமர்களால் பரிபாலிக்கப்பட்டு வருவதால் ஸ்ரீவைஷ்ணவ யாத்ரிகளுக்கு விசேஷித்து ஆதரவு அளிக்கப்படுகிறதிங்கு. ஸ்டேஷன் ஸமீபத்தில், பண்டித ஹரிநாராயண ஸ்வாமியின் மந்திரமும் வாஸ யோக்யமானதே. ... ... ... ... ... *

## — நைமிசாரண்யம் —

கான்பூரிலிருந்து (பாலாமு ஜங்ஷன் வழியாக) நைமிசாரணியம் வந்து சேர்வது. இந்த க்ஷேத்ரத்தின் மாஹாத்மியம் அபரிமிதமாகச் சொல்லப்படுகிறது. நான்முகக்கடவுள் பகவானை ஸாக்ஷாத்கரிக்க நெடுங்காலம் தவம்புரிய, அரண்ய ரூபியாக எம்பெருமான் ஸேவைஸாதித்ததாகவும், இதில் த்ருப்தி பெறாமல் மறுபடியும் தவம்புரிய தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்ததாகவும் சொல்லப்படுகிறது. தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்தவிடம் புஷ்கரமென்றும், அரண்யரூபியாக ஸேவை ஸாதித்தவிடம் நைமிசாரண்யமென்றும் பிரஸித்தமானது.

நைமிசாரணியமென்று ப்ரஸித்தமான இவ்வரண்யத்திலேயே பல மஹர்ஷிகள் நெடுங்காலம் வஸித்துப் பல புராணங்களை இயற்றினதாகத் தெரியவருகிறது. இங்கே கோமதீ நதி ப்ரவஹிக்கின்றது. இத்தலத்திற்குப் பதிகம் பாடியருளின திருமங்கையாழ்வார் பாசுரந்தோறும் "நைமிசாரணியத்துளெந்தாய்!" என்று பாடியிருக்கையாலே இங்கே ஒரு ஸன்னிதியிருப்பது போலவும் அந்த ஸன்னிதியிலுள்ள அர்ச்சா மூர்த்தியையே ஆழ்வார் மங்களாசாஸனம் செய்திருப்பது போலவும் பலர் நினைப்பதுண்டு. உண்மை அப்படியில்லை. அரண்ய ரூபியான பகவானையே 'நைமிசாரணியத்துளெந்தாய்' என்று விளித்துப் பாடினபடி. ஸமீபகாலத்தில் இவ்விடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை ஸ்வாமி திருவடி ஸம்பந்திகளான உத்தராதி வைஷ்ணவர்களால் ஒரு சிறிய ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கிறது. அதில் நம்மவர்களுக்கு வசதி சௌகரியமுண்டு. வேறு தர்மசாலைகளுமுண்டு. இத்தலம் மிகவும் விஸ்தாரமான அரண்யம். அங்கெல்லாம் ஸஞ்சரித்து வருவது தான் நைமிசாரண்ய ஸேவை யெனப்படும். யதா சக்தி கோமதீ நதியின் தீரம் வரையில் ஸஞ்சரித்து வரலாம்.

## — ஹரித்வாரம் —

நைமிசாரணியத்திலிருந்து ஹரித்வாரம் சேர்வது ஸப்த புண்யபுரிகளைக் கணக்கிடுகின்ற "அயோத்யா மதுரா மாயா" இத்யாதி ச்லோகத்தில் 'மாயா' என்றது ஹரித்வாரத்தையே யென்பர். ஹரித்வார ஸமீபத்தில் மாயா என்று தனியே யொரு க்ஷேத்ரமுள தென்பாருமுளர். இத்தலம் நாளடைவில் வெகு ரமணீயமான நகரமாய்விட்டது. உண்மையில் வட நாட்டில் இவ்வளவு ரமணீயமும் பாவனமுமான க்ஷேத்திரம் வேறில்லை யென்று சொல்லலாம். ஒரு நாளும் வற்றாத ப்ரவாஹமுடைய கங்கை இங்கே நிர்மலமாகப் பெருகுகின்றது. அதன் கரையிலே தேவேந்திர பவனம் போன்ற பல மஹாபவனங்கள் வரிசையாக அமைக்கப்பட்டிருக்கின்றன. வேறு பல வீதிகளும் மாட மாளிகைகளும் மலிந்து விளங்குகின்றன. சென்னை உப்பட்டூர் ஆழ்வார் செட்டியாருடைய மிகப் பெரிய தர்மசாலை 'மதராஸீ தர்மசாலை' என்று வழங்கப்படுகிறது. தென்னாட்டினர்க்குப் பெரும்பாலும் இங்கே வசதி சௌகரியமுள்ளது. இதனருகிலுள்ள பிர்லா ஹவுஸ் என்னும் மிக விசாலமான ஸுந்தர மந்திரத்திலும் தங்கலாம். ... ... *

## — ஸ்ரீ பதரிகாச்ரம யாத்திரை —

மூலஸ்தானமாகிய ஹரித்வாரத்தில் நின்று 193-வது மைலில் உள்ளது ஸ்ரீபதரிகாச்ரமம். இடையில் பதினைந்காவது மைலிலுள்ளது ஹ்ருஷிகேசக்ஷேத்ரம். காலால் நடந்தே வதரிவணங்கச் செல்பவர்கள் இங்கிருந்தே நடந்துசெல்ல ஆரம்பிக்கின்றார்கள். ஆனால் இங்கிருந்து வதரியளவும் மோடார் பஸ் போக்குவரத்து ஏற்பட்டுப் பல வருஷங்களாயின. பஸ்ஸில் போவதைக் காட்டிலும் நடந்து செல்வதே நன்று. வழி முழுதும் அனேகமாய் கங்கையைக் கண்டுகொண்டே போவோமானாலும் அதன் தீர்த்தம் நமக்கு எளிதாகாது. சிலசில விடங்களில் மாத்திரம் கங்கையிலிறங்க வழி கிடைக்கும். மற்ற இடங்களிலெங்கும் மலையருவி

நீர்ப்பெருக்கு வாய்த்திருக்கு மழகு வாய்கொண்டு வருணிக்க முடியாதது. ஸ்நாந பாநாதிகளுக்கு முற்றிலும் இந்தத் தாரையே உபயோகமாகும். கண்ட காட்சியிலேயே ஸகல தாபங்களுமாறும்.

வழியில் எங்கு சிரமம் தோன்றினாலும் அங்குத் தங்கியிருக்க வசதிகளுண்டு. சில இடங்களில் இரண்டு மூன்று மைல் தூரத்திலும், சில இடங்களில் நாலைந்து மைல் தூரத்திலும் தங்குமிடங்கள் அழகாக ஏற்பட்டிருக்கின்றன. அவை சட்டிகளென வழங்கப்பெறும். பெரும்பாலும் மேல்மாடமுள்ள மண் மாளிகைகளாகவே தென்படும். ஆங்காங்கு பலசரக்கு மளிகைகளுமுண்டு. தளிகைக்குப் பாத்திர வகைகளும் அன்புடனளிக்கின்றார்கள். சில விடங்களில் புளி தயிர் காய்கறி கிடைப்பதரிது.

ஹ்ருஷீகேசத்திலிருந்து நாற்பத்தைந்தாவது மைலில் தேவப்ரயாகமென்றுள்ளது. இது பாகீரதிக்கும் அலகநந்தாவுக்கும் ஸங்கமமாகுமிடம். பெரியாழ்வார் திருமொழியில் (4-7) * தங்கையை மூக்குந் தமையனைத் தலையும் * என்கிற திருமொழியில் மங்களாசாஸனம் செய்துள்ள கண்டமென்னுங் கடிநகர் இத்தலமே என்று சொல்லுகிறார்கள். இங்கிருந்து இருபதாவது மைலிலுள்ளது கீர்த்திநகர். அங்கிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீநகர். இங்கிருந்து 110 மைலிலுள்ளது ஸ்ரீபதரிகாச்ரமம். பிப்பல்கோடியிலிருந்து கருடகங்கா, பாதாளகங்கா வழியாய் ஜோஷிமட் சேர்வது. ஜோஷிமட் என்கிற விடம் திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற [பிரிதி] என்கிற திவ்ய தேசம் என்கிறார்கள்.

ஜோஷிமட்டிலிருந்து 19 மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீபதரி காச்ரமம். ஊருக்கு பத்ரீநாத் என்று பெயர். இது மிகச் சிறிய ஊரே. கங்கையின் கரையிலேயே ஸ்ரீபதரீநாதன் திவ்ய ஸந்நிதியுள்ளது. ஸந்நிதி மிகப் பெரிதுமன்று; மிகச் சிறிதுமன்று. * நர நாரணனா யுலகத்து அறநூல் சிங்காமை விரித்தவனெம்பெருமான் * என்று திருமங்கையாழ்வாரும், "தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்" என்று பிள்ளை லோகாசார்யரும், "திருமந்த்ரத்தை ஸ்ரீபதரி காச்ரமத்திலே...... ப்ரகாசிப்பித்தான்" என்று மணவாள மாமுனிகளும் அருளிச்செய்தபடியே எம்பெருமான் நாராயண மூர்த்தியாய் விபவாவதாரஞ் செய்தருளின விடமென்கிற ஒப்புயர்வற்ற ஏற்றம் பெற்றது இந்த திவ்வியதேசம். இப்பெருமை பற்றியே இத்தலம் உத்தேச்யம். ஸந்நிதியில் ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளி யிருக்கிறார். ஸாளக்ராம சிலாமயமாய் பத்மாஸநபந்தமுள்ளதாய் யோக முத்ரையோடு கூடின இரண்டு திருக்கைகளை யுடையதான திருமூர்த்தி [ஸ்ரீமந் நாராயணன்] நடுவில் ஸேவை ஸாதிப்பது. இடபுறத்தில் நரநாராயண சிலா மூர்த்திகள். வலபுறத்தில் கருத்மான், குபேரன்.

மலைநாட்டு நம்பூரிகள் திருவாராதனம் ஸமர்ப்பிக்கிறார்கள். அர்ச்சகர்களை 'ராவல்' என்று இங்கு வழங்குவர். தினப்படியாய் காலையில் திருமஞ்சனம் வெகு விபவமாக நடைபெறுகின்றது. நூற்றொரு ரூபாய் கட்டணம் செலுத்துமவர்கள் திருமஞ்சனமுட்பட ஒருவேளை யுபயக்காரர்களாவர்கள். அவர்கள் அருகிலிருந்து திருமேனியைப் பரிபூர்த்தியாக ஸேவித்து மற்றெல்லாமும் ஸேவித்து மகிழ ப்ராப்த

மாகிறது. செவிக்கினிய வேத கோஷத்துடனும் ஸ்தோத்ரரத்னம் முதலிய பல ஸ்தோத்ரங்களின் பாராயணங்களுடனும் ஸகலோபசார ஸமேதமாக நடைபெறுகின்ற திருமஞ்சனம் அலங்காரவகை திருவாராதனம் முதலியவை மநோஹரங்களாயிருக்கின்றன. ஐந்து ரூபாய் செலுத்தினல் ஸஹஸ்ரநாமார்ச்சனை. ஒரு ரூபாய்க்கு அஷ்டோத்தர சதநாமார்ச்சனை. ஒரு ரூபாய்க்கு ஹார்த்தி என்றிப்படி நிபந்தனைகள் ஏற்பட்டிருக்கின்றன. பனியின் பாதை இங்கு அதிகமேயாதலால் உடலுக்குப் போதுமான கவசங்கள் இருக்கவேண்டும். அர்ச்சகர் முதலான ஸன்னிதி கைங்கர்ய பரர்களுங்கூட நாலைந்து சொக்காய்களணிந்தே கைங்கரியங்களை நடத்தி வருகிருர்கள். உத்தரீயமும் போர்த்துக் கொள்ளாமல் உலாவுகின்ற மஹாத்மாக்களும் சிலருளர்.

இங்குத் தீர்த்தமாடுவதற்கு எம்பெருமான் தானே பரம க்ருபையுடன் பண்ணிவைத்திருக்கிற ஸௌகரியம் அற்புதமானது. ஸந்நிதி யெதிரில் தப்த குண்டமென்று ஒரு சிறு குளமுள்ளது. அதில் இரவும் பகலு மோய்வின்றி உஷ்ண தீர்த்த தாரை அமோகமாகப் பெருகிக் கொண்டே யிராநின்றது. அதிலிருந்து வெளியிற் பெருகிச் செல்லுகின்றது. இந்த தீர்த்தம் பெருமாளுடைய திருவடி வாரத்தில் நின்றுமே பெருகுவதாகத் தோன்றுகிறது. அடியார்களின் பாங்குக்காக அக்நி பகவானுக்கு ஸ்ரீமந் நாராயணன் தானே கட்டளையிட்டு இங்ஙனே நடத்தி வருகிறபடி.



இந்த தப்தகுண்டத்தில் அமிழ்ந்தே அனைவரும் நீராடுகிருர்கள். பின் மாலை நான்குமணி முதலாகவே நீராடுவதும் பெருமாளை ஸேவிப்பதுமான காட்சி பரமபுனிதம். இந்த தப்தகுண்டம் அங்கு இல்லையென்ருல் ஒருவரும் ஒருநாளும் அங்கு வாஸம் செய்ய இயலாது. தேஹம் பொறுக்குமளவான சூடு பொருந்திய இந்த தீர்த்தத்தின் பக்கத்திலேயே தேஹம் பொறுக்கமுடியாத குளிர்ச்சி வாய்ந்த கங்கையும் ஆச்சரியமாகப் பெருகுகின்றது. அதில் குடைந்தாடுவார் மிகச் சிலரே.

ஸந்நிதியின் ஸமீபத்திலேயே ப்ரஹ்மகபாலமுள்ளது. அதில் பிண்டப்ரதான மூறைகளும் நடைபெற்று வருகின்றன. மலையின் ஒரு சிறு பாறையே கபாலத்தின் ஆக்ருதியாகக் காண்கிறது. இத்தலத்தில் முக்கியமான தீர்த்தங்கள் ஐந்து- தப்த குண்டம், நாரதகுண்டம், கூர்மதாரா, ப்ரஹ்லாத தாரா, ரிஷிகங்கா என்பவை. கூர்மதாரையின் தீர்த்தமே பெரும்பாலும் இவ்விடத்தில் அன்னபானங்களுக்குக் கொள்ளப்படுகிறது. தப்தகுண்ட தீர்த்தம் வாயினுட் செல்லாது. நியதமாக வதரியில் வாழ்பவர்கள் ப்ரஹ்லாததாரையில் நீராடுகிருர்கள். இது ஆரோக்யமளிப்பதாம். இந்த தீர்த்தம் அநுஷ்ணசீதம்.

தேவப்ரயாகையிலுள்ள சாஸ்த்ரிகளே இங்கும் தீர்த்த புரோஹிதராய் ஸ்ரீவைஷ்ணவ அப்யாகதர்களுக்கு இடமளித்து ஸௌகரியங்கள் செய்து கொடுக்கிருர்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. [ஜகத்ப்ரஸித்தனையவரான] ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமிகளால் ப்ரதிஷ்டாபிதமான எம்பெருமானுர் ஸன்னிதியே இங்கு ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடம் இனி ஹரித்வாரம் திருப்புவது. *

— குருக்ஷேத்ரம் —

ஹரித்வாரத்திலிருந்து குருக்ஷேத்ரம் சேர்வது. கீதையின் உபக்ரமம் "தர்ம க்ஷேத்ரே குரு க்ஷேத்ரே" என்பதாதலால் இந்த க்ஷேத்ரத்தின் பெருமையைப்பற்றி நாம் எழுதவேண்டியது முண்டோ? 7, 8 மைல் தூரம் சென்று, தரிசிக்கவேண்டிய பல விசேஷங்கள் இங்கு உண்டு. கீதை அவதரித்தவிடம், பீஷ்மாசார் சரதல்ப கதரான விடம், ஸூர்யகுண்டம், பாணகங்கை முதலான பலவிடங்கள் இத் தலத்திற்குச் சிறப்பானவை. ரைல் ஸ்டேஷனுக்கு அருகாமையில் ஸௌகர்யமான தருமசாலை யுள்ளது. பிர்லாமந்திரம் புதிதாக ஏற்பட்டுள்ளது. .... ... *

— புதுடில்லி —

குருக்ஷேத்திரத்திலிருந்து டில்லி மாநகர் சேர்வது. இது லௌகிகமான மஹாநகரமென்று தோன்ற நின்றாலும் பாண்டவர்கள் ஆண்ட ராஜதானியாகை யாலும், கண்ணபிரான் பலகால் பாதாரவிந்த விந்யாஸம் பண்ணின இடமாகை யாலும் தூய பெருநீர் யமுனை பெருகு மிடமாகையாலும் இதுவும் புண்யபுரியாகவே கருதத் தக்கது. இவ்விடத்தில் பிர்லாமந்திரமும் அதைச்சேர்ந்த மஹத்தான தருமசாலையும் யாத்ரிகர்களுக்கு மிகவும் ஸௌகரியமான வஸதியாகும். உத்யோ கார்த்தமாகத் தென்னாட்டிலிருந்து பலவாயிர மஹான்கள் இம்மஹாநகரத்தில் வந்து ப்ரதிஷ்டிதர்களா யிருக்கிறார்களென்பது ப்ரஸித்தமன்றோ. ... ... *

— மதுரை ப்ருந்தாவனாதிகள் —

டில்லியிலிருந்து வடமதுரை வந்து சேர்வது. ப்ருந்தாவன கோகுல கோவர்த்தனாதிகள் ஸேவிக்கவேணும். ப்ருந்தாவனத்தில் ஸ்ரீ கோவர்த்தனம் ஸ்வாமி பூலோக வைகுண்டமாக அமைத்திருக்கிற மஹாஸந்நிதியில் ராஜபவ னத்திற் போல் தங்கி யிருக்கலாம். ... .... .... ... *

— ஆக்ரா — (Agra) —

மதுரா பிருந்தாவன கோகுல கோவர்த்தனங்களை ஸேவித்துக்கொண்டு ஆக்ரா நகரம் பார்க்கலாம். க்ஷேத்ர தீர்த்தயாத்ரா ப்ரகரணத்தில் இந்நகர்க்கு வரவேண்டிய ப்ரஸக்தி இல்லை.

ஆக்ராவில் மிகச் சிறந்த கண்காட்சி யுள்ளது. 'தாஜ் மஹால்' என்று சொல்லுவர்கள். சில நூற்றாண்டுகட்கு முன்பிருந்த ஒரு மொகலாய் அரசன் (ஷாஜஹான்) தன்னுடைய மனைவியின் (மும்தாஜ்) ஸ்மாரக சின்னமாகக் கட்டு வித்த கட்டிடம் இது. ஆச்சரியமான ஸன்னிவேசம் என்று இவ்வளவுதான் எழுதலாம். துருஷ்க ப்ரபுவின் இடம் என்கிற ஒரு அவத்யமே இதற்குச்சொல்லத் தக்கதாகவுள்ளது. பகவத் விபூதியென்று நினைத்துப் பார்க்குமளவில் இதற்கீடான வொரு ஸன்னிவேசம் இல்லையென்று சொல்லலாம். இதன் ஸமீபத்தில் யமுனை யாறு பெருகுகின்றது. *தூய பெருநீர் யமுனைத் துறைவனுக்கு இப்படிப்பட்ட ரம்யமான ஹர்ம்யமொன்று அமையவேண்டுமென்று ஆசாஸிக்கலாம். இவ்வளவு

அதிசயமாகச் சொல்லப்படுகிற இந்த மஹத்தான இடத்தையும் பரமாணுவாக்கும் படியான மற்றொரு கட்டிடம் சிலவாண்டுகளாக இந்நகரின் ஸமீபத்தில் தயால்பாக் என்னும் ஸ்தலத்திலேயே அமைக்கப்பட்டு வருகிறது. அது பல பல கோடி ரூபாய்ச் செலவில் அமைகின்ற தென்றும் முடிவுபெறுவதற்கு இன்னும் பத்தெட்டு வருஷங்களாகு மென்றும் 15 வருடங்களுக்கு முன் கேள்விப்பட்டோம். இந்நகரில் ஸ்டேஷன் ஸமீபத்திலேயே தருமசாலை யுள்ளது. .... .... ... *

## — ஜயபூர் —

ஆக்ராவிலிருந்து ஜயபூர். இது புராதனமான ராஜஸ்தானம். இப்போது ராஜஸ்தானங்களின் நிலைமை உலகமறிந்ததே. இவ்விடத்தில் க்ஷேத்ர தீர்த்த விசேஷம் ஒன்று மில்லையாயினும் நகர்ச் சிறப்பு அவசியம் காணத்தக்கது. மிக விசாலமான வீதிகளும், ஒரே ரீதியான உயர்ந்த மாடமாளிகைகளும் கண்ணைக் கவர்கின்றன. இவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ப்ரபுக்கள் வியாபார நிமித்தமாக விசேஷமாய்க் குழுமி யிருக்கிறார்கள். ஸ்ரீவைஷ்ணவர்கள் தங்குவதற்கு ஸௌகரிய மளிக்கும் மந்திரங்களும் இங்குப் பலவுண்டு. அவற்றுள், ராம்நகர்கஞ்ஜ் என்னு மிடத்தில் (ஊர்க் கோடியில்) மிக விசாலமான லக்ஷ்மீ நாராயண மந்திரமுள்ளது; அதிலே ஆனந்தமாகத் தங்கி யிருக்கலாம். ... ... .... *

## — அஜ்மீர் புஷ்கரம் —

ஜயபூரிலிருந்து அஜ்மீர் ஸ்டேஷன் சேர்ந்து, அங்கிருந்து ஒன்பதாவது மைலிலுள்ள புஷ்கர க்ஷேத்ரம் சேர்வது. ஸ்டேஷனிலிருந்து ஒருமணி காலத்திற்குள் க்ஷேத்ரம் சேரும்படியான ஸாதனங்களுண்டு. இவ்விடத்தில் பகவானே தீர்த்தரூபியாக ஸேவை ஸாதிப்பதனால் அந்த தீர்த்த விசேஷத்திற்கே புஷ்கர மென்று திருநாமம். அந்தப் பெயரையிட்டே ஊர் வழங்கப் பெறுகின்றது. தென்னாட்டில் எம்பெருமானுடைய திருநாமத்தையிட்டே *வானமாமலையென்று ஊர்வழங்கப் பெற்றது போலவே இதுவுமென்று கொள்ளலாம். இந்த தீர்த்த விசேஷமே இவ்விடத்திற்கு ஏற்றம். இங்கு இரண்டு ஸன்னிதிகளுண்டு. ஒன்று நூறு வருஷங்களுக்கு முன்பு காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஆத்ய. அனந்தாசார்ய ஸ்வாமியால் ப்ரதிஷ்டாபிதமானது. மற்றொன்று ஸமீபகாலத்தில் மார்வாடத்திலுள்ள மட்வாறு மகனீராம் ஸேட் ஸ்ரீ அவர்களால் வெகு ரமணீயமாக அமைக்கப்பட்டது. இதற்கு ரமாவைகுண்டமென்று பெயர். முந்தைய ஸன்னிதிக்கு ரங்கஜீ மந்திரமென்று பெயர். இரண்டு ஸன்னிதிகளிலும் தேசாந்தரிகள் தங்குவதற்கு ஸ்தல ஸௌகரியம் நன்றாகவுண்டு. ... .... ... ... *

## — நாதத்வாரா —

புஷ்கரத்திலிருந்து நாதத்வாராவென்கிற க்ஷேத்ரம் சேர்வது. இத்தலம் நமது தென்னாட்டினர்க்கு விசேஷமாகத் தெரியாது உதயபுர ராஜதானியில் வல்லபாசார்யர்களின் ஆதீனத்திலுள்ளது இத்தலம். வல்லபர்கள் ஸ்ரீ க்ருஷ்ணபக்தியில் மிகச் சிறந்தவர்கள். கண்ணனையல்லது வேறு தெய்வமறியாரிவர்கள். இவ்விடத்து

விபவங்கள் வாசாமகோசரம். ஸன்னிதி மிகவும் விசாலமானது. தினப்படி ஆயிரக் கணக்கான ஸேவார்த்திகள் வந்து தொழுகிருர்கள். இங்கு தினந்தோறும் பலவாயிர ரூபாய்களுக்குமேல் போகங்களுக்காகச் செலவு செய்யப்படுகிறது. சிப்பந்திகளின் சம்பளம் மட்டும் ஒருநாளைக்கு ஐயாயிரம் ரூபாயாகிறதாம். எனவே மாதமொன் றுக்கு ஒன்றரை லக்ஷம் ரூபாய் செலவாகிறது. சம்பளவகையில் மாத்திரமே இது. நமது நாட்டில் திருவேங்கடமுடையானுடைய ஐச்வரியத்தை ஏகதேசமாக நினைக்கச் செய்து விடுகிறது இத் தலத்து ஸம்ருத்தி. ஊரில் தர்மசாலைகள் நிரம்பியிருக்கின்றன. தீர்த்த வஸதிகளுக்கும் குறையில்லை. ஸ்ரீயுத கோஸ்வாமி திலகாயித கோவிந்தலால்ஜீ என்கிற வல்லபாசார்யர் இத்தலத்தில் ராஜகுரு பீடத்தில் அமர்ந்திருந்தார். தற்காலநிலைமை தடுமாறி யிருக்கின்றதாம். ... *

## — ஸித்தபூர் —

நாதத்வாராவிலிருந்து ஸித்தபூர் வந்து சேர்வது. இவ்விடத்தை மாத்ருக்யா என்று வழங்கி வருகிருர்கள். ஸ்ரீ வைஷ்ணவேதரர்கள் இவ்விடத்தில் மாத்ரு ச்ராத்தம் செய்கிருர்களென்று கேள்வி. ஸரஸ்வதீஸ்நானம் இங்கு விசேஷம். ஸ்ரீரங்கம் முதல் திருமாளிகை தாதாசார்யருக்கு அதீனமான மந்திரமொன்று இங்கு ஸ்டேஷன் ஸமீபத்திலுள்ளது. அதில் வாஸ ஸௌகரியமுண்டு. வேறு தர்ம சாலைகளு மிருக்கின்றன. ... ... ... ... ... *

## — இனி த்வாரகாயாத்திரை —

ஸித்தபூரிலிருந்து மெஹ்ஸாணு. வீரங்காம். ஜாம்நகர் வழியாக த்வாரகைக்குச் செல்லவேண்டும். இடையில் விச்ராந்தி கொள்ளாமல் செல்ல முடியாததலால் வீரங்காம் என்னுமிடத்தில் ஒரு நாள் தங்கலாம். இவ்வூருக்கடுத்தபடி ஜாம்நகரில் தங்கலாம், தங்காமலும் நேராக த்வாரகை சென்று சேரலாம்.

## — கோமதீ த்வாரகை —

கோமதீ த்வாரகை யென்றும் பேடீத்வாரகை யென்றும் டாகோர்த்வாரகை யென்றும் இப்படி பலவிடங்களை த்வாரகையாக வ்யவஹரித்து வருகிருர்கள். ஆனாலும் த்வாரகை யென்று உலகமெல்லாம் வழங்குவது கோமதீத்வாரகையேயா கும். நைமிசாரணியம், லக்னௌ முதலானவிடங்களில் ப்ரவஹிக்கிற கோமதீநதியா னது இவ்விடத்தில் ஸன்னிதி யருகேயுள்ள ஸமுத்ரத்தில் ஸங்கமமடைகிறபடியால் இவ்விடத்தை கோமதீத்வாரகை யென்று வ்யபதேசிக்கிருர்கள். இந்த நதியின் தீர்த் தம் மற்றவிடங்களில் மதுரமாயிருந்தாலும் இங்கு ஸமுத்ர ஸம்பந்தம் ஒரு யோஜனை தூரம் ஏற்பட்டதனுல் அங்கிருந்தே க்ஷாரஸலிலமாய்விட்டது. த்வாரகாநாதனு டைய ஸன்னிதி வெகு புராதனமாயும் அற்புத சிற்பங்களமைந்ததாயும் ஸர்வேந்த்ரி யாகர்ஷகமாயும் காண்கிறது. *சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதி* என்ற ஆண்டாளுடைய மங்களாசாஸனம் மிகப் பொருத்தமாகக் காண்கிறது. ஸ்டேஷனுக்கும் ஸன்னிதிக்கு மிடையில் தோதாத்ரிமடம் யாத்ரிகர்கள் தங்குவதற்கு மிகவும் ஸௌகரியமான இடம்; பெரிய தோட்டத்தில் ஸன்னிதியும் தர்மசாலையு மாகவுள்ளது. ... .... .... ... ... ... *

— பேடீத்வாரகை —

கோமதீ த்வாரகையிலிருந்து ஓகாபோர்ட் ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து அரைமணிகாலம் படகில் பயணம் செய்து அடையக்கூடிய தலமிது. இங்கும் த்வாரகா நாதனுடைய ஸன்னிதி மிக விலக்ஷணமாக அமைந்திருக்கின்றது. இதுவும் புராதனமான தென்றே தெரியவருகிறது. ஸ்ரீக்ருஷ்ண பகவான் த்வாரகா புரியை ஏற்படுத்தினபோது பல விடங்களில் தனக்கு ஆஸ்தானம் அமைத்துக் கொண்டதாகவும், அதனாலேயே த்வாரகா பேதங்கள் ஏற்பட்டதாகவும் சொல்லு கிறார்கள். இது ஸம்பாவிதமாகவே தோன்றுகிறது. பேடீத்வாரகையிலிருந்து மறுபடியும் கோமதீ த்வாரகைக்கு வந்தே மேல்யாத்திரை நடைபெறவேண்டும். *

— போர் பந்தர்—ஸுதாமபுரி —

கோமதீ த்வாரகையிலிருந்து ராஜகோட் வழியாய் போர்பந்தர் சேர்வது. இதற்கு ஸுதாமபுரியென்று மறுபெயர் வழங்கும். குசேலருக்கு ஸுதாமா என்று பெயர். அவர் பிறந்ததும் வளர்ந்ததும் இவ்விடத்திலென்பர். இவ்விடத்தில் சிறிய ஆலயமுள்ளது. இது புராதனமன்று என்கிறார்கள். நகரம் மிகரமணீயமாய் மாடமாளிகை சூழ்ந்ததாய் வாஸத்திற்கு ஸ்ப்ருஹணீயமாய்க் காண்கிறது. மஹாத்மாகாந்தியின் ஜன்மபூமி இதுவே யென்கிறார்கள். ஐந்து லக்ஷம் ரூபாய் செலவில் காந்திஜீ மாளிகை யொன்று இவ்விடத்தில் இருபது முப்பது வருஷங் களுக்குள்ளாக வெகு விசித்ரமாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. அவரது தாய் தகப்பன்மாருடைய மிகப் பெரிய ப்ரதிக்ருதியும் இதில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. உயர்ந்த பல நூல்கள் சேமிக்கப் பட்டிருக்கின்றன. பரமபக்தரான ஒரு ஸேட்டின் நன்கொடையைக் கொண்டு இந்த அரிய பெரிய மாளிகை ஏற்படுத்தப்பட்டதாம். மிகவும் மனோஹரமாயிருக்கின்றவிது பரம பவித்ரமாயும் காணப்படுகிறது. பொது வாக ஸகல ஜனங்களுக்கும் ஆகர்ஷகமாய் விளங்குகின்றது. ஸ்டேஷன் வாசலி லேயே மிகப் பெரிய தர்மசாலையுமுளது ... ... ... *

— ப்ரபாஸ பட்டணம் —

குசேலபட்டணத்திலிருந்து ப்ரபாஸபட்டணம் வந்து சேர்வது. "மாதவத் தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்கிற பெரியாழ்வார் திருமொழியின்படியே பன்னிரண் டாண்டுகளுக்குமுன்பு இங்கு ஸ்நானம் செய்கையில் மாண்டுபோயிருந்த ஸாந்தீபநி புத்திரனை குருதக்ஷிணையாக மீட்டுக் கொடுத்தவிடம் இது என்பர்கள். ஏகாந்த மாகவும் புனிதமாகவுமுள்ள இத்தலம் தபஸ்விகளுக்கு வாஸ யோக்யமானது. இங்கே தீர்த்தகட்ட ஸமீபத்தில் இரண்டு ஸ்ரீவைஷ்ணவமந்திரங்களும் தர்மசாலை யும் வாஸ ஸௌகரியமளிப்பன, விராவல் என்கிற ஸ்டேஷனிலிறங்கி இரண்டு மூன்று மைல் தூரம் சென்று அடையவேண்டிய தலமிது. இவ்விடத்தில் கடற்

கரையில் ஸோமநாத மந்திரமென்னும் சிவாலயம் பிரபலமாகத் திருப்பணி செய்யப் பட்டுள்ளது. .... .... .... .... *

## — அஹமதாபாத் நகரம் —

ப்ரபாஸபட்டணத்திலிருந்து ராஜகோட் வீரங்காம் வழியாய் அஹமதாபாத் நகரம் வந்து சேர்வது. இங்கு க்ஷேத்ர தீர்த்த விசேஷமில்லையாயினும் மார்க்க க்ரமத்தில் தங்கவேண்டுமிடமாகும். இங்கு, சபர்மதி நதிக்கரையில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ராமாநுஜகூடமும் தருமசாலையும் விசேஷ ஸௌகரியமாகவுண்டு. இவ்வூரில் அவசியம் காணவேண்டிய காட்சியொன்றுண்டு; அதாவது கீதாமந்திரம், விலக்ஷண பகவதநுக்ரஹமும் பெற்ற வொரு பக்தசிகாமணியின் பெரு முயற்சியினால் பல லக்ஷரூபாய்ச் செலவில் வெகு விசாலமாயும் ஸர்வேந்த்ரியாகர்ஷகமாயும் லோகோத்தரமாயும் அமைக்கப்பட்ட மந்திரமிது. இங்கு உட்புகும் போதே ஞான பக்தி விரக்திச் செல்வங்கள் நம்மைவந்து அணைத்துக்கொள்வன போலும். இதில் மூன்று மாடிகளுள்ளன. பல விரக்தர்கள் பேரின்பமாக வாஸஞ்செய்து கொண்டிருக்கிறார்கள். கீழே கீதை முழுவதையும் பதினெட்டுப் பகுதியாகப் பரமஸுந்தர தேவநாகர திவ்யலிபியில் சிலாசாஸனமாகப் பொறித்திருக்குமழகு மிகச் சிறந்தது. இந்த மந்திரத்தை அமைத்த மஹாத்மா வித்யானந்தஜீ யென்பர். இப்போது வாழ்பவர் வேறொருவர். .... .... .... .... *

## — டாகோர் த்வாரகை —

அஹமதாபாதிலிருந்து ஆனந்த் ஜங்ஷன் வழியாய் டாகோர் என்னுமிடமடைவது. த்வாரகைகளில் இதுவும் ஒன்றாகப் பரிகணிதமாயுள்ளது. மிகப்பெரிய கோவிலில் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் அற்புதமான தரிசனம் மிகவும் பாராட்டத் தக்கதாகவுள்ளது. ஸ்டேஷனிலிருந்து ஒருமைல் தூரத்திலுள்ளது ஸந்நிதி. தீர்த்த ஸௌகரியமும் தர்மசாலை வஸதியும் வெகு ரமணீயமாகவுள்ளது. பரத மந்திரம் என்கிற மிகப்பெரிய ஸ்ரீவைஷ்ணவ மடம் இவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நல்ல புகலிடம். .... ... .... .... *

## — உஜ்ஜயினீ —

டாகோரிலிருந்து உஜ்ஜயினீ க்ஷேத்ரம் சேர்வது. "அயோத்யா மதுரா மாயா"* என்கிற ச்லோகத்தில் அவந்திகா என்னப்பட்ட க்ஷேத்ரம் இதுவே. கண்ண பிரான் பலராமனோடும் குசேலமுனிவரோடும் ஸாந்தீபநி முனிவரிடத்தில் அறுபத்து நான்கு நாட்களில் அறுபத்துநான்கு கலைகளைப் பயின்றதாகச் சொல்லுமிடம் இதுவே. இங்கு ஸாந்தீபநியாச்ரமம் முதலானவிடங்கள் காணத்தக்கவை. இங்கு க்ஷிப்ராநதி நிர்மல ப்ரவாஹமாகப் பெருகுகின்றது. அதன் கரையில் மிகப் பெரிய ராமாநுஜகூடம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடமானது. ... .... *

## — நாஸிக் பஞ்சவடி —

உஜ்ஜயினியிலிருந்து நாஸிக்ரோட் என்னும் ஸ்டேஷனிலிறங்கி 7 மைல் தூரத்தில் பஞ்சவடி வந்து சேர்வது. இங்கு கோதாவரியின் அழகும் அதன் கரையில்

பஞ்சவடீ தபோவனங்களின் ஸன்னிவேசங்களும் அநுபவிக்கத் தக்கவை. ஸ்ரீராம ஸீதா விஹாரஸ்தலங்கள், சூர்ப்பணகாபங்கஸ்தலம், மாரீசவதஸ்தலம் முதலானவை இங்குக் காணவேண்டியவை. நாளடைவில் இது பெரிய நகரமாக அபிவிருத்தியடைந்து வருகிறது. இங்கு வைதிகர்கள் புனிதமாகத் தங்குவதற்குரிய இடம் கோதவரிக்கரையில் ஸ்ரீ சங்கராசார்ய மடம். மற்றும் பல தர்மசாலைகளு முண்டு. ... ... ... ... ... *

## — பாம்பே மஹாநகரம் —

கல்கட்டா, அஹமதாபாத் முதலிய நகரங்கள் போல இந்நகரும் வழியடைவில் ப்ராப்தம். நகரின் சிறப்பைப்பற்றி இங்கு நாம் எழுதவேண்டியது ஒன்று மில்லை யன்றோ. மஹாயசஸ்வியாயும் ஜகத்குரு ப்ரக்க்யா விக்க்யாதராயும் விளங்கின ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் காதி, அனந்தாசார்ய ஸ்வாமியால் இங்குப் பனஸவாடியில் ஏற்படுத்தப்பட்டுள்ள திருவேங்கடமுடையான் ஸன்னிதி தென்னாட்டுக்கோவில் முறையில் விலக்ஷணமாக நடைபெற்று வருவதால் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இங்குத் தங்கி யிருக்க வசதியுண்டு. தர்மசாலைகளும் மிக வுண்டு. இவ்விடத்தில் நமது தென்னாட்டினர் உத்யோக முறையில் அபரிமிதமாக வந்து சேர்ந்திருக்கிறார்கள். ... ... ... ... ... ... *

## — பூனா நகரம் —

பாம்பேயிலிருந்து பூனாநகரில் மார்க்க ச்ரமத்தில் ஒருவேளை தங்கியிருக்கலாம். இங்கு ரவிவார பேட்டையில் ஸ்ரீ ராம மந்திரம், லக்ஷ்மீநாராயண மந்திரம் என்னு மிரண்டு ஆலயங்கள் ஸேட்டுகளால் ஏற்படுத்தப்பட்டவை மிக மனோஹரங்களாக விளங்குகின்றன. இக்கோவில்களில் வாஸ ஸௌகரியம் விசேஷமாக வுண்டு. ஸேட்டுகள் ஸ்ரீவைஷ்ணவர்களை மிகவுமாதரத்தோடு உபசரிப்பர்கள். *

## — பண்டரிபூர் —

பூனாவிலிருந்து குர்ட்வாடி ஜங்ஷன் வழியாகப் பண்டரிபூர் சேர்வது. பாண்டுரங்கக்ஷேத்ரமென்பதே பண்டரிபூர் என்றும் பண்டராபுரமென்றும் சிதைந்து வழங்குகின்றது. இங்கு விட்டலநாதனென்னும் எம்பெருமானுடைய ஸேவை மிகவு மினிது. ஸன்னிதியின் ஸன்னிவேசங்கள் மிகப்பெரியன. எம்பெருமானுடைய ஸௌசீல்யமோ அப்ரமேயமானது. பக்தர்கள் திருவடி வாரத்திலே தலையை மடுத்து ஸேவிக்கலாம்படியான ஸௌலப்யம். பக்தர்களின் பஜனைகளும் கீர்த்தனங்களும் இங்கு இடைவீடின்றி நடக்குமது பெரிய விசேஷம். இந்த க்ஷேத்ரத்தில் சந்திரபாகாநதி பெருகுகின்றது. அதன்கரையில் ராமபாக் என்னும் மிகப்பெரிய தோட்டத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விசாலமான வஸதி ஸௌகரிய முள்ளது. ... ... ... ... ... ... *

## — ஷோலாபூர் —

பாண்டுரங்க க்ஷேத்திரத்திலிருந்து ஷோலாப்பூர் நகரம் சேரலாம். மிகச் சிறந்த ஸ்ரீ வைஷ்ணவ பக்த மணிகள் வாழுமிடம் இது. பிரபல வியாபார ஸ்தலம். இங்கு லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதி நூறு வருஷங்களுக்கு மேலாக ஏற்பட்டு வெகு விலக்ஷணமான முறையில் நித்யநைமித்திக க்ரமங்கள் ஆச்சரியமாக நடை பெற்று வருகின்றன. இங்கு நாடோறும் காலை மாலை யிரவுகளில் நடைபெறும் விசேஷங்கள் தென்னாட்டினர்க்கும் அநுகரிக்கத் தக்கவை யென்று சொல்லலாம். உத்தராதி வைஷ்ணவர்களாயிருக்கச் செய்தேயும் திவ்ய ப்ரபந்தங்களில் இருநூறு பாசுரங்களுக்கு மேல் அதிகரித்துக் கண்டபாடமாக்கித் தமிழ்நாட்டு அத்யாபகர்க ளோடு வாசியற இயல் ஸேவிக்குமழகும், பஞ்ச ஸூக்தங்களும் உபநிஷத்தும் ஓதி வேத பாராயணம் செய்யுமழகும், பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களையெல்லாம் முகஸ்தமாக்கி ஸேவிக்கிற வைகரியும் நாஸ்திகர்களையும் ஆஸ்திகர்களாக்க வல்லவை.

இங்கிருந்து துங்கபத்ரா ஸ்டேஷனில் [தற்காலம் மந்த்ராலயம் ரோட் என்னுமிடத்தில்] இறங்கி துங்கபத்ரா ஸ்நானம் செய்துவிட்டு யாத்ராஸமாப்தி செய்யலாம். மந்த்ராலயம் ரோட் என்னும் ஸ்டேஷனில் இறங்கி ஏழெட்டு மைல் சென்றால் மந்த்ராலயமென்கிற ஊர் அடையலாம். இங்குப் பெரிய கோயில் உள்ளது. இது மாத்வர்களுடையதே யானாலும் ஸன்னிதியின் பரிபாலன க்ரமங்கள் விலக்ஷணமாக வுள்ளன. அவசியம் ஸேவிக்கத் தக்கதே. வாசலில் துங்கபத்ரை எப்போதும் பெருகுமழகு மிகநன்று. இங்கிருந்து ஆதோனி ஸ்டேஷன் சேர்ந்து மேலே சென்னை நோக்கிச் செல்லுவது.

வழியில் கடப்பா என்கிற ஸ்டேஷனில் இறங்கி ஆள்ளகட்ட வழியாய் அஹோபில க்ஷேத்ரம் ஸேவித்து, அப்படியே கிஷ்கிந்தை முதலான விடங்களும் தரிசித்து வரலாம்.

ரேணிகுண்டா ஸ்டேஷனில் இறங்கி திருமலை திருப்பதி திருச்சுகனூர் ஸேவித்து வடநாட்டு யாத்திரையை ஸமாப்தி செய்வது. ... ... *

**வடநாட்டுத் திருப்பதி யாத்திரை முற்றிற்று.**

## இனி, தென்னாட்டுத் திருப்பதி யாத்திரை

சென்னையிலிருந்து ஆரம்பித்து அடைவே தெரிவிப்போம்.

### முதலில் தொண்டை நாடு

1. **திருவல்லிக்கேணி.** ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமாள் ஸன்னிதியும் தெள்ளிய சிங்கப்பெருமாள் [நரஸிம்ஹஸ்வாமி] ஸன்னிதியும் ஸேவிக்கத் தக்கவை. பேயாழ்வார் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற தலம் இது. வானமாமலை மடம், அஹோபில மடம் முதலிய மடங்களும் தர்ம சாலைகளும் உள்ளன. மதராஸ் மாநகரத்தில் ஒரு பகுதியாகவுள்ள ஊர்—திருவல்லிக்கேணி யென்பது. ஸெண்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து தெற்கே இரண்டு மைல் தூரத்திலும், எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே இரண்டு மைல் தூரத்திலுமுள்ளது. *மன்னு தண்பொழிலும் வாவியும் மதிளும் மாடமாளிகையும் மண்டபமும்* என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்தபடி மிக அழகு பொலிந்த தலமிது.

* **சென்னைமாநகர் (Madras)** இஃது எங்கும் பிரசித்தி பெற்ற மாநகரம். இதில் டவுன் நடுவில் சென்னை கேசவப் பெருமாள் ஸன்னிதி, திருவேங்கமுடையான் ஸன்னிதி, ஸ்ரீ ரங்கநாதன் ஸன்னிதி, உடையவர் ஸன்னிதி முதலான ஸன்னிதிகள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆதரவளிப்பன.

இந்நகரின் ஒரு பகுதியாகிய மயிலாப்பூரில் கேசவப்பெருமாள் ஸன்னிதி, மாதவப்பெருமாள் ஸன்னிதி என்கிற ஸ்தலங்கள் பக்தர்களுக்கு அவசியம் ஸேவிக்கத்தக்கவை. பேயாழ்வாருடைய திருவவதாரம் ஷெ மயிலையில் என்று உணர்க.

### 2. திருநின்றவூர் 3. திருவெவ்வுளூர் 4. திருக்கடிகை

இத்தலங்கள், முறையே தின்னனூர், திருவுள்ளூர், சோளிங்கபுரம் என வழங்கப்பெறும். **திருநின்றவூரில்**—பத்தராவிப் பெருமாள் [பக்தவத்ஸலன்), என்னைப் பெற்ற தாயார் இவர்கள் மிக அற்புதமான ஸேவை தருமவர்கள். திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமிகளின் ஆளுகைக்கு உட்பட்ட தேவஸ்தானம் இது. திருமங்கையாழ்வார் இத்தலத்திற்கு எழுந்தருளினபோது பத்தராவி யெம்பெருமான் பிராட்டி பக்கலிலே, ஊன்றியிருந்து ஆழ்வார்க்கு ஸேவைதந்தருளாமற் போக, ஆழ்வாரும் எம்பெருமானை ஸேவிக்கவும் பாடவும் பெறாமல் மனக்குறையுடனே புறப்பட்டு அப்பால் எழுந்தருள, பிறகு இதனையுணர்ந்த பத்தராவிப் பெருமாள் அந்தோ! ஆழ்வாருடைய மங்களாசாஸனப் பாசுரத்தைப் பெறும் பாக்கியம் இல்லையாயிற்றே! என்று திருவுள்ளம் நொந்து, பிராட்டியாலும் தூண்டப்பட்டு ஆழ்வாரைத் தேடிப் பின் தொடர்ந்து செல்ல, அப்போது ஆழ்வார் திருவல்லிக்

கேணி கடந்து திருநீர்மலை கடந்து திருக்கடன்மல்லை யெம்பெருமானைக் கண்ணாரக் கண்டு களித்துப் பாடிக்கொண்டிருக்க, அவரெதிரே சென்று நின்று 'திருநின்றவூர்ப் பெருமானாகிய என்னையும் பாடவேணும்' என்று வேண்ட, "நின்றவூர் நித்திலத்தை ......கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே'; என்று இவ்வளவே பாடினாராழ்வார். அது பெற்று மீண்டு வந்த பத்தராவிப் பெருமாள் பின்னையும் பிராட்டியால் தூண்டப்பட்டு இன்னமும் பாசுரம் பெறவிரும்பி ஆழ்வாரைத் தேடித் தொடர்ந்து செல்ல, அப்போது ஆழ்வார் சோழநாட்டில் திருக்கண்ண மங்கையில் எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு களித்துப் பாடிக்கொண்டிருக்க, எதிரேசென்று நின்று 'ஆழ்வீர்! திருநின்றவூர்ப் பெருமானாகிய என்னை மீண்டும் பாடவேணும்' என்று வேண்ட, "குருமாமணிக் குன்றினை நின்றவூர்நின்ற நித்திலத் தொத்தினை.... கண்ண மங்கையுள் கண்டுகொண்டேனே' என்று பாடினார் ஆழ்வார். அது பெற்றுக் களித்து மீண்டான் திருநின்றவூர்ப் பெருமான்—என்பது பெரியார் கூறும் ஐதிஹ்யம்.

3. திருவெவ்வுளூரில்—ஸ்ரீ வீரராகவப் பெருமாள் கனகவல்லித் தாயார் இவர்களின் ஸேவை அற்புதமானது. வீக்ஷாரண்யமென்று புராண ப்ரசஸ்தமான க்ஷேத்திரமிது. இங்கே சயனத் திருக்கோலம். திருமழிசையாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பாடின தலமிது. ஸ்ரீ அஹோபிலம் ஜீயர் ஸ்வாமியின் ஆதீனமானது. இவ்விடத்தில் கல்கத்தா ஸேட் ஒருவர் சில வருஷங்களுக்கு முன்பு விசேஷத் திருப்பணிகள் செய்திருப்பது குறிப்பிடத் தக்கது.

கீழ்ச் சொன்ன தின்னனூர் ஸ்டேஷனுக்கு ஸமீபத்திலுள்ள திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து 2 மைல் தூரத்திலுள்ளது ஸன்னிதி. ஸன்னிதியின் வாசலில் ஹ்ருத்தாப நாசனி யென்ற மிகப்பெரிய புஷ்கரிணி சிறந்த புண்ணிய தீர்த்தமாயுளது. காண்பதற்கழகானவூர். ஸகல வசதிகளுமுண்டு.

4. திருக்கடிகையில் எம்பெருமானுடைய திருநாமம் தக்கான் என்பது. இங்கு ஒரு நாழிகை வாஸம் பண்ணினாலும் முக்தி கிடைக்குமென்பது பற்றி இத்தலத்திற்குக் கடிகாசலம் என்று புராணத் திருநாமம். (கடிகா—நாழிகை). பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் கடிகை யென்றே மங்களாசாஸனம் செய்துள்ளார்கள். "தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக்கனியை யடைந்துய்ந்து போனேனே" என்ற திருமங்கையாழ்வாருடைய பாசுரத்தின்படி, தக்கான் அக்காரக்கனி என்ற இரண்டு திருநாமங்களாலும் எம்பெருமானுக்கு ப்ரஸித்தியுண்டு. இவ்விடத்தில் சிறியமலை, பெரியமலை என இரண்டு திருமலைகள் உண்டு. இவ்விடத்தில் வரப்ரஸாதம் மிக்க பெரும்புகழ் பெற்றது. சிறிய திருவடியின் பிரபாவம் இங்கு அதிசயித்துளது. தக்கான்குளம் என்கிற தாமரைத் தடாகம் லோகோத்தரமானது. இங்கு சோளசிங்கன் என்கிற அரசன் விசேஷத் திருப்பணிகள் செய்ததனால் சோளசிங்கபுரம் என்று பிரஸித்தி பெற்றதென்பர். "அரக்கோணம்—பெங்களூர்" இருப்புப் பாதையில் ஷோலிங்கர் என்கிற ஸ்டேஷனிலிருந்து 9 மைல் தூரத்திலுள்ளது. அரக்கோணத்திலிருந்தே பஸ் வழியாகச் செல்வதெளிது.

இத்தலத்தில் ஆசார்ய புருஷர்களின் திருமாளிகைகள் விசேஷமாகவுள்ளன. சத தூஷணீ வ்யாக்கியான சண்டமாருத கர்த்தாவான ஸ்ரீ தொட்டயாசார்யஸ்வாமி யெழுந்தருளியிருந்த திவ்ய தேசம் இதுவே. எறும்பியப்பா கோயில் கொண்டிருப்பது மிங்கு. எறும்பியென்கிற அக்ரஹாரம் இத்தலத்திற்குச் சமீபத்திலுள்ளது.

இனி தென்னிந்திய இருப்புப்பாதையில் உள்ள திவ்ய தேசங்களின் விவரணம் காட்டுவோம். [இருப்புப்பாதையின் பெயர்கள் இப்போது மாறிவிட்டன.] *

## 5. திருநீர்மலை

இத்தலத்தில் ஸ்ரீ ரங்கநாதன் முதலிய பல எம்பெருமான்கள் ஸேவை ஸாதித்தாலும், 'நீர்வண்ணன்' என்கிற எம்பெருமானே தலைமை பெற்றவர். இத்தலத்தை மங்களாசாஸனம் செய்தருளிய திருமங்கையாழ்வார் "இரும்பொழில் சூழ் நன்றுய புனல் நறையூர் திருவாலி குடந்தை தடந்திகழ் கோவல்நகர், நின்றுனிருந்தான் கிடந்தான் நடந்தாற்கிடம் மாமலையாவது நீர்மலையே" என்றருளிச் செய்திருப்பதைப் பற்றிக்கொண்டு, நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தான் என்கிற எம்பெருமான்களெல்லாரும் இங்கே ஸேவை ஸாதிக்க வேணுமென்று ஆவல்கொண்ட பக்தர்கள் பிற்காலத்தில் சில எம்பெருமான்களை இங்கு எழுந்தருளப் பண்ணினதாகப் பெரியார் கூறுவர். ஆழ்வாருடைய மங்களாசாஸனத்திற்கு முன்னமே யெழுந்தருளியிருந்தவர்கள் எனினும் குறையில்லை. "எழும்பூர்—செங்கற்பட்டு" இருப்புப்பாதையில் பல்லாவரம் ஸ்டேஷனிலிருந்து மூன்றுவது மைலிலுள்ளது இத்தலம். .... .... ... .... *

## 6. திருவிடவெந்தை

(திருவிடந்தை.) இங்கு நித்யகல்யாணப் பெருமாள் கோமளவல்லித்தாயார் அழகிய காட்சி தருவார்கள். ஏகாந்தமான திவ்யதேசம். திருமங்கையாழ்வாரால் சிறந்த பதிகமொன்று பாடப்பெற்ற தலம். வண்டலூர் ஸ்டேஷனில் இருந்து பஸ் மார்க்கமாகச் செல்லலாம். திருக்கடன் மல்லையிலிருந்து படகு மார்க்கமாய்ச் செல்வதெளிது. ... ... .... ... *



## 7. திருக்கடன்மல்லை

இது மஹாபலிபுரமென்று ஸாமான்யர்களால் வழங்கப்பெறும். மாமல்லபுரமென்பர். தலசயனத்துறைவார் [ஸ்தலசாயிப்பெருமாள்] சயனத்திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கும் தலம். இங்கு அருமையான சிற்பவேலைகள் கண்ணைக் கவருமவை. இவற்றைக்காண மேல்நாட்டாரும் பலர் வந்து போவர். மகாமல்லன் என்கிற அரசன் இங்குத் திருப்பணிகள் செய்ததனால் மாமல்லபுரம் என வழங்கப்பட்டிருந்து நாளடைவில் மகாபலிபுரம் என்று சிதைந்து வழங்குவதாகக் கூறுவர். பூதத்தாழ்வாருடைய திருவவதார ஸ்தலம் இது. அவ்வாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. இது கடற்கரையிலுள்ள தலமாதலால் அர்த்தோதயம் மஹோதயம் முதலான விசேஷ காலங்களில் திருவணையிற்போல்

இங்கும் பெருந்திரள்கூடும். செங்கற்பட்டு ஸ்டேஷனிலிருந்து கழுக்குன்றம் வழியாய் இருபதாவது மைலில் அடையக்கூடிய தலம். பஸ் உண்டு. ... *

## 8—22. காஞ்சீபுரம்

தொண்டை நாட்டுத் திருப்பதிகள் மொத்தம் 22 என்று கீழே தெரிவித்தோம். இதுவரை விவரித்த 7 திருப்பதிகள் போக மற்ற 15 திருப்பதிகள் காஞ்சீபுரத்திலுள்ளவை. அந்த 15-ல் ஒன்றான திருப்புட்குழி காஞ்சீபுரத்தில் சேர்ந்ததன்றாகிலும் காஞ்சீபுரத்திற்கு அருகிலுள்ளதே. காஞ்சியில் 18 திவ்ய தேசங்களுள்ளனவாக ஒரு ப்ரஸித்தியுண்டு. புராண க்ஷேத்திரங்கள் சிலவற்றையும் சேர்த்துக் கொண்டு 18 என்கிறார்கள். ஆழ்வார்களின் பாடல் பெற்ற திவ்ய தேசங்கள் பதினான்கே காஞ்சியிலுள்ளன. .... ... ... ... *

அத்திகிரி. இதுவே தேவப்பெருமாள் ஸன்னிதியென்றும் வரதராஜப்பெருமாள் ஸன்னிதியென்றும் வழங்குவது. 'கோயில் திருமலை பெருமாள் கோயில்' என்று சிறப்பித்துக்கூறும் திவ்ய தேசங்கள் மூன்றனுள் இஃது ஒன்று. ஹஸ்திகிரியென்ற சொல்லுக்குத் தக்கபடி இங்கு மலையொன்றும் காணவிடினும் இருபத்து நான்கு படிகளேறி ஸேவிக்கவேண்டிய உயர்ந்த நிலத்தில் பெருமாள் எழுந்தருளியுள்ளார். சிறிய குன்று வடிவமாகவே அந்த ஸ்தானமுள்ளது. கீழே அழகிய சிங்கரும் மேலே தேவப்பெருமாளும் ஸேவை ஸாதிப்பர். *உலகேத்துமாழியான் அத்தியூரான்* என்றும் *அத்தியூரான் புள்ளையூர்வான்* என்றும் பூதத்தாழ்வாரும், *வரந்தருமாமணி வண்ணனிடம் மணிமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி* என்று திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம் செய்துள்ளார்கள். நம்மாழ்வார் திருவிருத்தத்தின் தொடக்கத்தில் *இமையோர் தலைவா!* என்றும், திருவாய்மொழியின் தொடக்கத்தில் *அயர்வறுமமரர்களதிபதி* என்றும் குறித்தது தேவப்பெருமாளையே யென்பது ஸம்ப்ரதாயம். நான்முகக் கடவுள் அச்வமேதயாகஞ்செய்து ஸாக்ஷாத்கரித்த தலம் இது.

(2) திருவெஃகா. [யதோக்தகாரி ஸன்னிதி] தேவப்பெருமாள் ஸன்னிதிக்கு ஒரு மைல் தூரத்திலுள்ளது இந்த ஸன்னிதி. நான்முகன் செய்த யாகத்திற்குக் காரண விசேஷத்தினால் இடையூறு செய்ய வந்து வேகவதி நதியாகப் பெருகின ஸரஸ்வதியின் செருக்கடங்க எம்பெருமான் அணையாகப் பள்ளிகொண்ட தலம் இது. இந்த ஸன்னிதியின் பக்கத்திலுள்ள தாமரைத்தடாகத்தில் பொய்கையாழ்வார் * வனசமலர்க் கருவதனில் வந்துதித்தார். திருமழிசையாழ்வார் இத்தலத்தில் வெகுநாள் எழுந்தருளியிருந்து இப்பெருமானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யங்களை உலகமறியச்செய்த இதிஹாஸம் அறியத்தக்கது. அது காரணமாகவே இப்பெருமானுக்கு வடமொழியில் 'யதோக்தகாரீ' என்றும், தென்மொழியில் 'சொன்ன வண்ணஞ் செய்த பெருமாள்' என்றும் திருநாமம் ப்ரஸித்தமாயிற்று. பொய்கையாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய ஐவர் மங்களாசாஸனம் செய்த தலமிது.

(3) அட்டபுயகரம். [அஷ்டபுஜ ந்தெம்பெருமான் ஸன்னிதி.] மேற்சொன்ன ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதியின் அருகிலேயேயுள்ள தலமிது. * செம்பொனிலங்கு வலங்கை வாளி திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள், உம்பரிரு சுடராழியோடு கேடக மொண்மலர் பற்றி* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே எட்டுத் திருவாயுதங்களைக்கொண்ட எட்டு புஜங்களையுடைய எம்பெருமானுடைய ஸேவை அற்புதமானது. *தொட்ட படை யெட்டுந் தோலாத வென்றியான் அட்டபுயகரத்தான்* என்று பேயாழ்வாரும், ஒரு பதிகத்திலை திருமங்கையாழ்வாரும் மங்களா சாஸனம் செய்தருளின தலம்.

(4) வேளுக்கை. [ஆளழகிய சிங்கர் ஸன்னிதி.] மேற்சொன்ன ஸன்னிதி களின் ஸமீபத்திலேயேயுள்ளது இது. இந்த திவ்ய தேசம் வெள்ளத்தில் முழுகிப் போனதாகச் சிலர் எழுதி வைத்திருப்பது நம்பத்தகுந்த தன்று. நன்றாக ஸேவை ஸாதிக்குமிடமேயிது. ஸ்ரீவேதாந்தவாசிரியர் பணித்த காமாஸிகாஷ்டகம் என்ற ஸ்தோத்ரம் இத்தலத்து விஷயமானதே. 'வேள் இருக்கை' என்பது வேளுக்கை யென மருவியுள்ளது. ஆசையோடு எழுந்தருளியிருக்குமிடம் என்று பொருள். காமாஸிகா என்றதன் பொருளுமிதுவே. * காமாத் அதிவஸந் ஜீயாத் கச்சித் அத்புத கேஸரீ * என்றதுமிப்பொருளை வற்புறுத்தும். பேயாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளின தலமிது. இங்கு இப்போது விசேஷத் திருப்பணிகள் நடைபெறுகின்றன.

(5) திருத்தண்கா. [தீபப்ரகாசன் ஸன்னிதி, விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதி.] வேளுக்கையின் அருகிலேயேயுள்ளது இது. இத்தலத்தெம்பெருமான் பிராசீனகாலத்தில் சயனத் திருக்கோலமாய் ஸேவை ஸாதித்ததாகச் சில சான்று களால் தெரியவந்தாலும் இப்போது நின்ற திருக்கோலமே. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். திருவிருத்தத்தில் *நானிலம் வாய்க்கொண்டு* என்ற பாசுரத் தில் "விண்ணோர் தொழுங்கண்ணன் வெஃகாவுது அம்பூந்தேனிளஞ் சோலைப் பாலது" என்றுள்ளதைக்கொண்டு நம்மாழ்வாருடைய மங்களாசாஸனமும் இத் தலத்திற்குண்டென்பர் ஒரு சாரார். (தண்கா என்பதும் தேனிளஞ் சோலையென்பதும் பர்யாயம்.) இந்த ஸன்னிதியுள்ள விடத்திற்குத் தூப்பில் அக்ரகாரம் என்கிற பெயர் மிகநவீனம். ஸ்ரீமத்வேதாந்தமஹாகுருவினுடைய திருவவதார ஸ்தலமிதுவே.

சின்ன காஞ்சீபுரமென்றும் பெரிய காஞ்சீபுரமென்றும் இரண்டு பாகுபாடுகளை யுடைய காஞ்சீபுரத்தில், கீழ் விவரித்த ஐந்து ஸன்னிதிகளும் சின்னகாஞ்சீபுரத் தைச் சார்ந்தவை, இனிமேல் விவரிக்கும் ஒன்பது ஸன்னிதிகள் பெரிய காஞ்சீ புரத்தைச் சார்ந்தவை.

(6) ஊரகம். [உலகளந்த பெருமாள் ஸன்னிதி.] இங்கு த்ரிவிக்ரமனு டைய ஸேவை மிக அற்புதமானது. இவ்வளவு திருவளர்த்தியான திருமேனி மற்றெந்த திவ்யதேசத்திலுமில்லை. இப்பெருமான் இங்கு உரக ரூபியாகவும் ஸேவை ஸாதிப்பதனால் இத்தலத்திற்கு ஊரகமென்று திருநாமமாயிற்று. [உரகம்-ஸர்ப்பம்.] இவர் மிக வரப்ரஸாதி. "ஊரகத்தான் திருமஞ்சன ப்ரார்த்தனை" என்பது உலகப்ரஸித்தம். இந்த ஸன்னிதியிலேயே பிரதக்ஷிணத்தில், (7) நீரகம், (8) கார

கம், (9) கார்வானம் என்ற கோயில்களுமுள்ளன. இவை திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை. (10) பரமேச்சுர விண்ணகரமென்கிற வைகுண்டபெருமாள் ஸன்னிதி, (12) பவளவண்ணர் ஸன்னிதி, (12) பாடகம் என்கிற பாண்டவதூதர் ஸன்னிதி, (13) ஏகாம்பரநாதர் கோவிலென்கிற சிவாலயத்திற்குள் நிலாத்திங்கள் துண்டப்பெருமாளும், (14) காமாக்ஷியம்மன் கோவிலுக்குள் கள்வர் என்கிற பெருமாளும் எழுந்தருளியுள்ளார்கள். ஆக 14 திவ்ய தேசங்களே ஆழ்வார் பாடல் பெற்றவை காஞ்சீபுரியில் உள்ளன.

## 15. திருப்புட்குழி

காஞ்சீபுரிக்கு 8-வது மைலில் திருப்புட்குழி யென்கிற மிகச்சிறந்த திவ்ய தேசமுளது. அது விஜயராகவப் பெருமாள் ஸன்னிதி. (பஸ் மார்க்க முண்டு.)

இவற்றுக்கு மங்களாசாஸன விவரணம் :

தேவப்பெருமாள் [திருவத்தியூரான் — வரந்தரும் மாமணி வண்ணன்] பூதத்தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும்.

திருவெஃகா—பொய்கையாழ்வார், பேயார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார்

அட்டபுயகரமும் வேளுக்கையும்—பேயாழ்வார், திருமங்கையாழ்வார்.

திருத்தண்கா, நிலாத்திங்கள் துண்டம், கள்வன், பவளவண்ணன், ஊரகம், நீரகம், காரகம், கார்வானம் பரமேச்சுர விண்ணகரம் திருப்புட்குழி—இவை திருமங்கையாழ்வாரொருவரே.

பாடகம்—பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார்.

அட்டபுயம், பரமேச்சுரவிண்ணகரம் இரண்டு திருப்பதிகள் மாத்திரம் பதிகம் பாடல் பெற்றவை. இவையெல்லாம் காஞ்சீபுரம் ஸ்டேஷனிலிருந்து சென்று ஸேவிக்கத்தக்கவை. பொய்கையாழ்வாரும் வேதாந்த வாசிரியரும் இவ்வூரில் திருவவதரித்தவர்கள்.

கூரத்தாழ்வானுடைய அவதாரஸ்தலமான கூரம் காஞ்சீபுரத்திற்கு 8 மைல் தூரத்திலுள்ளது. (வண்டி மார்க்கம்.)

எம்பாருடைய அவதாரஸ்தலமான மதுரமங்கலம் காஞ்சீபுரத்திற்கும் ஸ்ரீபெரும்பூதூருக்கும் இடையில் விலகியுள்ளது. (வண்டி மார்க்கமும் பஸ் மார்க்கமும்.)

ஸ்ரீராமானுஜரென்கிற எம்பெருமானாருடைய திருவவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூர் சென்னைக்கும் காஞ்சிக்கும் நன்னடுவிலுள்ளது. (பஸ் மார்க்கம்.) திருக்கச்சிநம்பிகளின் திருவவதாரஸ்தலமான பூவிருந்தமல்லி (பூனமல்லி)யும், திருமழிசையாழ்வாருடைய திருவவதாரஸ்தலமான திருமழிசையும், முதலியாண்டான் திருவவதாரஸ்தலமான பச்சைபெருமாள்கோயிலும் ஸ்ரீபெரும்பூதூருக்கும் சென்னைக்கும் இடையிலுள்ளன. பஸ் மார்க்கம்.

**மதுராந்தகம்.** ஏரிகாத்தராமன் ஸன்னிதி. பெரிய நம்பிகள் உடையவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் ப்ரஸாதித்தருளிய புண்யக்ஷேத்ரம். (ஆழ்வார் பாடல் இல்லையாயினும் ஆசாரியர்கள் உகந்தவிடம். செங்கற்பட்டு—வில்லுபுரம் இடையில் மதுராந்தகம் ஸ்டேஷனுள்ளது)



ஆக இவ்வளவும் தொண்டைநாட்டு ஸ்தலங்கள். .... .... *

## நடுநாட்டுத் திருப்பதிகள் 2

### 23. திருக்கோவலூர்

பொய்கையார் பூதத்தார் பேயார் என்கிற முதலாழ்வார்கள் மூவரும் ஒன்று சேர்ந்து உய்ந்த அற்புதமான மிகப் பெரிய திவ்யதேசம். பொய்கையார் பூதத்தார் திருமங்கையாழ்வார்களுடைய மங்களாசாஸனம். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (வில்லுபுரம்—காட்பாடி இடையிலுள்ள திருக்கோயிலூர் ஸ்டேஷன்.)

### 24. திருவயிந்திரபுரம்

எம்பெருமான்—அடியவர்க்கு மெய்யன், தாஸஸத்யன். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (வில்லுபுரம்—தஞ்சாவூர்ப்பாதையில் திருப்பாப்புலியூர் (Cuddalore N.T. ஸ்டேஷன்) .... .... .... .... *

## சோழநாட்டுத், திருப்பதிகள் 40

### 25. தில்லைத்திருச் சித்திரகூடம்

சிதம்பரத்தில் நடராஜன் ஆலயத்தினுள் ஸேவை ஸாதிக்கும் கோவிந்தராஜன் ஸன்னிதி குலசேகராழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் இரண்டு பதிகமும் பாடியுள்ளார். (சிதம்பரம் ஸ்டேஷன்)

இங்கிருந்து ஸ்ரீமுஷ்ணமும் காட்டுமன்னார் ஸன்னிதியும் சென்று ஸேவிக்கத் தகுந்தவை. **ஸ்ரீமுஷ்ணம்**—பூவராஹப் பெருமாள் ஸன்னிதி. (ஆழ்வார் பாடலில்லையெனினும் மிகச்சிறந்த புராணஸ்தலம் (பஸ் மார்க்கம். விருத்தாசலம் ஸ்டேஷனிலிருந்து வண்டி மார்க்கமுமுண்டு) காட்டுமன்னார் ஸன்னிதி—ஸ்ரீமந்நாத முனிகளும் ஆளவந்தாரும் திருவவதரித்தஸ்தலம். மன்னார் என்கிற எம்பெருமானது ஸன்னிதானமும் சிறப்புற்றது.



### 26. காழிச் சீராமவிண்ணகரம்

[சீர்காழி—தாடாளன் ஸன்னிதி] இங்கு உலகளந்த பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். [சீயாழி ஸ்டேஷன்] ... .... *

### 27. திருவாலி திருநகரி

வயலாலி மணவாளன் ஸன்னிதி—திருநகரிக்கு அருகில் திருவாலியென்று தனியே ஒரு திவ்யதேசமுண்டு. குலசேகராழ்வாரும் திருமங்கையாழ்வாரும்

மங்களாசாஸனம். திருமங்கையாழ்வார் மூன்று பதிகம் பாடியுள்ளார். அவ்வாழ்வாரின் திருவவதார ஸ்தலமுமிங்கே. (சீயாழி ஸ்டேஷன் வழி) வண்டி மார்க்கமே.

## 28—38. திருநாங்கூர்த் திருப்பதிகள்—பதினொன்று

1. மணிமாடக்கோயில், 2. வைகுந்தவிண்ணகரம், 3. அரிமேயவிண்ணகரம், 4. திருத்தேவனார் தொகை (கீழைச்சாலை—மாதவப்பெருமாள் கோவில்), 5. வண்புருடோத்தமம், 6. செம்பொன்செய்கோயில், 7. திருத்தெற்றியம்பலம், 8. திருமணிக்கூடம், 9. காவளம்பாடி, 10. திருவெள்ளக்குளம், 11. பார்த்தன் பள்ளி. இவை பதினொன்றும் திருநாங்கூரைச்சுற்றி அருகிலும் தூரத்திலுமுள்ளவை; திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை. ஒவ்வொரு திருப்பதிக்கும் ஒவ்வொரு பதிகம் பாடல். சீயாழி ஸ்டேஷனிலிருந்தே போக வேணும்; வண்டி மார்க்கம்.) .... .... .... .... *

## 39. தலைச்சங்க நாண்மதியம்

(தலைச்சங்காடு) பூதத்தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். வயற்காட்டிலுள்ள ஏகாந்தமான சிறுகோயில். (மாயவரம் தரங்கம் பாடி லயனில் ஆக்கூர் ஸ்டேஷனிலிருந்து 2 மைல்). .... .... .... .... *

## 40. திருவிந்தளூர்

பரிமளரங்கன் ஸன்னிதி. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்—ஒரு பதிகம். (மாயவரம் ஸ்டேஷன்.) திருவிழந்தூர் என்பது தவறான வழக்கு. .... *

## 41. சிறுபுலியூர்

சலசயனப்பெருமாள். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்—ஒரு பதிகம். (மாய்வரம், பேரளம், கொல்லுமாங்குடி, மங்கநல்லூர் இந்த 4 ஸ்டேஷன்களிலிருந்தும் போகலாம்.) .... .... .... .... .... *

## 42. திருநாகை

[நாகபட்டணம்] ஸௌந்தர்யராஜப்பெருமாள் ஸேவை மிக அற்புதம். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நாகபட்டணம் ஸ்டேஷன்.) .... *

## 43. திருக்கண்ணங்குடி

சாமமாமேனிப்பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (திருவாரூர் ஜங்ஷனிலிருந்து கீவளூர் ஸ்டேஷனில் இறங்கி இரண்டு மைல் செல்ல வேணும்.) .... .... .... .... .... *

## 44. திருக்கண்ணமங்கை

பத்தராவி (பக்தவத்ஸல)ப்பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து 4 மைல்.) .... .... *

மங்களாசாஸனம். திருமங்கையாழ்வார் மூன்று பதிகம் பாடியுள்ளார். அவ்வாழ்வாரின் திருவவதார ஸ்தலமுமிங்கே. (சீயாழி ஸ்டேஷன் வழி) வண்டி மார்க்கமே.

## 28—38. திருநாங்கூர்த் திருப்பதிகள்—பதினொன்று

1. மணிமாடக்கோயில், 2. வைகுந்தவிண்ணகரம், 3. அரிமேயவிண்ணகரம், 4. திருத்தேவனார் தொகை (கீழைச்சாலை—மாதவப்பெருமாள் கோவில்), 5. வண்புருடோத்தமம், 6. செம்பொன்செய்கோயில், 7. திருத்தெற்றியம்பலம், 8. திருமணிக்கூடம், 9. காவளம்பாடி, 10. திருவெள்ளக்குளம், 11. பார்த்தன் பள்ளி. இவை பதினொன்றும் திருநாங்கூரைச்சுற்றி அருகிலும் தூரத்திலுமுள்ளவை; திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை. ஒவ்வொரு திருப்பதிக்கும் ஒவ்வொரு பதிகம் பாடல். சீயாழி ஸ்டேஷனிலிருந்தே போக வேணும்; வண்டி மார்க்கம்.) .... .... .... .... *

## 39. தலைச்சங்க நாண்மதியம்

(தலைச்சங்காடு) பூதத்தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். வயற்காட்டிலுள்ள ஏகாந்தமான சிறுகோயில். (மாயவரம் தரங்கம் பாடி லயனில் ஆக்கூர் ஸ்டேஷனிலிருந்து 2 மைல்). .... .... .... .... *

## 40. திருவிந்தளூர்

பரிமளரங்கன் ஸன்னிதி. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்—ஒரு பதிகம். (மாயவரம் ஸ்டேஷன்.) திருவிழந்தூர் என்பது தவருன வழக்கு. .... *

## 41. சிறுபுலியூர்

சலசயனப்பெருமாள். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்—ஒரு பதிகம். (மாயவரம், பேரளம், கொல்லுமாங்குடி, மங்கநல்லூர் இந்த 4 ஸ்டேஷன்களிலிருந்தும் போகலாம்.) .... .... .... ... .... *

## 42. திருநாகை

[நாகபட்டணம்] ஸௌந்தர்யராஜப்பெருமாள் ஸேவை மிக அற்புதம். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நாகபட்டணம் ஸடேஷன்.) .... *

## 43. திருக்கண்ணங்குடி

சாமமாமேனிப்பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (திருவாரூர் ஜங்ஷனிலிருந்து கீவளூர் ஸ்டேஷனில் இறங்கி இரண்டு மைல் செல்ல வேணும்.) .... .... .... .... .... *

## 44. திருக்கண்ணமங்கை

பத்தராவி (பக்தவத்ஸல)ப்பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து 4 மைல்.) .... .... *

## 45. திருக்கண்ணபுரம்

சௌரிராஜப்பெருமாள் — நம்மாழ்வார் குலசேகராழ்வார், பெரியாழ்வார் ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய ஐவருடைய மங்களா சாஸனம். நம்மாழ்வாரும் குலசேகராழ்வாரும் ஒவ்வொரு பதிகம்; பெரியாழ்வாரும்ஆண்டாளும் துண்டுப் பாசுரம். திருமங்கை யாழ்வார் 100 பாசுரம். (பெரிய திருமொழியில் எட்டாம் பத்து பூர்த்தியாக) நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து 4 மைல்.

*மண்டங்குடி* தொண்டரடிப்பொடி யாழ்வாருடைய திருவவதார ஸ்தலம். இந்த ப்ராந்தத்தில் உள்ளது. ... .... ... .... *

## 46. தேரழுந்தூர்

ஆமருவியப்பன். திருமங்கையாழ்வார் நான்கு பதிகம் பாடியுள்ளார். (பாசுரங்களில் அழுந்தூர் என்று மாத்திரமுள்ளது) மாயவரம் ஜங்ஷனுக்கடுத்த குத்தாலம் ஸ்டேஷனிலிருந்து 3 மைல்) தேரழுந்தூரென்கிற புது ஸ்டேஷனுமுண்டு.

## 47. திருவெள்ளியங்குடி

கோலவில்லிராமன். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (மாயவரம்—கும்பகோணம் இடையில் திருவிடை மருதூர் ஸ்டேஷனிலிருந்து 6 மைல்; அல்லது கும்பகோணத்திலிருந்தும் செல்லலாம்.) .... ... *

## 48. திருவிண்ணகர்

இதுவே உப்பிலியப்பன் ஸன்னிதியென்பது. நம்மாழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் மூன்று பதிகமும் பாடியுள்ளார். (திருநாகேச்வரம் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல்; அல்லது கும்பகோணத்திலிருந்து 4 மைல் சென்று ஸேவிக்கலாம்.) ஒப்பிலியப்பன் என்பது ஸம்பிரதாயத் திருநாமம். .... *

## 49. திருக்குடந்தை

ஆராவமுதன். இதுவே கும்பகோண க்ஷேத்ரமென்பது. சார்ங்கபாணிப் பெருமாள் ஸன்னிதியும் சக்ரபாணிப்பெருமாள் ஸன்னிதியுமுள்ளன.—பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் இவர்களுடைய மங்களாசாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் ஒரு பதிகம் பாடியுள்ளார். (கும்பகோணம் ஸ்டேஷன்.) .... .... *

## 50. நந்திபுரவிண்ணகரம்

இது நாதன் கோயில் என்றே ப்ரஸித்தமாக வழங்கும். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (கும்பகோணத்திலிருந்து தெற்கே 3 மைல் உள்ளது.)

## 51. திருநறையூர்

இது நாச்சியார் கோயிலென்றே பிரஸித்தமாக வழங்கும். திருமங்கையாழ்வார் நூறு பாசுரம் பாடி யுள்ளார். (கும்பகோணத்திலிருந்து 6 மைல். பஸ் மார்க்கம்.)

## 45. திருக்கண்ணபுரம்

சௌரிராஜப்பெருமாள் — நம்மாழ்வார் குலசேகராழ்வார், பெரியாழ்வார் ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகிய ஐவருடைய மங்களா சாஸனம். நம்மாழ்வாரும் குலசேகராழ்வாரும் ஒவ்வொரு பதிகம்; பெரியாழ்வாரும்ஆண்டாளும் துண்டுப் பாசுரம். திருமங்கை யாழ்வார் 100 பாசுரம். (பெரிய திருமொழியில் எட்டாம் பத்து பூர்த்தியாக) நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து 4 மைல்.

*மண்டங்குடி* தொண்டரடிப்பொடி யாழ்வாருடைய திருவவதார ஸ்தலம். இந்த ப்ராந்தத்தில் உள்ளது. ... .... ... .... *

## 46. தேரழுந்தூர்

ஆமருவியப்பன். திருமங்கையாழ்வார் நான்கு பதிகம் பாடியுள்ளார். (பாசுரங்களில் அழுந்தூர் என்று மாத்திரமுள்ளது) மாயவரம் ஜங்ஷனுக்கடுத்த குத்தாலம் ஸ்டேஷனிலிருந்து 3 மைல்) தேரழுந்தூரென்கிற புது ஸ்டேஷனுமுண்டு.

## 47. திருவெள்ளியங்குடி

கோலவில்லிராமன். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (மாயவ்ரம்—கும்பகோணம் இடையில் திருவிடை மருதூர் ஸ்டேஷனிலிருந்து 6 மைல்; அல்லது கும்பகோணத்திலிருந்தும் செல்லலாம்.) .... ... *

## 48. திருவிண்ணகர்

இதுவே உப்பிலியப்பன் ஸன்னிதியென்பது. நம்மாழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் மூன்று பதிகமும் பாடியுள்ளார். (திருநாகேச்வரம் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல்; அல்லது கும்பகோணத்திலிருந்து 4 மைல் சென்று ஸேவிக்கலாம்.) ஒப்பிலியப்பன் என்பது ஸம்பிரதாயத் திருநாமம். ....

## 49. திருக்குடந்தை

ஆராவமுதன். இதுவே கும்பகோண க்ஷேத்ரமென்பது. சார்ங்கபாணிப் பெருமாள் ஸன்னிதியும் சக்ரபாணிப்பெருமாள் ஸன்னிதியுமுள்ளன.—பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் இவர்களுடைய மங்களாசாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் ஒரு பதிகம் பாடியுள்ளார். (கும்பகோணம் ஸ்டேஷன்.) .... .... *

## 50. நந்திபுரவிண்ணகரம்

இது நாதன் கோயில் என்றே ப்ரஸித்தமாக வழங்கும். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (கும்பகோணத்திலிருந்து தெற்கே 3 மைல் உள்ளது.)

## 51. திருநறையூர்

இது நாச்சியார் கோயிலென்றே பிரஸித்தமாக வழங்கும். திருமங்கையாழ்வார் நூறு பாசுரம் பாடி யுள்ளார். (கும்பகோணத்திலிருந்து 6 மைல். பஸ் மார்க்கம்.)

## 52. திருச்சேறை

ஸாரநாதப் பெருமாள். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நெ. 51 திருநறையூரிலிருந்து 3 மைல் பஸ் மார்க்கம்.)

* ராஜமன்னார் ஸன்னிதி.* மன்னார்குடி யென்று வழங்கும். மிகப் பெரிய ஸன்னிதி. மணவாள மாமுனிகளால் திவ்ய தேசமாக்கப் பெற்றது. (மன்னார்குடி யென்றே ஸ்டேஷன்.)

* வடுவூர்.* இதுவும் ஆழ்வார் பாடல் பெற்ற திவ்ய தேசமன்றாகிலும் இங்கு பரம ஸுந்தரமான இராமபிரான் திருக்கோலம் ஸேவிக்கத்தக்கது. மன்னார் குடிக்கு 10 மைல் தூரத்திலுள்ளது.

* தில்லைவிளாகம் * என்கிற க்ஷேத்திரமும் ஸேவிக்கத் தக்கது. .... *

## 53. ஆதனூர்

திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். (கும்பகோணத்திலிருந்து சுவாமிமலை வழியாய் 5 மைல் தூரத்திலுள்ளது.) .... .... ... *

## 54. புள்ளம்பூதங்குடி

சக்ரவர்த்தி திருமகன் ஸன்னிதி. திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (சுவாமிமலையிலிருந்து 3 மைல்,) ... .... .... *

## 55. கபிஸ்தலம்

திருமழிசையாழ்வார் மங்களாசாஸனம். (கும்பகோணம் தஞ்சாவூர் இடையில் பாபநாசம் ஸ்டேஷனிலிருந்து 2 மைல்.) * ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்.*

## 56. கூடலூர்

ஆடுதுறைப் பெருமாள்கோயில் என வழங்கும். திருமங்கையாழ்வார் ஒரு பதிகம் பாடியுள்ளார். (நெ. 55 கபிஸ்தலத்திலிருந்து மேற்கே 3 மைல்.) .... *

## 57. தஞ்சைமாமணிக்கோயில்

(தனித்தனியாக மூன்று ஸன்னிதிகள் உள்ளன.) பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். (தஞ்சாவூர் ஸ்டேஷன்.) .... ... *

## 58. கண்டியூர்

அரன்சாபம் தீர்த்த பெருமாள். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். (தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து திருவையாறு (Tiruvadi) வழியில் 6 மைல் தூரத்திலுள்ளது.) .... .... ... .... ... *

## 59. திருப்பேர்நகர்

அப்பக்குடத்தான் ஸன்னிதி யென்றும் கோயிலடி யென்றும் வழங்கும். திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் பதிகம் பாடியுள்ளார்கள். (லால்குடி ஸ்டேஷனிலிருந்தும் ஸ்ரீரங்கத்திலிருந்தும் செல்லலாம்.) .... *

### 60. அன்பில்

திருமழிசையாழ்வார் மங்களாசாஸனம். (லால்குடி ஸ்டேஷனிலிருந்து 5 மைல். நெ. 59 திருப்பேர் நகரையும் இதையும் ஒருங்கே ஸேவிக்கலாம். .... *

### 61. ஸ்ரீரங்கம்

உலகமறிந்த புகழ்படைத்த இத்தலத்தைப்பற்றி என்ன எழுதுவது. ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் மங்களாசாஸனஞ் செய்த தலம். ஸகல ஆசாரியர்களும் படுகாடு கிடந்த ஸ்தலம். (ஸ்ரீரங்கம் ஸ்டேஷன்.) ... *

### 62. உறையூர்

'கோழி' என்கிற பெயரால் திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். திருப்பாணாழ்வார் திருவவதார ஸ்தலம். (திருச்சிக் கோட்டை ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல்.) .... .... ... .... .... ... *

### 63. கரம்பனூர்

உத்தமர்கோயில் என்பது இதுவே. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். ஸ்ரீரங்கத்திலிருந்து திருவெள்ளறைக்குப் போகும் வழியிலே 3 மைலில் உள்ளது ) *

### 64. திருவெள்ளறை

புண்டரீகாக்ஷப் பெருமாள். உய்யக்கொண்டார் எங்களாழ்வான் இவர்களின் திருவவதார ஸ்தலம். பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். இருவரும் பதிகம் பாடியுள்ளார்கள். (ஸ்ரீரங்கத்திலிருந்து 10 மைல்.)

— ஆக இவ்வளவும் சோழநாட்டுத் திருப்பதிகள். — ... *



## பாண்டிநாட்டுத் திருப்பதிகள் 18

### 65. தென்மதுரை

திருக்கூடல் என்கிற பெயரால் திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். (மதுரை ஸ்டேஷன்.) ... .... .... ... ... *

### 66. திருமோகூர்

காளமேகப்பெருமாள். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் பதிகம் பாடியுள்ளார். (மதுரையிலிருந்து 7 மைல் ) .... *

### 67. திருமாலிருஞ்சோலை

இது அழகர்கோயில் என்றும், கள்ளழகர் ஸன்னிதி யென்றும் வழங்கும். பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பல பதிகங்கள் பாடியுள்ளார்கள். (மதுரையிலிருந்து பஸ் மார்க்கம் 12 மைல்.) .... .... ... .... .... *

## 68. திருமெய்யம்

திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். (திருச்சி மானாமதுரை லயனில் திருமயம் ஸ்டேஷன் புதுக்கோட்டை யிலாகா.) .... .... ... *

## 69. திருக்கோட்டியூர்

ஸௌம்யநாராயணப் பெருமாள். திருக்கோட்டியூர் நம்பிகளின் திருவவதார ஸ்தலம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பதிகம் பாடியுள்ளார்கள். (மானாமதுரை, சிவகங்கை, காரைக்குடி, கல்லல் முதலிய பல விடங்களிலிருந்து செல்லலாம். பஸ் மார்க்கம்.) .... .... *

## 70. திருப்புல்லாணி

திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம். பதிகம் பாடியுள்ளார். திருவணையாத்திரையில் ஸேவிக்க வேண்டிய பெருமாள். (ராமநாதபுரத்திலிருந்து 6 மைல்.) ... .... .... .... ... ப

## 71. திருத்தண்கால்

திருத்தாங்கல் எனத் தவருக வழங்குவர். பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். (சிவகாசி ஸ்டேஷனிலிருந்து 2 மைல், ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸமீபம்.) .... ... .... .... .... *

## 72. ஸ்ரீ வில்லிபுத்தூர்

வடபெருங்கோயிலுடையான் ஸன்னிதி மிக அற்புதமானது. பெரியாழ்வார், ஆண்டாள் மங்களாசாஸனம். அவ்விருவருடையவும் திருவவதார ஸ்தலம். (விருதுநகர் தென்காசி லயனில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்டேஷன்.) ... .... *

# ஆழ்வார் திருநகரியும், நவதிருப்பதிகளும்

## 73. திருக்குருகூர்

இதுவே ஆழ்வார் திருநகரி என்பது. பொலிந்து நின்றபிரான் ஸன்னிதி. நம்மாழ்வார், மணவாளமாமுனிகள் திருவவதார ஸ்தலம். நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம். ஒரு பதிகம் பாடியுள்ளார். (ஆழ்வார் திருநகரி ஸ்டேஷன். திருநெல்வேலியிலிருந்து பஸ் மார்க்கமுமுண்டு.) .... ... ... *

## 74. திருக்கோளூர்

வைத்தமாநிதிப் பெருமாள். மதுர கவிகளின் திருவவதார ஸ்தலம். நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம் ஒரு பதிகம் பாடியுள்ளார். .... ... *

## 75. துலைவில்லி மங்கலம்

இங்கே தேவபிரான் ஸன்னிதியும் அரவிந்த லோசனன் ஸன்னிதியுமாக இரண்டு ஸன்னிதிகள் இருப்பதனால் இரட்டைத் திருப்பதி யென்றே இத்தலம் வழங்கும். நம்மாழ்வார் மங்களாசாஸனம், ஒரு பதிகம். .... ... *

## 76. தென் திருப்பேரை

நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம். ஒரு பதிகம். ... .... *

## 77. திருக்குளந்தை

பெருங்குளம் என்றே வழங்கும். நம்மாழ்வார் மங்களாசாஸனம். துண்டுப்பாசுரம்.

## 78. ஸ்ரீ வைகுண்டம்

கள்ளப்பிரான், நம்மாழ்வாருடைய மங்களா சாஸனம். துண்டுப் பாசுரம். (ஸ்ரீவைகுண்டம் ஸ்டேஷன்.) .... ... .... .... *

## 79. வரகுணமங்கை

நத்தம் என வழங்குவர். நம்மாழ்வார் மங்களாசாஸனம் துண்டுப் பாசுரம்.

## 80. திருப்புளிங்குடி

மிக ஆச்சரியமான சயனத்திருக்கோலம். நம்மாழ்வார் மங்களாசாஸனம். பதிகம். (ஆக இந்த நவதிருப்பதிகளையும் ஆழ்வார் திருநகரியைச் சுற்றி ஸேவிக்க.

## 81. சிரீவரமங்கை

வானமாமலை யென்பது இதுவே. நாங்குனேரியென வழங்குவர். தெய்வ நாயகப் பெருமாள், தோதாத்ரிநாதன். நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (திருநெல்வேலியிலிருந்து 20 மைல் பஸ் மார்க்கம். ... .... *

## 82. திருக்குறுங்குடி

திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். நம்மாழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் இரண்டு பதிகமும் பாடியுள்ளார்கள். வானமாமலையிலிருந்து 8 மைல் தூரத்திலுள்ளது. சேர்மாதேவி ஸ்டேஷனிலிருந்தும் செல்லலாம் 18 மைல் பஸ். .... *

— பாண்டிநாட்டுத் திருப்பதிகள் முற்றுப் பெற்றன. —

# இனி மலைநாட்டுத் திருப்பதிகள் 13

## 83. திருவண்பரிசாரம்

திருப்பதிசாரமென வழங்குவர். நம்மாழ்வாரின் திருத்தாயாரான உடைய நங்கையார் அவதரித்த தலம் இதுவே. நம்மாழ்வாருடைய மங்களாசாஸனம். (நாகர்கோவில் சமீபம் பஸ் மார்க்கம்.) ... ... ... ... *

## 84. திருவாட்டாறு

நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (திருவனந்தபுரம் பஸ் மார்க்கம்.)

## 85. திருவனந்தபுரம்

(அனந்தசயனம்) நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (திருவநந்தபுரம் ஸ்டேஷன்.) * ஜநார்த்தனம் * இது ஆழ்வார் பாடல்பெற்ற ஸ்தலமன்றுகிலும் மிகச் சிறந்த புராண ஸ்தலம். (வற்கலா ஸ்டேஷன்.) .... ... *

## 86. திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு

நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (திருவநந்தபுரம் கொல்லம் லயனில் கொட்டாரகரா என்கிற ஸ்டேஷனில் இறங்கி பஸ் மார்க்கம் சென்று இந்த திவ்ய தேசத்தையும் மேலுள்ள ஐந்து திவ்ய தேசங்களையும் ஸேவிப்பது.)

## 87. திருவண்வண்டூர்

நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (இது நெ. 86 திவ்ய தேசத்திலிருந்து 5 மைல்.) பஸ். ... ... ... ... *

## 88. திருவாறன்விளை

ஆரம்முளையென வழங்குவர். நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (நெ. 86 திவ்ய தேசத்திலிருந்து 7 மைல்.) பஸ். .... ... ... *

## 89. திருவல்லவாழ்

திருவல்லாய் என வழங்குவர். நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் ஒவ்வொரு பதிகம் பாடியுள்ளார்கள். (நெ. 87 திவ்யதேசத்திலிருந்து 4 மைலிலுள்ளது.) பஸ். ... .... ... ... ... .... *

## 90. குட்டநாட்டுத் திருப்புலியூர்

நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். நம்மாழ்வார் மாத்திரம் ஒரு பதிகம். (நெ. 86 திவ்ய தேசத்திலிருந்து தெற்கே 3 மைல்.) பஸ். *

## 91. திருக்கடித்தானம்

நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (நெ. 89 திவ்ய தேசத்திலிருந்து செங்கனூஞ்சேரி வழியாய் 7 மைல்.) பஸ். ... .... ... *

## 92. திருக்காட்கரை

நம்மாழ்வார் மங்களாசாஸனம். ஒரு பதிகம். (ஏரணுகுளம் ஷோரனூர் லயனிலுள்ள இடைப்பள்ளி ஸ்டேஷன்.) வண்டி மார்க்கம். ... .... *

## 93. திருமூழிக்களம்

நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். நம்மாழ்வார் ஒரு பதிகம். ஏரணுகுளம் ஷோரனூர் லயனிலுள்ள அங்கமாலி ஸ்டேஷனிலிருந்து 7 மைல் போகவேணும்.) வண்டிமார்க்கம். .... .... .... *

## 94. திருவித்துவக்கோடு

திருமிற்றக்கோடு என வழங்குவர். குலசேகராழ்வார் மங்களாசாஸனம் ஒரு பதிகம். (ஷோரனூர் ஸமீபத்திலுள்ள பட்டாம்பி ஸ்டேஷனிலிருந்து 2 மைல்.) கால்நடை. ... ... ... ... ... ... *

## 95. திருநாவாய்

நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம். [கள்ளிக்கோட்டை லயனில் எடகோலம் ஸ்டேஷ்னிலிருந்து ஒரு மைல்.)

குலசேகராழ்வாருடைய திருவவதார ஸ்தலமான திருவஞ்சிக்களம் என்னுமூர் திருச்சூர் ஸமீபத்தில் இரிஞாலகுடா ஸ்டேஷன் வழியாய்ச்சென்று ஸேவிக்கத் தக்கதென்பர். அஞ்சைக்களம் என வழங்குவர். மலைநாட்டுத் திருப்பதிகள் விஷயமாக நமது பெரிய வெளியீடு மொன்றுண்டு காணத்தக்கது. .... *

— மலைநாட்டுத் திருப்பதிகள் முற்றும். —

# வடநாட்டுத் திருப்பதிகள்

வட இந்தியாவில் ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்ய தேசங்கள் [அர்ச்சாவதார ஸன்னிதிகள்] இல்லையாயினும் அவர்கள் உகந்தருளின க்ஷேத்ரங்களும் தீர்த்தங்களும் பல இருக்கின்றன. அவை தவிர புராண ஸ்தலங்களும் பல இருக்கின்றன. அவற்றைப்பற்றி விரிவாகவே கீழே யெழுதியாயிற்று. நூற்றெட்டுத் திருப்பதிகள் என்கிற கோர்வையில் சேர்ந்த ஸ்தலங்களை மாத்திரம் சுருக்கமாக இப்போது இங்கே தெரிவிக்கிறோம்.

## 96. திருவேங்கடம்

(திருமலை திருப்பதி.) இத்தலம் தொண்டரடிப்பொடியாழ்வாரொருவர் தவிர மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. உலகமெல்லாமறிந்த வைபவம் பொருந்திய இத்தலத்தின் பெருமையைப்பற்றி இங்கு நாம் அதிகமாக எழுதவேண்டிய அவசியமுமில்லை. இவ்விடத்தில் ஸ்ரீமத் பெரிய ஜீயர் ஸ்வாமி மடம், சின்ன ஜீயர் ஸ்வாமி மடம், பரகால ஸ்வாமி மடம், அஹோபிலமடம் முதலிய ஸ்ரீ வைஷ்ணவ மடங்கள் ஸ்வாமிகளுக்கு வஸதி ஸௌகரியமளிப்பவை. இவை தவிர ஆசார்ய புருஷர்களும் ராஜாக்களும் ஸேட்டுகளும் வைசியர்களும் பாகவதர்களும் ஏற்படுத்தியுள்ள திருமாளிகைகளும் தர்ம சாலைகளும் ராமாநுஜ கூடங்களும் ஸாதாரண ஜனங்களுக்கு உபயோகப் படுமவை. தேவஸ்தான அதிகாரிகளாலும் பல விடுதிகள் ஏற்பட்டிருக்கின்றன. லௌகிகர்களான மஹான்கள் தேவஸ்தான அதிகாரிகளுக்குத் தெரிவித்து ஷ விடுதிகளில் விசேஷ ஸௌகரிய மடைகிறார்கள்.

* கீழ்த்திருப்பதி. திருவேங்கட மலையின் அடிவாரத்திலுள்ள ஸ்தலம் இது. திருப்பதி கிழக்கு (Tirupati East) என்கிற ரைல் ஸ்டேஷனுக்கு ஒரு பர்லாங்கு தூரத்திலுள்ள ஸ்ரீ கோவிந்தராஜன் ஸன்னிதியே இத்தலம். இது நூற்றெட்டுத் திருப்பதிகளில் சேர்ந்த தன்றாகிலும் திருமலைக்கு சேஷ பூதமான ஸன்னிதியென்று நெடு நாளாகவே ஆதரிக்கப்படுகின்றது. எமபெருமானார் காலத்தில் தில்லைத் திருச்சித்திரகூடத்திலிருந்து ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் இவ்விடத்திற்கு எழுந்தருளச் செய்யப்பட்டாரென்பர். இது காரணமாகவே இத்தலத்தில் நாடோறும் மாலையில் தோமாலை ஸேவையில் * வாடமருதிடை போகி * (பெரிய திருமொழி 3—3.) என்கிற தில்லைத் திருச்சித்திர கூடப்பதிகம் ஸேவிக்கப்படுகிறது. இங்கும் ஜீயர் ஸ்வாமிகளின் மடங்கள் தேவஸ்தான தர்மசாலைகள் வஸதி ஸௌகரியமளிப்பவை.

* திருச்சுகனூர். (திருச்சானூர்) இது அலர்மேல்மங்கைத் தாயாருடைய திவ்ய க்ஷேத்திரம். கீழ்த் திருப்பதியிலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள தலம் இது. மிகப் பெரிய புஷ்கரிணியும் ஸுவர்ண முகரி மஹா நதியும் இங்கு உண்டு. மடங்களும் சத்திரங்களுமுண்டு. திருமலை திருப்பதி ஸேவிக்க வருமவர்கள் யாவரும் இத்தலம் ஸேவிப்பது நியதம்.) சுகமகர்ஷி தவம்புரிந்து ஸித்திபெற்ற தலமாதலால் இதற்கு சுகபுரி என்று பெயராயிற்று. அது தமிழில் திருச்சுகனூராயிற்று. அதுவே திருச்சானூர் என்றும் சிரதானூரு என்றும் திரிபான வழக்கம் பெற்றது. ... *

## 97. அஹோபிலம்

(சிங்கவேள் குன்றம்) இது மிகச் சிறந்த ந்ருஸிம்ஹ க்ஷேத்ரம். திருமங்கையாழ்வாரால் பத்துப் பாசுரங்களினால் மங்களா சாஸனம் செய்யப் பெற்ற தலமிது. [பெரிய திருமொழி 1—7. *அங்கண் ஞாலமஞ்ச* என்கிற பதிகம் காண்க.] இத்தலத்தைப் பாடிய அவ்வாழ்வார் "தெய்வமல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேழ் குன்றமே" என்றதனால் இங்குச் சென்று ஸேவிப்பது மனிதர்களுக்கு மிக அருமையென்பது தெரியவரும். உண்மையில் மிகவும் சிரமப்பட்டே ஸேவிக்க வேண்டிய ஸ்தலமிது. இக்காலத்தில் சிறிது ஸௌகரியமுண்டு என்று சொல்லலாம். "மதராஸ்—பாம்பே" ரைல் பாதையில் கடப்பை Cuddapah ஸ்டேஷன் (ஆள்ளகெட்ட) வழியாக மோடார் பஸ்ஸிலும் பிறகு மாட்டு வண்டியிலும் சென்று சேரலாம்.



திருநாராயணபுரம். (மேல் கோட்டை) இத்தலம் எம்பெருமானார் காலம் முதல் மிகவும் சிறப்புற்றோங்கி விளங்கும் திவ்ய க்ஷேத்ரம். யாதவாத்ரி யென்று ப்ரஸித்தி பெற்றது இது. மூல மூர்த்தி-திருநாராயணப் பெருமாள். உத்ஸவமூர்த்தி-செல்வப்பிள்ளை. (யதிராஜஸம்பத் குமாரர்.) இந்த க்ஷேத்ரத்தை உத்தரிக்க ஸ்ரீ யதிராஜர் மிகப் பாடுபட்ட இதிஹாஸங்கள் அறியத்தக்கன. இதன் ஸமீபத்தில் ஸ்ரீரங்கபட்டணம் தொண்டனூர் ஸாளக்ராமம் முதலானவைகளும் விசாரித்து ஸேவிக்கத் தகுந்தவை.

"பெங்களூர்—மைஸூர்" ரைல் பாதையில் பாண்டவபுரம் என்னும் ஸ்டேஷனிலிருந்து மோட்டார் பஸ் மூலமாக (18 மைல் தூரத்தில்) அடையலாம். திருக்கல்யாணி முதலிய பல தடாகங்களும் ஏரியும் உள்ளன. மடங்களும் தர்மசாலைகளுமுண்டு.

98. துவரை—(த்வாரகை பெரியாழ்வார், ஆண்டாள்.

99. வட மதுரை—நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்.

100. ஆய்ப்பாடி—(கோகுலம்) பெரியாழ்வார், ஆண்டாள்.

101. விருந்தாவனம்—ஆண்டாள்.

102. அயோத்தி—பெரியாழ்வார், குலசேகராழ்வார்.

103. நைமிசாரணியம்—திருமங்கையாழ்வார் பதிகம்.

104. கண்டமென்னுங் கடிநகர்—தேவப்ரயாகை) பெரியாழ்வார் பதிகம்.

105. பிரிதி—(ஜோஸிமடம்) திருமங்கையாழ்வார் பதிகம்.

106. வதரி—(பதரிகாச்ரமம்) பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் பதிகம்.

107, சாளக்கிராமம்—பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் பதிகம்.

108. கோவர்த்தனம்—ஆண்டாள், பெரியாழ்வார் பதிகம்.

திருநாட்டை நூற்றெட்டாவது திருப்பதியாகக் கொள்வர்.

Released by Maran's Dog ,Toronto, Canada

வடதென்னுட்டுத் திருப்பதி யாத்திரை முற்றிற்று.